


குதூகலம் கொண்டாடுவோம்—
லைப்பாய் சோப்பினால் நீராடுவோம்...
ஆஹாஹா, கிளுகிளுக்கும்
உல்லாச நலம்... 'எல்லாம் இன்ப மயம்!'
அழுக்கிலுள்ள கிருமிகளைக் கழுவிக்
களைவது லைப்பாய்; குடும்ப முழுமைக்கும்
குன்றாத சுக வாழ்வு!

# லைப்பாய் இருக்குமிடம்
# அதுவே ஆரோக்கியம் இருக்குமிடம்

L.26-X29 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

பிலவ, புரட்டாசி 29

கல்கி

அக்டோபர் 15, 1961



# பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.







மலர் 21 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 11

# உண்மை சுதந்திரத்தை உருவாக்குவோம்

ராஜாஜி

வெற்றி பெறுவேனா, தோல்வியாகுமா என்று பலனில் நினைவைச் செலுத்தாமல் எது செய்ய வேண்டியதோ அதைச் செய்வதே யோகம் என்று விளக்கினான் கீதாசாரியன். இப்படிப் பலனைக் கருதாமல் பணி புரிந்து அதனால் ஏற்படும் மன மகிழ்ச்சியை நீங்கள் அநுபவித்ததுண்டா? இந்த மனநிறைவை நீங்கள் அடைவதற்கு இப்போது ஒரு சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. பணப் பெருக்காலும் அதிகாரச் செருக்காலும் போதையடைந்திருக்கும் காங்கிரஸ் கட்சியை எதிர்த்துத் தொடங்கப்பட்டுள்ள தரும யுத்தத்தில் உங்களுடைய பங்கை எடுத்துக் கொண்டு சிறிய அளவிலேனும் உங்கள் கடமையைச் செய்தீர்களானால் இந்த மகிழ்ச்சியையும், மனநிறைவையும் நீங்கள் அடைவீர்கள்.

உங்களால் முடிந்ததைச் செய்ய வேண்டியதே உங்கள் கடமை. காங்கிரஸின் ஏமாற்றுப் பேச்சைக் கேட்டு மயங்கக்கூடியவர்கள் இவ்வளவு பேர் இருக்கிறார்களே, இந்த மாயச் செல்வாக்கை நாம் எப்படி முறியடிக்க முடியும் என்று அஞ்சினால் கடமையில் தவறியவராவீர்கள். தங்கள் மனோதிடத்தை இழந்து, காங்கிரஸின் மந்திரஜாலத்துக்கு இவ்வளவு பேர் வசியமாகி விட்டார்கள் என்பதால் நீங்களும் அந்தக் கோஷ்டியில் சேரலாமா? அப்படிச் செய்தால் அதன் பின் நீங்கள் என்ன புகழ் காணப் போகிறீர்கள்? அந்த வாழ்வில் அமைதிதான் ஏது? ஆனபடியால் வாளாவிருந்து உங்கள் மனமொப்பாத சர்வாதின ஆட்சியில் இந்த நாடு மேலும் முழுகிப் போவதற்கு இடம் கொடுத்து விடாதீர்கள்.

அநாதி காலமாக இந்த நாட்டு மக்கள் அனைவர் மனத்திலும் பதிந்து வேர் ஊன்றி வந்த தருமமானது அழிந்து விடாமல் பார்த்துக்கொள்ள வேண்டியது நம்முடைய கடமை. பணப் பேயானது தருமத்தை அழிக்கும்போது அதை உதாசினமாகப் பார்த்துக் கொண்டிருக்கும் வீரியமற்ற வாழ்க்கை நமக்கு வேண்டாம். தரும விரோதமான ஒரு கூட்டம் நம்முடைய புனித பண்பாடுகளை நாசம் செய்து வருகிறது என்று நிச்சயமாகத் தெரிந்து கொண்ட பின் மற்றவர்கள் என்ன செய்கிறார்கள் என்று ஏன் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும்? 'அவர்கள் எப்படியாவது போகட்டும், என்னைப் பொறுத்த மட்டும் தருமத்துக்கே வோட்டுப் போடுவேன்' என்று ஒவ்வொருவரும் முடிவு செய்து கொள்ள வேண்டும். அறத்துக்கும், ஆத்ம விடுதலைக்கும் உங்கள் வோட்டுரிமை பயன்படட்டும். மக்களுடைய எல்லா அலுவல்களுக்கும் ஒரு - கட்சி - அரசாங்கத்தையும் சர்க்கார் அதிகாரிகளையும் எஜமானர்களாக்க வேலை செய்துவரும் ஒரு கட்சிக்கு, நாட்டில் தனிப்பட்டவர்களின் சுதந்திர தரும சிந்தனையையும், கருணை உணர்ச்சியையும் சிதைத்து எல்லாம் அரசாங்கமே செய்ய வேண்டும் என்று திட்டம் போட்டிருக்கும் ஒரு கட்சிக்கு, உங்கள் வோட்டைக் கொடுத்து அவர்கள் அடையும் வோட்டுக் குவியலைப் பெருக்கலாமா என்பதை எண்ணி ஆலோசித்துத் தைரியமாக முடிவு செய்யுங்கள்.

மக்கள் எல்லோரும் ஒரே போலத்தான் எண்ணமிட வேண்டும், ஒரேவிதமான நம்பிக்கைகளையே கடைப்பிடிக்க வேண்டும் என்று மக்களின் மூளைகளையும் தம் வசமாக்கப் பார்க்கிறது இந்தக் காங்கிரஸ் கட்சி. புற நடவடிக்கைகள் மட்டுமல்ல, உள்ளத்தில் கருத்துக்களும் அடிமைப்படவேண்டும் என்று திட்டம் போடுகிறது காங்கிரஸ் ஆட்சி. ஒவ்வொரு மனிதனுக்கும் உரிய தனிப்பட்ட குண விசேஷங்களையெல்லாம் அழித்து ஒரு

சமனுக்குவதே அதன் இலட்சியம். சர்க்கார் ஒன்றே எல்லா மக்களுக்காகவும் எண்ணமிடவும், பேசவும், செயல் புரியவும் வேண்டும் என்பதே அதன் ஏற்பாடு. இந்த சர்வாதிகாரத்தை எதிர்ப்பதற்காகத்தான் சுதந்திரக்கட்சி.

இந்தத் தேர்தலில் சுதந்திரக்கட்சி அடையும் வெற்றி – தோல்வியோடு இந்தச் சுதந்திர இயக்கம் முடிந்து போகிற விஷயமல்ல. பூரண சுதந்திரம் ஸ்தாபிக்கும் வரையில் இடையருது போரிட வேண்டும் என்று திடமாகச் சங்கற்பம் பூண்டிருக்கும் ஒரு விடுதலை இயக்கத்தின் பூர்வாங்க முயற்சிதான் இது. 1962-ம் ஆண்டில் நடக்கப் போகும் தேர்தல் இந்த சர்வாதின எதிர்ப்புப் போராட்டத்துக்கு துவஜாரோகணம். இந்த யுத்தத்தில் முன்னணியில் நின்று நீங்கள் போர் புரிவீர்களாக! பலனைக் கருதாமல் இந்தப் பணியைப் புரிவீர்களாக!

நேர்மையான முறையில் சேர்த்த சொத்தைப் பறிமுதல் செய்வதை நீங்கள் விரும்பவில்லையானுல், அது அநீதி என்று நீங்கள் வெறுத்தீர்களானுல் போரில் சேருங்கள். சுதந்திரக் கட்சிக்கு உங்கள் வோட்டுகளைத் தாருங்கள்.

நஷ்டஈடு தருவதாக வேஷம் போட்டுச் செய்யப்படும் மோசடியை நீங்கள் வெறுத்தீர்களானுல், உதாசீனம் செய்து மௌனமாக இருக்காதீர்கள். இந்த மோசடியை அழிக்க உங்கள் கையில் ஓர் ஆயுதம் இருக்கிறது. ஒரே ஒரு வோட்டுத்தானே என்று பாராமல் அந்த ஆயுதத்தைத் தைரியமாகப் பிரயோகியுங்கள்.

ஆலைத் தொழில் துறையை ஒழுங்கு செய்யும் பாவனையில், தங்களுக்கு வேண்டியவர்களுக்கு ஏகபோக உரிமை அளித்து அவர்களிடம் செல்வத்தைக் குவிக்கும் காங்கிரஸின் போக்கை நீங்கள் வெறுக்கிறீர்களா? அப்படியானுல் அதைக் கண்டியுங்கள். உங்களுடைய கண்டனம் வோட்டுச் சீட்டில்தான் இருக்கிறது.

பர்மிட்டும் லைசென்சும் தாண்டவமாடும் இந்த ஆட்சி முறை அழிய வேண்டும் என்று ஆசைப்படுவீர்கள். அந்த ஆசையை மனத்தோடு மட்டும் வைத்துக் கொண்டிராதீர்கள். காங்கிரஸ் கட்சிக்கு வோட்டளிக்காமல், சுதந்திரக் கட்சிக்கு உங்கள் ஆதரவைக் கொடுத்தீர்களானுல் உங்கள் ஆசை பலிதமாகும்.

விலைவாசிகள் இறங்கினுல்தான் மக்களுக்கு நல்லது, வரிகள் குறைந்தால் தான் நாட்டுக்கு நன்மை ஏற்படும் என்று நீங்கள் நம்பவில்லையா? அப்படியானுல் யாருக்கு வோட் அளிக்கக் கூடாது என்பது நிச்சயமாகிப் போன சமாசாரம். இந்தத் தேர்தலில் காங்கிரஸுக்கு நீங்கள் பட்டா புதுப்பித்துக் கொடுத்து விட்டீர்களானுல் அது விலைவாசி உயர்வுக்கும், வரிச் சுமை அதிகரிப்புக்கும் அனுமதி அளித்ததாகத் தான் அர்த்தம்.

ஐந்தாண்டுத் திட்டங்களைக் காட்டித் தான் காங்கிரஸ் வோட்டுக் கேட்கிறது. பதினைந்து ஆண்டுகளுக்குத் திட்டம் போட்டாயிற்று. இன்னும் பதினைந்து ஆண்டுகளுக்குத் திட்டம் தயாராக இருக்கிறது. அதற்குப் பின்னும் திட்டங்கள் வரும் என்கிருர்கள். சர்க்காரிடம் சர்வாதிகாரத்தைத் திரட்டித் தரும் ஏற்பாடு இது. வெளிநாட்டுச் சர்க்கார்களைச் சாசுவதமாக அண்டிப் பிழைக்கும் நிலையை உண்டாக்குகிறது இந்தத் திட்டம். திட்டம் வகுக்கும் காங்கிரஸ் சர்க்கார் நம்முடைய பொருளாதாரம் நிலைபெறுவதற்கு வெளி நாடுகளையே முழுதும் நம்பியிருக்கிறது.

அந்நிய நாடுகளினின்று வரும் உதவியானது பனிப் போர் கடும் போராக மூளாத வரையில்தான் கிடைக்கும். யுத்தம் என்று ஏற்பட்டு விட்டால் எந்த வல்லரசும் நம்முடைய பொருளாதாரத்தைப் பற்றிச் சிறிதும் கவலை காட்டாது. அவர்களால் நமக்கு ஏதும் அனுப்ப முடியாது. அப்போது இந்தத் திட்டமெல்லாம் சிதறிப் போக வேண்டியதுதான். பனிப் போர் நடைபெற்றுக் கொண்டேயிருக்கும்; அதை உபயோகப்படுத்திக் கொண்டு இரண்டு வல்லரசுக் கோஷ்டிகளிடமிருந்தும் யாசகம் பெறலாம் என்று ஆளும் கட்சி எண்ணலாம். எதிர்க் கோஷ்டிகள் இரண்டிடமிருந்தும் உதவி பெறுவதற்காக நடுநிலைமை என்ற தந்திரோபாயத்தைப் பின்பற்றுவது காந்திஜியின் உபதேசத்துக்குச் சிறிதேனும் பொருந்துமா? நாம் நடுநிலைமை வகித்தால் அந்தக் கொள்கையின் சிறப்புக்காகவே அப்படிச் செய்வோம். யார் தயவையும் நாடாமல் துணிச்சலோடு நடுநிலைமையைக் கடைப்பிடிப்போம். படாடோபமின்றி அடக்கமாக இருப்போம். அதைத்தான் காந்திஜி விரும்புவார். நம் பொருளாதாரத்தை நாமே நிர்ணயிக்கும் முறையில் அடக்கமான அபிவிருத்தித் திட்டங்கள் போட்டு, நிதானமாக முன்னேற்றம் காண்போம். திட்டம் என்ற பெயரில் வியர்த்தமான, விவேகமற்ற அசட்டுச் சாகஸங்கள் செய்வதை விடுவோமாக.

இந்தத் திட்டங்களுக்காக வாங்கும் கடன் தொகை பிரம்மாண்டமானது. திருப்பித் தர முடியாத அளவுக்குக் கடன் வாங்கி, இந்தியாவைத் திவாலா

## தன் வினை தன்னைச் சுடும்




கும் ஒரு தேசமாக்கக் கூடாது. காந்திஜி கூறியபடி இந்தத் தேசம் தன்மான உணர்ச்சியை என்றும் காப்பாற்ற வேண்டும் என்று நீங்கள் கருதினால் சுதந்திரக் கட்சிக்குத்தான் பலம் கொடுக்க வேண்டும்.

பொருளாதாரத்தைச் சீர்குலைப்பதோடு காங்கிரஸ் ஆட்சி நின்றுவிடவில்லை. அது மனிதனுக்கு ஆன்மா என்று ஒன்று உண்டு என்றே எண்ணவில்லை. உடம்பைப் பேணுவதோடு எல்லாம் முடிந்து விடுகிறது என்பது அதன் சித்தாந்தம். இது பயங்கரமான விஷயம். மக்களில் சிலர் நாஸ்திகர்களாக இருப்பதால் அவ்வளவு தீமை இல்லை. ஆனால் நாட்டு விவகாரம் முழுவதையும் நிர்ணயம் செய்யும் அரசாங்கம் நாஸ்திகமாக இருந்துவிட்டால் அது இலேசான விஷயமல்ல. ஆன்மீகத்திலும், ஆன்ம நாட்டம் ஈடேறுவதற்கு உடல் ஒரு கருவியே என்றும் நம்புகிறவர்களிடம்தான் ஆட்சி இருக்க வேண்டும் என்று விரும்புவோர் எந்த மதத்தில் இருந்தாலும் சரி, அவர்கள் மீண்டும் காங்கிரஸுக்கு அனுமதிச் சீட்டு தரக் கூடாது; சுதந்திரக் கட்சி ஒன்றுதான் அவர்களுடைய அபிலாஷைகளை நிறைவேற்றும்.

மீண்டும் எச்சரிக்கிறேன்: காந்திய முக்காடு போட்டுக் கொண்டு கம்யூனிஸத் திட்டங்களை ஒப்புக் கொண்டு வேலை செய்யும் காங்கிரஸ்வாதிகளின் சண்டப் பிரசண்டமான ஏமாற்றுப் பேச்சுக்கு மயங்கி விடாதீர்கள்.

இன்று ஆட்சி செலுத்தும் கோஷ்டியானது தன் அதிகாரத்தைப் பிரயோகித்துப் பிறர் ஆட்சிப் பொறுப்பை அண்ட முடியாதபடி செய்து இந்த நாட்டில் சாசுவதமாக ஏகாதிபத்தியம் செலுத்த எண்ணுகிறது.

இந்தக் கோஷ்டியிடம் தனி மனிதனின் ஆற்றலையும், தன்னம்பிக்கையையும் பறிகொடுத்து விட்டோமானால் பிறகு இந்த நாட்டில் காப்பாற்ற வேண்டிய பொருள் எதுவுமே கிடையாது. தனி மனிதனுடைய ஆற்றல் அழிந்தால் பிறகு சமூகத்துக்கு ஆற்றல் ஏது? பாரத சமுதாயத்தின் ஆற்றல் அந்தச் சமுதாயத்திலுள்ள மக்களுடைய தனி ஆற்றல்கள் ஒன்று கூடினதேயாகும். மணிகள் அழிந்தால் பிறகு மாலை ஏது?

வந்த சுதந்திரம் அழிந்து போயிற்று. சுதந்திரத்தை மறுபடியும் சம்பாதிக்க வேண்டும். அதுவே தற்போது நம்முடைய முயற்சி.

# மதுரை 'மகா' நாடு

'மகா' புத்திசாலி என்று ஒருவனைக் குறிப்பிடும்போது அந்த 'மகா'வுக்கு என்ன அர்த்தம் என்பது நாடறிந்த விஷயம். மதுரையில் காங்கிரஸ் கமிட்டி நடத்தி யிருக்கும் 'மகாநாட்டை'ச் சொல் பிரித்தால் அதற்கும் இந்தப் பொருள்தான் கிடைக்கும்.

பிரம்மாண்டமான பந்தல்; பார்க்கப் பார்க்க ஆனந்தமாக இருந்ததாம். பந்தலுக்குள்ளும் பிரம்மாண்டமான பந்தல்; கேட்கக் கேட்க ஆனந்தமாக இருந்ததாம். பின்னால் சொன்னது வாய்ப் பந்தல். ஆனால் இரண்டு பந்தல்களும் விரைவிலேயே பிரிக்கப்படத்தான் போகின்றன. காங்கிரஸின் சொல்லலங்காரத்தைத் தொடர்ந்து செயல் அலங்கோலம் நடைபெறுவது கடந்த சில ஆண்டுகளாக இந்த நாடு கண்டுவரும் உண்மையாகும்.

தேர்தல் விஞ்ஞாபனம்தான் மகாநாட்டில் முக்கிய இடம் பெற்றது. அந்தத் தேர்தல் அறிக்கையின்மீது எட்டு மணி நேரம் வி(தண்டா)வாதம் நடந்தது. ஆனால் திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன. சொன்னதையே திரும்பத் திரும்பப் பாடம் படித்து ஊர்ஜிதம் செய்து கொள்ள இவ்வளவு கால விரயம் செய்வானேன்? 'ஆமாம்' பாட்டுப் பாடுவதைத் தவிர வேறெது செய்தாலும் அதற்குப் பலன் கிடைக்காது என்பதை மறந்த சில பத்தாம் பசலிகள் காங்கிரஸில் இன்னும் இருக்கிறார்கள். இவர்கள் விலைவாசிக் குறைப்பைப் பற்றிப் பேசினார்கள். அந்நியக் கடன்களை அடைப்பது, விலைகளைக் குறைப்பது இந்த இரண்டு விஷயங்களைப் பற்றிக் காங்கிரஸின் மேலிடத்தார் கனவுகூடக் காண மறுப்பவர்கள். தங்களுடைய உறுதியை இந்த மகாநாட்டில் அவர்கள் ஸ்திரப்படுத்திக் கொண்டார்கள். 'மௌனம் சர்ச்சையைத் தீர்க்கும்' என்ற பழமொழியைக் கடைப்பிடித்து விட்டார்கள். ஆனால் 'மௌனம் எப்படியும் அர்த்தம் செய்து கொள்ள இடமளிக்கும்' என்ற இன்னொரு முதுமொழியை வோட்டுப் பெட்டிகள் அவர்களுக்கு படிப்பிக்குமானால் நம் மக்கள் புத்திசாலிகள்தாம்.

திட்டம் பற்றிப் பிரதமர் ஆவேசமாகப் பேசினார். கடைசியில், நான்காவது திட்ட இறுதியில் அநேகமாக எல்லா இடையூறுகளையும் கடந்து விடக் கூடும் என்று சொல்லி வைத்தார். அதாவது இன்னும் பத்தாண்டுகளுக்குப் பின் இங்கு தப்பித் தவறி முன்னேற்றம் ஏற்பட்டு விடக் கூடும் என்று அபயப் பிரதானம் செய்து விட்டார். சுதந்திரம் கிடைத்து இருபத்தைந்தாண்டுகளுக்குப் பின் ஒருகால் சுபிட்சம் ஏற்பட ஏதுவுண்டு என்றபின் மக்கள் வியர்வையையும், இரத்தத்தையும் மேன்மேலும் வடித்தெடுத்துக் காங்கிரசுக்கு வழங்கத் தாமதிக்கலாகுமா?

கல்கண்டையும் திரட்டுப் பாலையும் நினைவுறுத்தும் சீனா, கோவா விஷயத்தில் கடுமையாக நடக்க என்றுமே நேரு சர்க்காருக்கு மனம் வந்ததில்லையல்லவா? எனவே வெளிநாட்டு விவகாரம் பற்றிக் காரசாரமில்லாமல் தீர்மானங்கள் நிறைவேறின.

கடைசியாக, தேசிய ஒருமைப்பாடு. இந்த ஒருமைப்பாடு படும் பாட்டைச் சொல்லி முடியாது. அதை ஏற்படுத்துவதற்காகக் காங்கிரஸ் கூறும் வழிமுறைகள் அதிவிசித்திரமானவை. 'மலேரியாவை ஒழிக்க வேண்டும் என்று கொசுக்கள் மகாநாடு போடுவதுபோலத்தான் காங்கிரஸ்காரர்கள் தேசிய ஐக்கியம் ஏற்படுத்தக் கூட்டம் சேர்ப்பது' என்று ராஜாஜி கூறியது எவ்வளவு உண்மை என்பது வெள்ளிடை மலையாக இப்போது வெளியாயிற்று. சாதி, வகுப்பு, சமயம், மொழி — பூசல்களைப்பற்றியெல்லாம் காரியக் கமிட்டி கூறும்

# நமது எல்லைப்புறப் பாதுகாப்பு

எல்லைப்புறங்களில் பழக்கப்பட்ட பாதைகளுக்கு அப்பால் மலைகளின்மேல் புதுப் புது மலை ரஸ்தாக்கள் துரிதமாக நிர்மாணிக்கப்படுகின்றன. வீரத்திற்குப் பெயர் பெற்ற நமது ராணுவப் படையினர் இம்மாபெரும் புராதன நாட்டின் புனிதமான எல்லைப்புறப் பிரதேசங்களுக்கு உடனுக்குடன் சென்று பாதுகாக்கும் பொறுப்பைச் சிறப்பாக நடத்தவே இந்த ஏற்பாடுகள்.

நாட்டின் தற்காப்புக்கு அத்யாவசியமான உயிர்நாடிகளைப் போன்ற இத்தகைய ஏராளமான பாதைகள் சிமெண்டினாலேயே நிர்மாணிக்கப்படுகின்றன. இக்காலத்தில் கட்டிட சாதனங்களில் அடிப்படையான ஒன்று சிமெண்டு.

இத்தகைய மலை ரஸ்தாக்களை நிர்மாணிப்பதே மலைப்பைத் தரும் சிரமமான பணியாகும். நிர்மாண என்ஜினியர்கள் மிக மிகச் சிறந்த பொருள்களைக் கொண்டே செய்யவேண்டிய பணி.

தரமான நிர்மாண வேலை எதுவாயிருந்தாலும் டால்மியா சிமெண்டையே அநேகமாக எல்லோரும் நாடுகின்றனர்.

## டால்மியா சிமெண்ட் (பாரத்) லிமிடெட்

சமுதாயத்தின் சேவையில் ஈடுபட்ட ஸ்தாபனம்

டால்மியாபுரம் (சென்னை ராஜ்யம்)

தலைமை ஆபீஸ் : 4, சிந்தியா ஹவுஸ், புதுடில்லி–1



போது இவை ஒவ்வொன்றும் காங்கிரசுக்கு எவ்வளவு கடமைப்பட்டிருக்கிறது என்பதும் உடனுக்குடன் பளிச்சிட்டது.

தேசிய ஐக்கியத்தையும் மொழியையும் பிணைத்தே தீர்வு காண முயல்கிறது காங்கிரஸ். 'பொது லிபி கொண்டு வருவோம்; ஆனால் கட்டாயமிருக்காது' என்று கூறினார் நேரு அவர்கள். 'தமிழை இந்தியில் எழுதினால் இந்திப் பகுதிகளில் தமிழ் பரவும்; இந்தியைத் தமிழில் எழுதினால் இங்கு இந்தி பரவும்' என்று தொடர்ந்து கூறினார். அப்படியானால் ஒவ்வொரு மொழியையும் அதற்கென்று இத்தனை நாட்களாக இருந்து வரும் லிபி தவிர மற்றவற்றில் எழுதினால் ஐக்கியம் ஏற்பட்டுவிடும் என்று தோன்றுகிறது. எழுத்துக்களின் தலையெழுத்தை என்னவென்று சொல்ல? எப்படியானாலும் நேருஜியின் அருமைப் புதல்வி ஸ்ரீமதி இந்திராகாந்தி மட்டும் தந்தை சொல்லைக் கேட்காமல் தமிழைத் தமிழிலேயே எழுதி விட்டார். தேசிய ஐக்கியத்தை நிலைநாட்டுவதற்காக ஒரு சீரிய பணியைப் புரிந்து விட்டார்!

தலைவர்களா யிருப்பவர்கள் இந்திய மொழிகள் எல்லாவற்றையும் கற்கவேண்டும் என்பது காங்கிரஸ் அக்கிராஸனர் ஸ்ரீ சஞ்சீவி ரெட்டி அவர்களின் யோசனை. நேருஜிக்கு மட்டும் விலக்களித்து விட்டார். ஏனென்றால் அவர் இதயத்தின் மொழியைக் கற்றவர். ஆக, நேருஜி தவிர மற்ற காங்கிரஸ்காரர்கள் யாரும் இதயத்திலிருந்து பேசுவதில்லை; உதட்டளவில் பேசுவதோடு சரி என்ற உண்மையை அவர்களே ஒப்புக் கொள்கிறார்கள். இதற்கு அத்தாட்சி வேண்டுமானால் பொதுக் காரியதரிசி ஸ்ரீ ஸாதிக் அலியின் பேச்சைக் கவனித்தால் போதும். 'தேர்தல் நிதி போதிய அளவு இல்லாததே நமது பிரச்னை' என்று ஒரு போடு போட்டு விட்டார் அவர்.

முடிவாக, நம் தமிழ் நாட்டில் இந்த அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி மகாநாடு நடந்தது மிகவும் சந்தோஷப்பட வேண்டிய விஷயம். காங்கிரஸ் கூத்தை வேடிக்கை பார்ப்பதற்காகக் கூடியவர்களால் நமது வணிகப் பெருமக்களுக்கு நல்ல இலாபங்கள் கிடைத்தன. பஸ் சர்வீஸ்களுக்கு யோகமடித்தது. (இனி பஸ் பர்மிட் ஒன்றுக்கு ஓராயிரமென்ன, ஐயாயிரம் ரூபாய் கூட அவர்கள் காங்கிரஸுக்குத் தரலாம்.) ஸ்ரீ காமராஜ் அவர்களின் மந்திரி சபை அமோகமான பாராட்டுதலைப் பெற்று விட்டது. போலீஸ்காரர்களிலும் ஆயிரமாயிரம் பேர்களுக்குப் 'படி' கிடைத்தது. கூட்டம் சேராவிட்டால் போலீஸ் மகாநாடே நடத்திவிட உத்தேசித்திருந்தார்களோ என்னவோ? ஆனால் நம் தமிழ் நாட்டு மக்கள் அப்படியெல்லாம் மகா நாட்டைப் புறக்கணித்து விடாமல் இந்த வைபவத்தைச் சிறப்பாக நடத்திக் கொடுத்துப் புகழ் மாலை பெற்று விட்டார்கள். காங்கிரஸ் ஆட்சியில் மனம் கசந்துபோனவர்களைச் சிரிக்கச் செய்ய அக் கட்சியின் மகாநாட்டை விட்டால் கோமாளித்தனத்துக்கு வேறு எங்கே போவது?

# மோசடிகளில் பெரிய மோசடி

காங்கிரஸ்காரர்களில் மிகவும் யோக்கியதை நிரம்பிய ஒருவரும் இருக்கிறார். பழம் பெரும் காங்கிரஸ்காரரும், தேச பக்தருமான ஸ்ரீ ஜம்னுலால் பஜாஜின் குமாரர் ஸ்ரீ கமலநயன பஜாஜ் தான் அவர். மதுரை மகாநாட்டில் பட்டொளி வீசிப் பறந்த கட்சிக் கொடிகள் பல கமலநயனரின் நயனத்தை மட்டுமின்றி மனத்தையும் உறுத்தின. எனவே காங்கிரஸ் கொடியும், தேசியக் கொடியும் ஒரே போலிருப்பது சரியல்ல; காங்கிரஸ் தனது கட்சிக் கொடியை மாற்றிக் கொள்ள வேண்டும் என்று அவர் தைரியமாக எடுத்துக் கூறியிருக்கிறார். இதை அமுல் செய்ய மேலிடம் சம்மதிக்காது என்பது உறுதிப்பட்டுப் போன விஷயம். இருந்த போதிலும் தவற்றைச் சுட்டிக் காட்டும் துணிவு படைத்திருந்த பஜாஜ் அவர்களைப் பாராட்டியே ஆக வேண்டும்.

காங்கிரஸ் கட்சி செய்து வரும் மோசடிகளில் மிகப் பெரியது சர்க்காரும் கட்சியும் ஒன்றே என்ற பிரமையை மக்களுக்கு உண்டாக்கி யிருப்பதே. அதற்கு இந்தக் கொடிக் குழப்பம் நன்றாக உரமிட்டிருக்கிறது. சர்க்காவுக்கும், சக்கரத்துக்கும் உள்ள சின்னஞ்சிறு மாறுபாடு பொதுமக்களுக்குப் புரிய நியாயமில்லை அல்லவா?

மதுரை மகாநாட்டில் இந்த மோசடியின் எல்லையையே கண்டு விட்டோம். 'இந்தத் தேசமே இன்று மதுரையில் இருக்கிறது; ஏனெனில் தேச மக்கள் யாவருக்கும் நாங்கள் பிரதிநிதித்துவம் வகிப்பவர்களல்லவா?' என்று பிரதமர் வானளாவப் பேசியிருக்கிறார். இது ஒரு விதத்தில் உண்மைதான். ஏனெனில் இம் மகாநாட்டில் வாய் திறக்க முடியாமல் உட்கார்ந்திருந்த ஆயிரக்கணக்கான கட்சி அங்கத்தினர்களும் காங்கிரஸ்

ஆட்சியின் கீழ் எதுவும் செய்யச் சுதந்திரமற்ற மக்களுக்குப் பிரதிநிதித்துவம் வகிப்பதாகவே சொல்லலாமல்லவா ?

இன்னொரு விஷயம்; கட்சியின் காரியத்துக்காக மதுரையில் மகாநாடு கூட்டியிருப்பதை ஒட்டியே சென்னையில் பஞ்சாயத்துக் கூட்டத்துக்கும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. மதுரை நாடகத்தின் கதாநாயகராகிய நேரு அவர்கள்தான் இந்த மகாநாட்டிலும் பேருரை ஆற்றப் போகிறார். கட்சியின் அலுவலையும் கையோடு கையாகச் சர்க்கார் அலுவலையும் பிணைத்து இரண்டும் ஒன்றே என்ற 'அத்துவைத' பாவனை ஏற்படுத்தவே இந்த ஏற்பாடு. பஞ்சாயத்து மகாநாட்டில் கலந்து கொள்ளும் ருசுவாதற்ற கிராமப் பெரு மக்கள் வழியாகத் தமிழ் நாட்டுக் கிராமங்கள் ஒவ்வொன்றிலும் காங்கிரஸின் தந்திரம் செல்லுபடியாகப் போகிறது. இவ்வளவு திறமையுடன் கட்சி-ஆட்சி ஐக்கியத்துக்குப் பாடுபடும் திரு காமராஜின் உருவச் சிலையைப் பிரதமர் திறந்து வைப்பது தான் முற்றிலும் பொருந்தும். கட்சி—சர்க்கார் ஐக்கியத்துக்கு நேரு அவர்கள் டில்லியில் எப்படி ஒரு சின்னமாக இருக்கிறாரோ அதைப் போலவே அல்லவா சென்னையில் திரு காமராஜர்?

# என்ன சேதி?

## சந்தோஷச் செய்தி

மாஸ்டர் தாராசிங் உண்ணாவிரதத்தை முடித்தது மிகவும் மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும். சீக்கியருக்குள் ஒரு சிங்கமாகத் திகழ்பவர் தாராசிங். அவருடைய இன்னுயிர் அந்த சமுதாயத்துக்கு மட்டுமின்றி நாட்டுக்கே இன்றியமையாதது. துடிப்பு மிகுந்த ஒரு வகுப்பினரைத் தக்கபடி இயக்கி வைக்கத் தலைமை இல்லாவிட்டால், அவர்களுடைய மனக் கொதிப்பு எத்தனையோ விபரீதங்களையல்லவா விளைவித்துவிடும்? இத்தகைய விபரீதங்கள் ஏற்படாமல் தடுத்து, விவேகமான முடிவுக்கு வந்த தாராசிங்கைப் போற்றுகிறோம். நாட்டுக்காகத் தம் உயிரை நீத்து விடுவது மட்டும் பெரிதில்லை; சில சமயங்களில் காத்துக் கொள்வதும் அவசியம் என்று உணர்ந்த அவரைப் பாராட்டுகிறோம்.

## ஒரு நல்ல முதலீடு

சென்னை மாநில மின்சார போர்டு இரண்டு கோடி ரூபாய் மக்களிடமிருந்து கடன் கோருகிறது. பத்து வருஷத் தவணையில் இத்தொகை திருப்பிக் கொடுக்கப்படும். வட்டியும் நாலரை சதவிகிதம் வழங்கப்படும். அதுவும் வழக்கம் போல் வட்டிப் பணம் ஆறு மாதத்துக்கு ஒருமுறை பட்டுவாடா செய்யப்படுமென்றும் தெரிகிறது. சென்னை மின்சார போர்டுக்கு, தயங்காமல் தாராளமாக எவரும் கடன் கொடுக்கலாம். ஏனெனில் தனது ஆஸ்திகளை லாபகரமான இனங்களில் செலவிட்டு, மின்சார வசதிகளை நமது மாநிலத்தின் மூலை முடுக்குகளுக்கெல்லாம் கிடைக்கும்படி செய்வதில் சென்னை மின்சார போர்டு அருமையாகப் பணியாற்றி வருகிறது. இப்போது கோரப்படும் கடன் தொகைகூட நடப்பு ஆண்டாகிய 1961-62 வருஷத்தில் மேற்கொள்ளப்படவிருக்கும் திட்டங்களுக்காகவே. இந்த இலாக்காவில் எல்லாச் செலவுகளுமே லாபகரமான முதலீடுகள். ஆகவே, மக்கள் தாராளமாக இந்தக் கடன் பத்



சென்னை சுதந்திரக் கட்சிப் பிரமுகர் திரு வி. கே. ராமசாமி முதலியார் அவர்களுக்கு சமீபத்தில் சைவத் திருமுறைப்படி அறுபதாண்டு நிறைவு விழா செய்யூரில் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. திரு சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் ஓர் இலட்சம் திரு ஐந்தெழுத்துக்கள் எழுதப் பெற்ற மலரைத் தம்பதியருக்கு வழங்கினார். இவ்வைபவத்துக்குச் சென்னை நகரப் பிரமுகர்களும், மந்திரிகளும் வந்திருந்து சிறப்பித்தனர். திரு ராமசாமி முதலியார் தம்பதியர் இன்னும் பல்லாண்டு வாழ நாமும் வாழ்த்துகிறோம்.

# மக்ளீன்ஸ் பற்களை வெண்மையாக்குகிறது என்பதற்கான ஆதாரம்

## 1 அதை உணருங்கள்

பற்களில் கறை படிந்திருக்கிறதா? அது இயற்கையான வெண்மையை மறைக்கிறது. இப்போது மக்ளீன்ஸ்கொண்டு பல் துலக்கி அது கறையை எவ்வாறு அகற்றுகிறதென்று உணருங்கள்.

## 2 அதை ருசியுங்கள்

நீங்கள் அனுபவிக்கும் அந்த குளுமையான ருசிக்குக் காரணம் மக்ளீன்ஸில் இருக்கும் 3 கலவைப் பொருள்களும் திறம்பட வேலை செய்வதால்தான். அவை பற்களைச் சுத்தம் செய்து, வெண்மையாக்கி பாதுகாக்கின்றன.

## 3 அதைப் பாருங்கள்

உங்கள் புன்முறுவலில் காணும் வெண்மையைக் கண்டு நீங்களே வியப்படைவீர்கள். உங்கள் பற்களை முன்பிருந்ததைவிட மக்ளீன்ஸ் பற்பசை இன்னமும் வெண்மையாக்குகிறது. நீங்களே இதைப் பரீட்சித்துப் பாருங்கள்.






வெள்ளை அல்லது குளோரோபில் சேர்ந்தது.

இன்றே மக்ளீன்ஸ் உபயோகிக்கத் தொடங்குங்கள். இப்பொழுது எளிதில் கிடைக்கிறது.

MTP/I/P/4/61-TAM

திரங்களில் பணத்தை முதலீடு செய்து, நாட்டின் உண்மையான அபிவிருத்திக்கு உதவுகிறோம் என்ற திருப்தியுடன் வட்டியைப் பெற்றுக்கொண்டு தங்கள் பணம் பாதுகாப்பாகவே இருக்கிறது என்ற நம்பிக்கையையும் அடையலாம்.

## ஆண்டவனுக்கு வேண்டாம் உச்சவரம்பு

தற்போது மத ஸ்தாபனங்களுக்குச் சொந்தமான நிலங்கள் உச்ச வரம்புச் சட்டத்திலிருந்து விலக்களிக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் இவைகுறித்துப் பிரத்தியேகமான வேறு ஒரு சட்டம் விரைவில் வரப்போகிறது. இச் சட்டங்களால் இந்துக் கோயில்கள், மடங்கள், தர்ம ஸ்தாபனங்கள் ஆகியவற்றின் நில உரிமையில் சர்க்கார் தலையிடவும் அவற்றைக் கூட்டுறவு விவசாயத்தின் கீழ் கொண்டு வரவும் வழி உண்டாகிவிடக் கூடாது என்பதே ஆஸ்திக உலகின் விருப்பம். தங்கள் கருத்தை வெளியிடுவதற்காக இந்து ஆஸ்திகர்கள் இம்மாதம் 14, 15 தேதிகளில் சென்னையில் மகாநாடு கூட்டுகிறார்கள். ஸ்ரீ கே. எஸ். இராமசாமி சாஸ்திரிகள் தொடங்கி வைக்கும் இம் மகாநாட்டுக்கு திரு பி. டி. ராஜன் தலைமை தாங்குகிறார். மகாநாடு சர்க்காருக்குத் தூது கோஷ்டி யொன்றையும் அனுப்பி வைக்கப் போகிறது. அதன் யோசனைகளுக்கு நமது அறநிலையப் பாதுகாப்பு மந்திரி அவர்கள் செவி சாய்ப்பாரென நம்புகிறோம்.

## நாடக விழா

பம்பாய் நகரில் கடந்த பல ஆண்டுகளாக என்றுமுள தென் தமிழுக்குத் தொண்டு புரிந்து வரும் பம்பாய் தமிழ்ச் சங்கத்தின் கட்டட நிதிக்காக ஆண்டுதோறும் அச்சங்கம் நாடக விழா நடத்தி வருகிறது. இவ்வருடம் திரு எஸ். வி. சகஸ்ரநாமம் தமது சேவா ஸ்டேஜினருடன் 'போலீஸ்காரன் மகள்', 'வடிவேல் வாத்தியார்', 'புதிய பாதை', 'பூ விலங்கு' ஆகிய நான்கு நாடகங்களை அக்டோபர் பத்தொன்பதாம்தேதி முதல் இருபத்தாறும் தேதி முடிய நடத்த விருக்கிறார்கள். பம்பாய் ரசிகப் பெருமக்கள் நாடகங்களைத் தவறாமல் கண்டு களிப்பதுடன் கட்டட நிதிக்குப் பொருளுதவி செய்யவும் முன்வருவார்கள் என்று நம்புகிறோம்.

## அன்னையின் அடிபணிவோம்

அன்னை பராசக்தியானவள் தீய சக்திகளை யெல்லாம் வென்று உலகில் அன்பையும், அறத்தையும் தழைக்கச் செய்து அழகைப் பொலியச் செய்ததை நினைவூட்டுகிறது நவராத்திரி. அடியார்களிடம் கருணை பொழிவதற்காகத் தாங்கிய எண்ணரிய அருளுருவமும், அவர்களின் கோணல் மனங்களை நிமிர்த்துவதற்காகத் தாங்கிய எண்ணற்ற ஆயுதங்களுமாக இந்த அட்டைப் படத்தில் தருமபுரத்து மகாலட்சுமி துர்க்கா தேவி காட்சி தருகிறாள். ஞானத்தையும், செல்வத்தையும், வீரியத்தையும் அளிக்கும் கலைமகள், அலைமகள், மலைமகள் மூவரும் ஒன்றாக இசைந்த துர்க்கையாகத் தரிசனம் தருகிறாள். கரகமலங்களில் உள்ள ஆயுதங்கள் அவளை அரி, அரன், அயன் ஆகிய மும்மூர்த்திகளையும் ஈந்த மூலப் பொருளெனக் காட்டுகின்றன.

அகிலாண்ட கோடியீன்ற அன்னையே,
பின்னையுங் கன்னி யென மறை பேசும் ஆனந்த ரூப மயிலே

என்ற தாயுமானவர் பாடலுக்கிணங்க இந்த உலகமாதா ஒன்பது பிராய வாலையாக நிற்கிறாள்; பெருந் துயரங்களிலிருந்து அன்பரைக் கடத்துவிப்பதால் துர்க்கை என்ற நாமம் தரித்து நிற்கிறாள். அவள் பிரசன்னமாவதற்காகத் தேவர்கள் கடுந்தவமிருந்தபோது உலகெல்லாம் ஸ்தம்பித்து நின்றதையே கொலு வைத்து உருவகப்படுத்துகிறோம். நாமும் அதேபோல இந்தத் திருநாட்களில் மனத்தை ஒருமுகப்படுத்தி,

எண்ணிய முடிதல் வேண்டும், நல்லன எண்ணல் வேண்டும் ;
திண்ணிய நெஞ்சம் வேண்டும், தெளிந்த நல்லறிவு வேண்டும் ;
பண்ணிய பாவமெல்லாம் பரிதிமுன் பனியே போல
நண்ணிய நின்முன் இங்கு நசித்திடல் வேண்டும் அன்னாய் !

என்று பராசக்தியை வேண்டுவோமாக.

மனத்தால் வேண்டுதல் செலுத்துவதோடு பொருளாலும் வேண்டுதல் செலுத்த மாயூரத்தை அடுத்துள்ள தருமபுரத்தில் உள்ள ஸ்ரீ மகாலட்சுமி துர்க்கா தேவி ஆலயத்தினர் வாய்ப்பளித்திருக்கிறார்கள். உலக முழுதும் கிரக பீடைகள் யாவும் நீங்கி நல் வாழ்வு வாழ வேண்டுமென்ற பெரு நோக்குடன் அங்கு தேவிக்கு நவசக்தி அர்ச்சனை முறையில் கோடி அர்ச்சனை' நடத்தப்பெற்று வருகிறது. சகஸ்ரநாம அர்ச்சனைக்குக் கட்டணம் ரூ. 2.50, நவசக்தி அர்ச்சனைக்கு ரூ. 18, இலட்சார்ச்சனைக்கு ரூ. 150. தொகை அனுப்பவேண்டிய முகவரி: **ஸ்ரீ வி. இராமநாத அய்யர், 162, மகாதானத் தெரு, மாயூரம், தஞ்சை மாவட்டம்.**



# காந்தி மண்டபத்தில் காந்தி ஜயந்தி

சென்ற அக்டோபர் இரண்டாம் தேதி காந்தி ஜெயந்தி விழா தேசமெங்கிலும் கொண்டாடப்பட்டது. சென்னை காந்தி மண்டபத்தில் கொண்டாடப்பட்ட அந்த வைபவம் மற்ற விழாக்களைக் காட்டிலும் ஒரு படி அதிகமாகச் சிறப்புற்று விளங்கியது. வாகன வசதிக் குறைவையும் பொருட்படுத்தாமல் சுமார் பத்தாயிரம் மக்கள் திரளாகக் கூடியிருந்து இவ் வைபவத்தை நடத்திக் கொடுத்தது மிகவும் குறிப்பிடத் தக்கது.

இந்தக் கூட்டத்தில் இன்று நம்மிடையே காந்தி மகான் வழியை நாள்தோறும் நினைவுறுத்தி வரும் தலைவர் ராஜாஜியிடம் காந்தி மகான் திரு உருவத்தைப் பொறித்த தபால் தலை ஆல்பத்தை வழங்கி, இரு மகான்களிடமும் தங்களுக்குள்ள மதிப்பை அமெரிக்க அரசாங்கத்தார் தெரிவித்துக் கொண்டார்கள்.

வழக்கம்போல் அன்றும் தக்கர்பாபா வித்தியாலயா மாணவர்கள், சாரதா வித்தியாலய ஆதாரக்கல்வி பயிற்சிப் பள்ளி மாணவிகள், ஆகியோரின் நூற்பு யக்ஞமும், கீதை பாராயணமும் நடந்தன. ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் காந்தி மகானுக்குப் பிடித்தமான 'வைஷ்ணவ ஜனதோ' பாடலுடன் தொடங்கிச் சில துதி கீதங்கள் பாடினார். பிறகு சென்னையிலுள்ள அமெரிக்க ஸ்தானிகர் டாக்டர் வைமன்ஸ், காந்தி மகானிடம் அமெரிக்கப் பொதுமக்களுக்கு இயல்பாகவே ஏற்பட்டுள்ள பெருமதிப்பை மிக அழகாகவும் உள்ளுணர்வோடும் வெளியிட்டார். ''ஆட்டு மந்தையைப் போல மக்கள் நடத்தப்படும் நிலை ஜனநாயகமாகாது. ஜனநாயக அமைப்பில் தனி நபரின் கருத்து சுதந்திரமும் செயல் சுதந்திரமும் வெகு கவனத்துடன் பாதுகாக்கப்பட வேண்டும். மக்கள் சுய விருப்பத்துடன் செய்யாத எந்தக் காரியத்தையும் தருமமானது என்று சொல்வதற்கில்லை. பயமுறுத்தியோ நிர்ப்பந்தம் செய்தோ இயக்கிவைக்கும் எந்தக் காரியமும் தருமமாகாது' என்ற காந்தி மகானின் பொன்மொழியே அமெரிக்கக் கொள்கையின் அடிவாரமாகும்'' என்று வைமன்ஸ் அவர்கள் கூறினார்.

''ராஜாஜிக்கும் காந்தி மகானுக்குமிடையில் நிலவிய நீண்ட நெருங்கிய தொடர்பைப் பற்றி நான் கூறப் புகுவதில் பொருளில்லை. அவையெல்லாம் சரித்திரத்தில் பதிவாகிவிட்ட விஷயங்கள். ஆனால் காந்தி மகானின் சிந்தனையும் நெறிமுறையும் அறுபடாமல் அதற்கோர் இணைப்பாக இன்றும் ராஜாஜி நம்மிடையே இருந்து வருவது நாம் பெற்ற பேறுகளுக்கெல்லாம் சிகரமாகும்!'' என்று சொல்லி, தபால் தலை ஆல்பத்தை ராஜாஜியிடம் வழங்கினார்.

பின்னர் கொத்தமங்கலம் சுப்பு அவர்கள் காந்தி மகான் கதையைத் தாமே அமைத்த அருமையான நாட்டுப் பண்ணில் வெகு ரஸமாக எடுத்துச் சொன்னார்.





# அன்பே ஆரமுதே

## அத்தியாயம் இருபத்தெட்டு

நிச்சயமாக டில்லியை விட்டு விட்டோம் என்று வண்டி புறப்பட்ட பிறகுதான் சித்திக்கு உணர முடிந்தது போல் இருக்கிறது. கடைசி நிமிஷம் வரையில் ஏதாவது வந்து தடுத்து விடாதா என்றுகூட அவள் நம்பிக் கொண்டுதான் இருந்திருப்பாள் என்று தோன்றியது. அன்றிரவு முழுதும் கல கல வென்று பேசவில்லை அவள். ஆனால் விடிந்ததும் அவளுடைய சோர்வெல்லாம் அகன்று விட்டது. எதிரேயிருந்த சீக்கியரோடும் அவர் மனைவியோடும் வலுவில் பேசத் தொடங்கியவள் நிறுத்த மாட்டாளா என்றாகி விட்டது. அவளை உற்சாகப் படுத்தவே அவர்கள் இருவரையும் சகப் பிரயாணிகளாகக்கடவுள் அனுப்பினரோ என்றுகூட ருக்மிணிக்குத் தோன்றியது. சீக்கியரின் மனைவிக்கு நடு வயதுதான். தலையில் கூந்தல் அதிகமில்லை. கால் மணிக்குள் வாரிச் சீவிப் பின்னல் போட்டுக் கொண்டு விட்டாள். அவளுக்குத் தான் தன்னைச் சீர்ப்படுத்திக் கொள்ள ஒரு மணிக்கு மேலாயிற்று. மேல் பர்த்தில் உட்கார்ந்து தலையைச் சீவி முடி போட அரை மணியாயிற்று. பிறகு தாடியை ஒழுங்கு பண்ணி வளைத்து விட்டு, திரித்து விட்டு, கறுப்புத் துணியைப் போட்டுக் காபந்து செய்து முகத்தை முகமாகச் செய்ய இன்னொரு அரை மணியாயிற்று. முப்பத்தைந்து வருஷங்கள் டில்லியிலிருந்து இதையெல்லாம் பார்க்கக் கொடுத்து வைக்காத சித்திக்கு இப்பொழுது ஆச்சரியம் தாளவில்லை. ருக்மிணியையும் அவளுடைய சிரமங்களையும் மாறி மாறிப் பார்த்துத் தன் வியப்புக்களைக் கண் மூலமாகவே சொல்லிக் கொண்டு வந்தாள். சென்னையில் குடியேற்றப் பட்ட அகதிகளில் ஒருவராம் அவர்.. பெரிய ஜவுளிக்கடை வைத்துக் கொண்டு சௌக்கியமாக இருக்கிறாராம். அகதிகளோடு கூடாரத்தில் வசித்துக் கொண்டு வாழ்க்கையைத் தொடங்கியவர் இப்பொழுது ராயபுரம் பக்கத்தில் பங்களா கட்டிக் கொண்டு நன்றாக வாழ்ந்து வருகிறாராம். பத்து வருடங்களுக்கு முன்னால் இடம் பெயர்ந்து வந்தவர் இப்பொழுதுதான் மீண்டும் முதன் முதலாகவே வடக்கே போய் வருகிறாராம். அமிருதசரசுக்கு யாத்திரை போய் வருகிறாராம்.

"நீங்களெல்லாம் சுத்தமான ஜனங்களம்மா. உங்களிடம் வெண்ணெய் நாற்றமே கிடையாது. நீங்கள் உடையிலிருந்து சீலைப் பேன் எடுப்பதில்லை. ரயில் வண்டியில் கதவு ஒன்றிருப்பதாக உங்களுக்கு நினைவிருக்கிறது. ஜன்னலையே கதவாக உபயோகப் படுத்துவதில்லை. எனக்கு மெட்ராஸ் ரொம்பப் பிடித்திருக்கிறது" என்றார் அவர்.

"பார்த்தியா சித்தி?"

"நிசத்தைத் தானே சொல்கிறார் அவர்? பெஜவாடா தாண்டினதுமே பாரேன்!" என்றாள் சித்தி.

"நம்ம ஊர் ஊர்தான். பசபசன்னு பச்சை. அறுப்பான வயலெல்லாம் பார்த்தா எனக்கு ஊரிலே இருக்கிறாப் போலே இருக்கு. இத்துனூண்டு குட்டியாக இருக்கும்போது, நெல்லு மணியும் விளாமிச்ச வேரும் பிடுங்கிக்கொண்டு வரதுக்காக அறுப்பான வயலெல்லாம் சுத்துவேன் நாகமணியோட. நாகமணி இப்ப மதுரையிலே இருக்காளாம். அவ அகமுடையான் ஜட்ஜா இருக்காராம்...." என்று விஜயவாடாவைக் கடந்ததும் ஆரம்பித்தாள் சித்தி.

சித்திக்குத் தாளம் போட்டுக்கொண்டே வந்தாள் ருக்மிணி. சென்னைக்கு வரு

இறதுக்குள் சொந்த ஊருக்கு வருகிற சந்தோஷத்தை அவள் உடம்பில் ஏற்றிக் கொண்டே வந்த அவனுடைய சூழ்ச்சி பலித்து விட்டதென்றே அவனுக்குத் தோன்றியது.

ஸ்டேஷனுக்கு வரவேற்க வந்திருந்த சுப்புசாமியையும் சந்திராவையும் பார்த்ததுமே சித்தி டில்லியை அடியோடு மறந்து விட்ட மாதிரியிருந்தது. ''மாமா! நீங்கள் சாமானெல்லாம் கொண்டு வண்டியில் ஏற்றுங்கள். நான் சித்திக்கும் ருக்மிணிக்கும் வெயிட்டிங் ரூமிலே காப்பி கொடுத்து விட்டு வருகிறேன். வாருங்கள், சித்தி'' என்று சுப்புசாமியின் கையில் இருந்த தர்மாஸ் பிளாஸ்கை வாங்கிக் கொண்டு இருவரையும் நகர்த்திக் கொண்டு போனாள் சந்திரா. அந்த உபசாரத்தைப் பார்த்ததுமே சித்தி புது இடத்திலே ஒன்றிவிட்டான். ருக்மிணிக்கு வேலை கிடைத்து விட்டதென்றும் ஐந்நூறு ரூபாய் சம்பளம் போட்டிருக்கிறார்கள் என்றும் சுப்புசாமி சொன்னதுமே சித்திக்குக் குளிர் விட்டு விட்டது.

மாடி ஹாலில் பெட்டி படுக்கையெல்லாம் கொண்டு வந்து வைத்தான் குருசாமி. விசாலமான அறை அது. ஒட்டடையடித்துப் பச்சை கலந்த சுண்ணும்புப்பிடிபிடித்துப் பளபளவென்றிருந்தது. ஒரு மேஜை, நாலைந்து நாற்காலிகள், ஒரு புஸ்தக அலமாரி—இவ்வளவும் கீழேயிருந்து அங்கே வந்திருந்தன.

''என்ன முழிக்கிறே ருக்கு? இங்கேயே இருக்கச் சொல்லியிருப்பேன் என்று பயப்படுகிறாயா? இல்லை. வீடு ஒன்று பார்த்திருக்கிறேன். இன்னும் பதினைந்து நாட்களாகும் அது காலியாக.



அதுவரையில் இங்கே இருக்கலாம். இந்த அறை உன்னுடைய இடம். நீ வாசிப்பதோ, எழுதுவதோ—எல்லாம் இங்கே நடக்கலாம்.''

பதில் சொல்ல முடியாமல் அவரது அன்பில் நனைந்து சிலிர்த்துக் கொண்டே நின்றான் அவன். சற்றுக் கழித்து, ''மாமா! சந்திராவின் மேஜையை இங்கு கொண்டு வந்து போட்டு விட்டீர்களே?'' என்று கேட்டான்.

''போட்டால் என்ன? அவள் இனிமேல் படிக்கப் போகிறாளா? எழுதப் போகிறாளா? டெமான்ஸ்ட்ரேட்டர் உத்தியோகம் ஆகியிருக்கு இப்ப. எத்தனை நாளைக்கு? ............ கல்யாணத்துக்குக் கழுத்தை நீட்டின பிறகு மேஜை நாற்காலி எதற்கு? வேணும் என்றால் இங்கேயே வந்து படிக்கட்டுமே.''

''அவள் கல்யாணத்தைப் பற்றி உங்களுக்குக் கூடக் கவலை வந்துவிட்டதா?''

''எனக்குக்கூடவா என்றால்?''

''இத்தனை நாட்களாக அதைப் பற்றிப் பேசவே இல்லையே நீங்கள்?''

''நான் எதற்குப் பேசணும்? அவள் தான் ஒரு பையனைத் தேர்ந்தெடுத்து விட்டாளே என்று சும்மாயிருந்தேன். அவர்களுடைய அப்பா அம்மாவோடு பேசுவது, பத்திரிகை போடுவது, கலியாணம் நடத்துவது—இந்த வேலைகளை மட்டும் ஏற்றுக் கொள்வதோடு என் பொறுப்பு முடிந்து விடும் என்று நினைத்துக் கொண்டிருந்தேன்.''

''இப்பொழுது பொறுப்பு அதிகமாகி விட்டதா?''

''ஆமாம்.''

''ஆமாம் என்றால்?''

''இப்பொழுது அவனைத் தேடிப் பிடிக்கும் பொறுப்பும் எனக்கு வந்து சேர்ந்திருக்கிறது.''

''காரணம்?''

''முப்பது நாற்பது நாட்களாயிற்று, நான் அவனைப் பார்த்து. இங்கேயே இவளைச் சுற்றிச் சுற்றி வலம் வந்து கொண்டிருந்தவன் திடீரென்று நின்று விட்டானாம். வந்து போய்க் கொண்டு தான் இருப்பான், என் கண்ணில்தான் தட்டுப்பட வில்லை என்று நான் நினைத்துக்கொண்டிருந்தேன். இரண்டு நாட்கள் முன்னால்தான் நாகம்மாள் சொன்னாள், ஆளையே காணோம் என்று.''

''தேடினீர்களா?''

''வீடு, கடை எல்லாம் நாலு தடவை தேடி விட்டேன். ஆள் அகப்படவில்லை ....ம்...எங்கே போய் விடப் போகிறான் பார்த்துக் கொள்கிறது.....''

''யாரு அவன்?''

''உனக்குத் தெரியாது. நீ பார்த்ததில்லை. அவன்தான் இங்கு வரவேயில்லையாமே—ஒரு மாசமாச்சாமே வந்து. நீ எங்கே பார்த்திருக்கப் போகிறாய்? நல்ல பையன் என்றுதான் நினைத்தேன். நன்றாகப் படித்திருக்கிறான். வசதியான பையன். என்ன காரியமோ, என்னவோ—தானாக வருகிறான். நாம் அவசரப்பட்டு என்ன நடக்கப் போகிறது?''

''அவன் தானாக வந்து, நீங்கள் இவளை அவன் கையில் கொடுக்கிற வரையில் அவள் இந்த அறையில் வந்து படிக்கக் கொள்ளச் செய்யட்டும் என்று ஏற்பாடு செய்தீர்களாக்கும்!''

''ஆமாம்.''

''என்ன ஆமாம்?''

''வேறு என்ன சொல்லச் சொல்கிறாய்? நீ பேசுகிறதைப் புரிந்து கொண்டதாகக் காட்டிக் கொள்ள இப்பொழுது என்ன முடை வந்து விட்டது?''

''அப்படியானால் நான் பேசுகிறது புரிந்துதான் இப்படிப் பேசுகிறீர்களா?''

''என்ன செய்கிறது? நான்தான் கேட்கிறேனே! அவளுக்கு என்ன வயசாகி விட்டது? கலியாணம் பண்ணாமல் இருந்தால் இன்னும் இரண்டு வருஷங்களாவது இந்த வீட்டில் இருக்க முடியும் அவள் என்றுதான் நான் அலட்சியமாக இருக்கிறேன்.''

''இதற்கு அவள் இஷ்டப்பட வேண்டாமா...?''

''அது ரொம்பச் சரியான கேள்விதான்....ஏன் உனக்கு ஏதாவது தெரியுமோ? தெரிந்தால், ஏதாவது சொல்லித் தொலையேன். இந்தப் பொம்மனாட்டிகள் மூடி மறைச்சு, தில்லுமுல்லு திரிசமன் எல்லாம் பண்ணிக் கொண்டேயிருப்பார்களே! அந்த மாதிரி நீயும் ஆரம்பித்து விட்டாயா?''

ருக்மிணி சிரித்தாள்.

''ஒரு தில்லுமுல்லும் இல்லை. ஆனால் நீங்கள் சொல்கிறதைப் பார்த்தால்தான் வேடிக்கையாக இருக்கிறது. கல்யாணத்துக்கு அப்படி வயசாச்சா என்று கேட்கிறீர்களே! கலியாண வயசு என்றால் என்ன அர்த்தம்? பதினைஞ்சு வயசிலேயோ, இருபது வயசிலேயோ, முப்பது வயசிலேயோ—எப்பொழுது வேண்டுமானாலும் வரும். அதைப் பிறர் எப்படிச் சொல்ல முடியும்?''

''அப்படியா? ரொம்ப சரி. முழு மூச்சாக இறங்கி விடுகிறேன். போதுமா? இன்றைக்கே அந்தப் பயலைச் சிண்டைப் பிடித்து இழுத்து வரப் பார்க்கிறேன்.''

''சிண்டைப் பிடிக்கிறீர்களோ, சட்டையைப் பிடிக்கிறீர்களோ — தும்பை



உலகப்
பிரசித்திபெற்ற
தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக் குணமளிக்கும்

# பெப்ஸ் வில்லைகளை உட்கொண்டதால், பிராங்கைடிஸ் விரைவில் அகன்றது

தொண்டை, மார்பு உபாதைகளுக்கான பெப்ஸ் வில்லைகளை உட்கொண்டு தொண்டைப் புண், ப்ராங்கைடிஸ், இருமல் மற்றும் ஜலதோஷத்தை சீக்கிரம் நிவர்த்தி செய்து கொள்ளுங்கள். பெப்ஸ் வில்லைகளைச் சுவைத்து, குணமளிக்கும் ஆவி போன்ற அதன் சத்து வேலை செய்வதை உணருங்கள் . . . வேதனையைக் குறைக்கவும் கிருமிகளை அகற்றவும் உதவியளிக்கிறது.




## பெப்ஸ்

தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக்
குணம் அளிக்கும்
வில்லைகள்

எல்லா மருந்து
வியாபாரிகளிடமும்
கிடைக்கும்.

வி. இ. புல்போர்ட் (இந்தியா) பிரைவேட் லிட்.

PPY.56-TAM

---

# ஸ்ரீ தியாகராஜ சங்கீத வித்யாலயா

19-10-61 விஜயதசமி தினத்தன்று
புது வகுப்பு ஆரம்பம்

சாஸ்திரீய முறையில் கர்நாடக சங்கீதத்தில் பயிற்சியளிக்கும் முதன்மையான வித்யாலயம் வயலின் வகுப்புகள் துவங்குகிறோம்

* நிறைமையான பயிற்சி
* குறைந்த சம்பளம்
* ஆதரவைக் கோருகிறோம்

விவரங்களுக்கு

கௌரவக் காரியதரிசி
ஸ்ரீ தியாகராஜ சபா (ரிஜிஸ்டர்டு)
Regd. Office: 141, மஹாவீர் பில்டிங்
பந்தர்க்கார் ரோடு
மாதுங்கா – பம்பாய் –19

சபா பில்டிங்: "சங்கீத ஜோதி"
102, டெலங் கிராஸ் ரோடு
டெலிபோன்: 61699

---

## பார் திவிலைக்கும் குறைவு

15 நாட்களுக்கு மட்டும்தான்
வாட்டர் ப்ரூப், ஷாக் ப்ரூப், ஸ்விஸ் தயாரிப்பு
10 வருட உத்தரவாதம் சைஸ் 10½



TAM

| | | | | |
|---|---|---|---|---|
| | ஜுவல் | குரோம் ரூ. | [illegible] | 38. |
| 15 | ஜுவல்கள் | குரோம் ரூ. | [illegible] | 48. |
| 17 | ஜுவல்கள் | குரோம் ரூ. | [illegible] | 58. |
| 21 | ஜுவல்கள் | குரோம் ரூ. | [illegible] | 68. |

மேற்கண்டவைகளில் எதாவது ரோல்டு கோல்டு கேசில் வேண்டுமானால் ரூ. 5 கூடுதல். தபால் செலவு ரூ. 2.
ஏஜெண்டுகள் தேவை:
கேடலாக்குக்கு எழுதுங்கள்,

**ASHOK WATCH HOUSE,**
**1/5, Banaji St, BOMBAY-1**

ஞாபக
மிருக்கட்டும்
**மாஸ்டா**
பல்ப்கள்




நீடித்துப்
பிரகாசிக்
கின்றன

மற்றும் **AEI**

## ஏ.இ.ஐ. விசிறிகள்

உங்களுக்கு எப்பொழுதும்
குளுமையான சுகத்தை
அளிக்கின்றன.



ஸீலிங் விசிறிகள்
மைத்தான்—ஏஸி. கெபாஸிடர் டைப்
36", 48", 56" & 60"
பாக்ரா—டீஸி. 36", 48", 56" & 60"



ஆஸிலேடிங் 16" டேபிள் விசிறிகள்
டீஸி & ஏஸி
டீலக்ஸ் மற்றும் ஸூபர் டீலக்ஸ்
கெபாஸிடர் டைப்.

விவரங்களுக்கு
அஸோஸியேடட் எலக்டிரிகல் இண்டஸ்டிரீஸ்
(இந்தியா) பிரைவேட் லிமிடெட்
த.பெ. 271 . த.பெ. 484 . த.பெ. 345 . த.பெ. 2710
கல்கத்தா-1 . பம்பாய்-1 . புது டில்லி-1 . மதறாஸ்-2
த.பெ. 581 . த.பெ. 50 . த.பெ. 59
பங்களூர்-2 . கோயம்பத்தூர் . நாக்பூர்-1

AIC-361 TM

விட்டு விட்டு வாலைப் பிடிக்கக் கூடாது: அவ்வளவுதான்.''

''சரி, சரி, சரி...!''

''அது சரி மாமா! எனக்கு வீடு பார்த்தீர்களே! எங்கே இருக்கிறது? எப்படி இருக்கிறது?'' என்று திரும்பினாள் ருக்மிணி.

''இங்கிருந்து சரியாக மூன்று பர்லாங். இங்கிருந்து ஐந்தாவது தெரு.''

''வீடு எப்படி?''

''சின்னதும் இல்லை. பெரிசும் இல்லை. இரண்டு அறை, ஒரு ஹால், சமையலறை, ஸ்நான அறை. வெளியே சுற்றிலும் பத்தடி அகலத்துக்கு இடம். பாகல் புடல், மல்லி ஏதாவது போட்டுக் கொள்ளலாம். ஓட்டு வீடு இல்லை, ஓட்டு விடு. ஆனால் மாடி கிடையாது.''

''மாடி இல்லையா?''

''இல்லை. ஏன்?''

''மாடி இல்லாத வீடென்றால் எனக்குச் சரிப்பட்டு வராது, மாமா! யாராவது ட்யூஷன் சொல்லிக் கொள்ள வருவார்கள். இரண்டு அறை உள்ள மாடியாவது வேண்டும்.''

''இவ்வளவுதானே! இதற்காக இவ்வளவு பதறுவானேன்? இதை வேண்டாம் என்று சொல்லி வேறு பார்த்துக் கொண்டால் போகிறது.''

''அதுதான் சொன்னேன்.''

''பேஷாகப் பார்த்து விடுகிறேன்: சரி. குளித்து விட்டுச் சாப்பிடலாம். என்ன முதல் வகுப்பில் வந்தாலும் கரி தலையில் அப்பியிருக்கிறது. போய்ச் சித்தி குளித்தாளா பாரு. நீயும் குளி'' என்று கீழே இறங்கினார் கப்புசாமி.

ஃ ஃ ஃ

அனந்தசாமிக்கு வெகு நேரம் தூக்கம் வரவில்லை. இரவுத் தபால் விமானம் இப்பொழுது நாகபுரி போய்ச் சேர்ந்திருக்கும். மொட்டை மாடியிலேயே, பனங்கட்டையில் பிடரி அழுந்த நட்சத்திரங்களைப் பார்த்தவாறு படுத்திருந்தார் அவர். சப்தரிஷி நட்சத்திரத்தின் வால் மட்டும்தான் தெரிந்தது. விரிப்புச் சில்லிட்டுக் கிடந்தது. ஆனால் காற்றில்லை. இத்தனை பேர்கள் உறங்கும் போது நமக்கு மட்டும் என்ன வென்று காற்றும் தூங்கி விட்டது. சீமை வேப்ப மரம், தென்னைகள், முருங்கை மரங்கள் எல்லாம் ஆடாமல் அசையாமல் தவம் செய்தன. அவர்கூட நடுநிசி வரையில் கண்ணை மூடி மூச்சை அடக்கி உட்கார்ந்துதானிருந்தார். அதற்குப்பின் படுத்தவுடனேயே தூங்கி விடுவது வழக்கம். இன்று அவர் மனம் செயலோயாமல் இயங்கிக் கொண்டேயிருந்தது. அழுவதும், நகைப்பதும், கோபிப்பதுமாகத் திணறிக் கொண்டிருந்தது. அவர் எத்தனையோ கஷ்டங்களைக் கண்ணால் பார்த்திருக்கிறார். ஓடும் எலியைத் தாவிக் கவ்வி, உயிர் போகிற வரையில் அதை உலுக்கிக் குதறும் நாயைப் போல, நோய் மனிதனைக் கவ்விக் குதறும் கண்ணறாவிகளை யெல்லாம் கண்டிருக்கிறார்: விடாப்பிடியாகப் பிடித்துப் பார்ப்பவர்களுக்குப் பயத்தை ஊட்டும் நோய்களைக் கண்டிருக்கிறார். ஆனால் இன்று அவர் கேட்ட கதை! கிழவர் ராஜாங்கத்தின் கண்ணீருக்கு, வயது நிறைந்த ஒரு பெண் விடும் கண்ணீருக்கு அவர் அத்தனை வருடங்களாகப் பார்த்த அத்தனை நோய்களும் வதைகளும் உறை போடக் காணும் என்று தோன்றவில்லை. தாயின் மடியிலிருந்து பந்தை எடுப்பதற்காகத் தெருவில் இறங்கிய குழந்தையை, எங்கிருந்தோ ஓடி வரும் எருமைக் கடா கழுத்திலும் முகத்திலும் மிதித்துக் குற்றுயிராகக் கிடத்தி விட்டு ஓடி விட்டது போலிருக்கிறது.

சந்திரா, ரங்கன், அருண்குமார், டொக்கி, ராஜாங்கம், அவருடைய இளைய சம்சாரம்—எல்லா உருவங்களும் அந்த நட்சத்திர ஒளிக்குக் கீழே அவர் முன் மீண்டும் மீண்டும் வந்து கொண்டிருந்தன. ரங்கனைப் பற்றி அவருக்கு இன்னும் தெளிவு வரவில்லை. 'என் கழுத்திலேயே கைவைத்து விட்டான்' என்று நினைத்துப்'பொருமினானே ரங்கன், அதன் அர்த்தம் என்ன? நாளைக்கு எல்லாவற்றையும் உடைத்து அவனிடம்

ஆட்சி புரியும் காங்கிரஸ் கட்சி தன் கொள்கைகளை அதிகார பலத்தின் மூலமாக நிறைவேற்றப் பார்ப்பது காந்தியடிகளின் தர்மத்துக்கு விருத்தமாகும். நாட்டின் செல்வத்தை ஆட்சி பலத்தின் மூலம் மக்களிடையே பங்கிட்டுச் சமத்துவம் ஏற்படுத்துவதைக் காட்டிலும் வேறு நல்ல ஒரு வழியை அவர் கண்டு சொன்னார். அதாவது செல்வமனைத்தும் ஈசன் தந்ததாகும்; அதை அவரவர்கள் அனுபவிக்க வேண்டியது: ஆனால் அனுபவிக்கும் வழி அது பிறருக்குப் பயன்படும்படி செலவழித்து, அதனால் ஒருவன் தானும் மற்றவர்களும் மகிழ வேண்டும் என்பதே. இந்த முறையை மக்கள் தங்கள் சுதந்திரச் செயலாகக் கடைப்பிடிக்க வேண்டும் என்பது அவர் கொள்கை. இதுவே வள்ளுவர் சொன்ன ஒப்புரவு.

— ராஜாஜி


வக்கீல் (கூண்டிலிருப்பவனைப் பார்த்து) உனக்குச் சட்டம் தெரியுமா?
ஜட்ஜ்: உஷ்!....அந்த மாதிரி அவரைக் கேட்காதீர்கள்! அவர் உங்களைத் திருப்பி அதே கேள்வியைக் கேட்டுவிட்டால் என்ன ஆவது?

கேட்டு விட்டால் என்ன?....அப்படிக் கேட்க வேண்டும் என்ற முடிவுக்குத் தான் வந்தார் அவர்.

தூக்கம் அவரை ஆட்கொள்ளும் பொழுது வெகு நேரம் ஆகிவிட்டது. மூன்று மணியிருக்கும் போலிருந்தது. எருமை வாசலில் நடந்து போகும் ஓசை கேட்டது. யாரோ பால்காரி அதைத் தொடர்ந்து இருமிக் கொண்டு போவதும் கேட்டது. மூன்று மணிக்கு மேல் கூட இருக்கும்.

வெகு நேரம் அவர் தூங்கவில்லை. அவர் எழுந்து ஐந்து நிமிஷங்களுக்கெல்லாம், குருவிகளின் இனிய ஓசைகள் அடங்கி, காக்காய் கரையத் தொடங்கிய நேரத்தில் நாகபுரி விமானம் திரும்பி வருவது தெரிந்தது. ''சந்திராவை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள், அதாவது ரங்கனை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளுங்கள்'' என்று ருக்மிணி உத்தரவிட்டது மீண்டும் அவர் காதில் விழுந்தது.

இரண்டு நாள் அலமலப்பில் வாடிக்கையான சில நோயாளிகளைப் பார்ப்பது தவறிவிட்டது. ஆகவே சூரியன் உதிக்கு முன் நாலு செம்பு நீரை மொண்டு தலையில் விட்டுக் கொண்டு, மருந்துப் பையும் குடையுமாக வெளியே கிளம்பினார். புரசவாக்கம், எழும்பூர், சிந்தாதிரிப் பேட்டை, திருவல்லிக்கேணி, மீர்சாகிப் பேட்டை, ராயப்பேட்டை கெல்லி வீடு—எல்லாவற்றையும் பார்க்க ஒரே நடையாக விறுவிறுவென்று நடந்து விட்டு வந்தார். அவசரம் அவசரமாக அரை ஆழாக்கு அரிசியை வடித்து, பருப்புப் பொடியும், தயிரும் போட்டுச் சாப்பிட்டார். மீண்டும் வெளியே கிளம்பினார். கடற்கரைச் சாலையை நோக்கி நடந்தார்.

இவ்வளவும் தெரிந்த பிறகு அருண் குமார் வீட்டை நினைக்கும் பொழுதே அவருக்கு மேலெல்லாம் ஊவா முள் குத்துவது போலிருந்தது. நன்றாகவும் குத்தாமல், ஓர் இடம் என்றில்லாமல் உடம்பின் பல இடங்களில், தோலில் மட்டும் செருகி வேதனை செய்யும் ஊவா முள். அந்த வேதனைதான் அவரைத் தொல்லைப்படுத்திக் கொண்டே இருந்தது. அவனுடைய பெரிய வீடு, வாசலில் நிற்கிற பரட்டைக் கட்டடம், தோட்டம், தோட்டத்திலும் வராந்தாவிலும், ஹாலிலும் தொத்தித் தொத்தி நிற்கிற, காத்துக் காத்து நிற்கிற சிறு சிறு கும்பல்கள்—ஒவ்வொன்றும் கசந்தது அவருக்கு. நாகம்மாள் சொன்னதை அவர் அப்பொழுது ஆட்சேபித்தாலும், அவளுடைய அருவருப்பு நியாயம்தானோ என்று தோன்றியது அவருக்கு. சோற்றை உண்டாக்குவது, துணியையும் வீட்டையும் செய்து தருவது இவற்றுக்கு உதவுகிற மற்றத் தொழில்களையும் புதியவர்களைப் போல அவசியமான காரியத்தை இந்தக் காளிலிங்கம் செய்துவிடவில்லை. அவனுக்கு இவ்வளவு பெருமை, தெம்பு, எங்கோ இருநூறு மைலுக்கு அப்பாலிருந்து வந்து ஒரு மூலைச் சந்தில் வாழ்ந்து வருகிற ராஜாங்கத்தின் கண்ணில் மண்ணைத் தூவித் திமிரென்று அவரை ஏமாற்றுகிற சதுரகை, இவ்வளவும் யார் கொடுத்தார்கள் என்று வியந்து கொண்டே நடந்தார். எருக்கங்காட்டில் கூட மழை பெய்யத்தான் செய்கிறது. ஆனால் அதில் மட்டும் பெய்தால் என்ன செய்ய?

விருப்பமில்லாமல் நடந்து கொண்டிருந்தார் அவர். கால் மரத்து நகர முடியாமல் கிடக்கும் குழந்தையின் நினைவுதான் அவரை இழுத்துக் கொண்டு போயிற்று. கேட்டு, நீண்ட பாதை, கூடங்கள், கட்டுகள்—எல்லாவற்றையும் கடந்து மாடிக்குப் போன பொழுது வழக்கம் போல் சிவபாக்கியம் மட்டும்தானிருந்தாள். குளிர் இயந்திரத்தின் ஹூம்காரம் வெளியோசைகளைத் தடுத்து விட்டுக் கேட்டுக் கொண்டிருந்தது.

''உங்களைக் காலமே வந்து பார்க்கணும்னு நெனைச்சேன். பாகவதர் வரலே'' என்றாள் சிவபாக்கியம்.

''என்ன விசேஷம்?''

''ஏதோ பார்க்கணும்னு தோணிச்சு.''

''நீங்களே வந்திருக்கலாமே.''

''அவங்க வீட்டிலே இருந்தாங்க. பண்டிகை கொண்டாடறப்ப நான் எப்படி வர்றது?''

''என்ன பண்டிகை?''

''அவங்க வீட்டிலே கால் தரிச்சாங்களே முழுசா ஒண்ணரை நாளைக்கு—அந்தப் பண்டிகைதான்.''

சிவபாக்கியத்தின் முகம் ஒரேயடியாக மலர்ந்திருந்தது.

''அப்படியா? பேஷ்!''

''நேத்துக் காலையிலே நீங்களும் பாகவதர் ஐயாவும் அந்தண்டை போனப்பறம் வந்தவங்க இங்கேயே இருந்திட்டாங்க. சாயங்காலம், ராத்திரி, இன்னிக்குக் காலமே—எல்லாம் இங்கேயே இருந்தாங்க!''

''பேஷ், பேஷ்.''

''நீங்க போகும் போது அவங்களைப் பார்த்தீங்களாம். நீங்கதான் ஏதாவது சொல்லியிருப்பீங்கன்னு நினைச்சேன்.''

''நான் ஒண்ணும் சொல்லலியே!''

''அப்படீன்னா, நீங்க நினைச்சாவது இருப்பீங்க. இவங்க ஒருநாள் வீட்டோட இருக்கக் கடவதுன்னு.''

அனந்தசாமிக்குச் சிரிப்பு வந்து விட்டது.

''இங்கேயே நேத்து மத்தியானம் சாப்பிட்டாங்க. சாயங்காலம் என் கையாலேயே கோதுமை ரவா சொஜ்ஜியும் வெந்தயத் தோசையும் செஞ்சு சாப்பிட்டாங்க. அப்புறம் ராத்திரி வெளியே போவாங்க போலிருந்தது. கீழே ஆபீஸிலே ஒரு மணியிருந்தாங்க. அப்புறம் இங்கே வந்து ராத்திரிபதினொரு மணி வரைக்கும் பல்லாங்குழி ஆடினாங்க. குழந்தை அழுது வச்சிக்கிட்டுச் சோழியைப் போட்டுக்கிட்டிருந்தான். அதிலே பிடிச்சுது. காலை வலிக்குதப்பான்னான் குழந்தை. வலிக்குதான்னு பத்து நிமிஷம் தடவிக் கொடுத்தாங்க. அவனுக்கு ரண்டு கதை சொன்னாங்க. அப்புறம் படுத்திட்டாங்க. காலமே பத்து மணியிருக்கும். நேத்துப் பண்ணின சொஜ்ஜி பாக்கியிருந்தது. அப்பம் பண்ணியிருந்தேன். இரண்டையும் சாப்பிட்டுட்டு வெளியே போனாங்க. எனக்குக் கூட மனசுக்குக் கஷ்டமாயிருந்திச்சு.''

''என்ன?''

''என் ஒருத்திக்காக வேலையெல்லாம் விட்டுட்டு வீட்டிலேயே இத்தினி நேரம் குந்திட்டாங்களேன்னுகூட நினைச்சுட்டேன். பத்து மணிக்கு வெளியே போய் விட்டு வரேன்னு சொன்னப்ப, எங்கே, எப்ப வர்றீங்கன்னுகூடக் கேக்கலே. சரின்னு விட்டேன். எத்தினிவேலையோ பாவம்!''

> தனி மனிதனின் மனச்சாட்சிப்படி, தர்மத்தின் அடிப்படையில் செல்வம் பிரிக்கப்பட வேண்டும் என்ற கொள்கையுடையது சுதந்திரக் கட்சி. சட்டத்தின் மூலம் பலாத்காரமாகப் பிரிக்கப்பட வேண்டும் என்று சோஷலிஸ்டுகள் சொல்லுகிறார்கள். இதன் விளைவு சொல்லி முடியாத துன்பம் தான். சட்டத்தின் மூலம் பிரிக்கப்பட்ட செல்வம் உற்பத்தியைப் பெருக்காது. சோஷலிஸத்தின் கீழ் உற்பத்தியைப் பெருக்க வேண்டுமென்றால் பலாத்கார எதேச்சாதிகார முறைகளைக் கைக்கொள்ள வேண்டும். தர்மத்தினால் உந்தப்பட்டுப் பிரிவினைசெய்யப்பட்ட செல்வம், மக்கள் உற்சாகத்தையும் ஊக்கத்தையும் வளர்த்து உற்பத்தியையும் பெருக்குகிறது. தயை, அன்பு ஆகிய மனிதப் பண்புகளையும் போற்றிக் காப்பாற்றுகிறது.—ராஜாஜி

பெண்ணின் மனசு எவ்வளவு விசித்திரமானது என்று எண்ணி அவளை ஒரு கணம் பார்த்தார் அனந்தசாமி.

''ராத்திரி இரண்டு மணிக்குப் பையன் முழிச்சிக்கிட்டுக் கூப்பிட்டான். கிட்டே போனேன். கால் வலிக்குதுன்னான். அவரு அப்ப கண்ணசந்திருந்தாரு. எழுப்பலே. நான்தான் போய்க் காலைத் தடவிக் கொடுத்தேன். மூணு மணிக்கப்புறம்தான் தூங்கினான்'' என்றாள் சிவபாக்கியம்.

''மரத்துப் போன கால் வலித்ததானால், மருந்து வேலை செய்யத் தொடங்கி விட்டது என்றுதான், அர்த்தம். வலி கொஞ்சம் அதிகமானாலும் பரவாயில்லை; என்னமோ ஏதோவென்று மருந்தை நிறுத்தி விடாதீர்கள். வேறு மருந்து ஏதாவது கொடுத்து விடாதீர்கள். இரண்டும் பிரயோசனமில்லாமல் போயிடும்.''

''எனக்கு என்ன பைத்தியமா பிடிச்சிருக்கு? ஒரு வருஷத்துக்கப்புறம் கால் இருக்கிறதான நினைப்பு வந்து வலிக்குதுங்குது புள்ளெ. எத்தினியோ மாசம் கழிச்சு முழுசா ஒண்ணரை நாளு வீட்டுலே தங்கியிருக்காரு அதைப் பெத்தவரு.... நீங்க இரண்டு தரம் வந்து பார்த்தா தேவலாம் போல இருக்கு. நானாவது குழந்தையை எடுத்துக்கிட்டு வரேன்'' என்றாள் சிவபாக்கியம்.

''நான் வீட்டிலே இருக்கிற நேரம் நிச்சயமில்லே. முடிந்தவரையில் வருகிறேன்...வாருங்கள்...போய்க் குழந்தையைப் பார்ப்போம்'' என்று சொல்லிக் கொண்டே உள்ளே போனார் அனந்தசாமி.

(தொடரும்)

# தளராத ஒரு மனம்...

வார்ப்பிலும் இயந்திர அமைப்பிலும் உயர்தர நுட்ப வேலைப் பாடு நிறைந்த 'பெரிய மணி' ஒன்று—20டன் கலவைப் பொருள் எடையுள்ளது—ஜம்ஷெட்பூரிலுள்ள நவீன உருக்காலைக்குத் தேவைப்பட்டது. ஏற்ற இயந்திரக் கருவிகள் இருந்தாலே அதைத் தயாரிப்பது அரிது. ஆனால் 1958ல் அவை ஒன்றும் இருக்கவில்லை. வெளி நாட்டிலிருந்து இறக்குமதி செய்வதைத் தவிர வேறுவழி இல்லை என்றே அனைவரும் நினைத்தனர்—ஒருவரைத் தவிர. அவரே உறுதியும் திறனும் நிறைந்த இளம் எஞ்ஜினியர் என். பி. நாயக்.

ஓய்வு நேரத்திலெல்லாம் இந்தப் பிரச்னைக்கு வழிகாண சிந்தித்த நாயக், தமது கருத்துக்களை, சிறிது சிறிதாக, கணிதத் தேற்றங்களாகவும், வரை படங்களாகவும் தெளிவாக வெளிப் படுத்தினார். கூடவே, 'பெருமணி'யை அமைப்பதற்கு ஏற்ற இயந்திரக் கருவி ஒன்றையும் தயாரித்தார். இதற்காக போரிங் மெஷின் ஒன்றைப் படிப்படியாகத் திருத்தியமைத்தார். சில நாளில் அவர் தமது சகாக்களுடன் 'பெருமணி'யைத் தயாரித்து விட்டார். அளவு, அமைப்பு, நுட்பம் எதிலும் சிறிதுகூட தரக் குறைவு இருக்கவில்லை. நாயக்கின் சிறந்த முயற்சியைப் பாராட்டி டாடா ஸ்டீல் ஸ்தாபனத்தார் அவருக்கு ரூ. 10,000 பரிசளித்தனர். தொழிற் பட்டறையில் புது முயற்சிகளை ஊக்குவிக்க, சென்ற பத்தாண்டுகளாக வழக்கிலிருக்கும் பரிசுத் திட்டத்தில் இதுவே உயர்ந்த தொகை.

நாயக்கைப் போன்றவர்கள் ஜம்ஷெட்பூரில் ஓர் உயரிய மரபைப் பேணி வருகின்றனர்: 'உலகத் தொழிலனைத்தும் தானே உவந்து செய்யட்டும் இந்தியன்' என்று ஜம்ஷெட்ஜி டாடா போதித்ததை நினைவூட்டுகின்றனர்.



# விந்தியாவலி

எஸ். ரங்கநாயகி

நகரெங்கும் தோரணங்களாலும் மாவிலைகளாலும் அலங்கரிக்கப்பட்டு விட்டன. வீதிகளில் நீர் நிரைவிட்டுக் கோல மணிகளைக் கோர்த்து விட்டனர். வீடுகள் ஒவ்வொன்றும் கொடிகளாலும் பாங்குற அழகு செய்யப்பட்டிருந்தன. ஒரு பக்கத்தில் வாத்தியங்களிலும் பாட்டுக்களிலும் மக்கள் மனம் மலர, மற்றொரு பக்கத்தில் நாட்டியத்திலும் கேளிக்கையிலும் குதி நடை போட்டுக் கொண்டிருந்தனர். இன்று அவர்கள் அரசர் பலி மகாராஜன் இந்திராதி தேவர்களை யெல்லாம் வென்று பெரும் வெற்றியுடன் திரும்பி வருகிறார்.

மாளிகையில் பலி சக்கரவர்த்தியின் பிரிய பத்தினி விந்தியாவலி அரண்மனை முழுதும் ஒரு முறை சுற்றிப் பார்க்கிறாள். வரவேற்புக்கான ஏற்பாடுகளெல்லாம் தயாராகி விட்டன. இனி, தன்னை அலங்கரித்துக் கொள்ள வேண்டியதுதான் பாக்கி நிற்கிறது. கயல் விழிகளுக்கு அஞ்சனம் தீட்டி, நெற்றியில் திலகம் வைத்து விட்டாள். கேசக் குழல் சுருட்டிக் கொண்டையும் போட்டு விட்டாள். சிவந்த பட்டாடை உடுத்தி அவள் வெளியே வந்த போது அப்ஸரஸ் மாதிரி தோற்றம் அளித்தாள்.

ஆவலுடன் வழி மேல் விழி வைத்து விட்டாள் விந்தியாவலி. இப்படிப்பட்ட அவள் குதூகல நிலை வருமா என ஏங்கித் தவித்தவள். அந்தக் காலத்தை நினைத்தால் இப்போதும் மனம் வேதனையடையத்தான் செய்கிறது.

இந்திரனால் தோல்வியுறச் செய்யப்பட்ட நிலை அப்போது. சோர்ந்து, கவிழ்ந்து வீரமும் மானமும் போய் உயிரே அணைந்து விட்டது போல் அமர்ந்துவிட்ட கணவரைத் தேற்றுவதே பெரும்பாடாகி விட்டது.

பிருகு வம்சத்து அந்தணர்களுக்கு அவள் இப்போதும் கடமைப்பட்டிருக்கிறாள். நடுக்கடலில் தவிக்கும் மாலுமிக்குக் கலங்கரை விளக்காகத்தான் அவர்கள் தோன்றினார்கள். யாகம் செய்து வைக்க முன்வந்தார்கள். பக்தி, சிரத்தையுடன் பலியும் யாகம் செய்தான். யாகத்துக்குக் குறையேதும் நேர்ந்து விடவில்லை. அதன் காரணமாக மகத்தான மதிப்பும், குதிரைகளும், தனுசும், அம்பறாத் தூணியும், திவ்ய கவசமும் ஒப்பற்றதாகக் கிடைத்தன. பாட்டன் பிரஹலாதன் வாடாத பத்மங்களுடைய மாலையையும், சுக்கிரன் ஒரு சங்கத்தையும் கொடுத்தனர்.

பக்தியுடன் பிரஹலாதனை வணங்கினான் பலி. பிறகு மனைவியிடம் வந்தான். அவளோ வாய் விட்டுச் சொல்ல முடியாமல் தவித்தாள். வெற்றியுடன் திரும்ப வேண்டும் கணவர். வேறு விதமாக நேரிடில்... ஐயோ! நினைக்கவும் முடியாது. கணவர் என்ன செய்து கொண்டு விடுவாரோ!

''ஸ்வாமி...!'' அவள் குரல் அடைத்தது.

''என்ன விந்தியாவலி, விடை கொடுக்க என் தயக்கம்?'' பலி பத்தினியை அணைத்த படியே கேட்டான்.

''ஒன்றுமில்லை. யுத்தத்தில் ஏதேனும்...''

அவள் வார்த்தைகளை முடிக்கவில்லை. பலி சிரித்தான். ''விந்தியா! இதென்ன பேடியைப் போன்ற பேச்சு? நீ ராக்ஷஸக் குலத்தில் பிறந்தவள். பிரஹலாதனின் பேரன் மனைவி, விரோசனின் மருமகள். இவ்விதம் கலங்கலாமா? கணவர் வீர மரணம் எய்தினாலும் நீ கலங்கக் கூடாது. வீரப் பெண்கள் யுத்தத்துக்கு அஞ்சலாமா?''

விந்தியாவலி சட்டென்று தன்னைத் தேற்றிக் கொண்டாள். சென்றதை மறந்து கணவர் குதூகலத்துடனும், உற்சாகத்துடனும் கிளம்பும்போது அவள் ஏன் இவ்விதம் சோர்வைக் காட்ட வேண்டும்?

கமல முகத்தை விரித்தாள். அதில் புன்முறுவலாகிய தேனை நிரப்பினாள். கண்களில் ஒளிகாட்டியது. கணவருக்கு மங்கள திலகமிட்டுப் பாதங்களில் பணிந்து எழுந்தாள். ஒரு நிமிடம் கண் கொட்டாமல் மனைவியை நோக்கிய பலி, ''விந்தியாவலி! உன் முகக் காந்தியே எனக்கு வழிகாட்டியாக இருந்து என் வெற்றிக்கு வழியாக இருக்கும்'' என்றான். விந்தியாவலி முகத்தில் செம்மை படரக் கண்களைத் தழைத்துக் கொண்டாள்.

அன்று யுத்த கீதத்துடன் கிளம்பிய பலி இன்று ஜெயபேரிகையுடன் திரும்புகிறான். எதிர் கொண்டழைக்க விமரிசையாக ஏற்பாடுகள் நடந்து விட்டன.

அதோ, பேரிகை முழக்கம். மங்கள கீதம் சமீபித்து விட்டது.

''அம்மா விந்தியாவலி, மங்கல நீரெடுத்து வாம்மா''—பிரஹலாதன் கட்டளை யிட்டார்.

விந்தியாவலி ஓடிச் சென்று நீர் எடுத்து வருவதற்கும் பலியின் தேர் வாசலை யடைவதற்கும் சரியா யிருந்தது.

''ஸ்வாமி!'' கண்கள் ஆனந்தக் கண்ணீர் முத்துக்கள் சிதறிப் பலியின் பாதங்களை அர்ச்சிக்க ஆரம்பித்தன. பலி தன் இதய ரத்தினத்தை மார்போடு அணைத்துக் கொண்டான். விந்தியாவலி உடனே ஒரு தங்க ஹாரத்தை எடுத்து வந்து அவன் கழுத்தில் இட்டாள்.

மறுநாள் அரண்மனை மீண்டும் கோலாகலமாகக் காணப்பட்டது. பலி தன் மனைவி விந்தியாவலியுடன் உயரிய ஆசனத்தில் அமர்ந்திருக்க, அருகில் குரு சுக்கிராசாரியாரும் ஓர் ஆசனத்தில் கம்பீரமாக வீற்றிருக்கிறார். சபை பிராம்மணோத்தமர்களாலும், மற்று முன்னோராலும் நிறைந்திருக்கிறது.

பலி தன் இரு கைகளாலும் பொன்னையும் மணியையும் வாருகிறான். பிருகு வம்ச அந்தணர்களுக்கும் மற்றவர்களுக்கும் வழங்கு



"என் பெண்ணைக் கலியாணம் செய்து கொண்டால் ஒரு பெரிய மாந்தோப்பை எழுதி வைக்கிறேன்!"

"எப்பொழுது வந்து பார்க்கலாம்?"

"பெண்ணையா?"

"இல்லை! மாந்தோப்பை."

கிறான். ஒருவர் பின் ஒருவர் வந்து கொண்டேயிருக்க அவனும் சளைக்காமல் கை நோக எடுத்து எடுத்து வழங்குகிறான். குருவும், பிரஹலாதனும் ஆனந்தத்துடன் பார்த்தபடி அமர்ந்திருக்கிறார்கள். தானம் பெற்றவர்களின் முகத்திலும் எல்லையற்ற மகிழ்ச்சி.

பொருள்கள் அத்தனையும் தானம் சென்று விட்டன. பலியும் இருப்பிடத்திலிருந்து நகர ஆரம்பித்தான். அந்தச் சமயம்தான் ஒருவர் பாக்கி நிற்பது தெரிந்தது. அவருக்கான தானமாக எதை வழங்குவது? பலி யோசனையில் ஆழ்ந்து விட்டான்.

சுக்கிராச்சாரியார் அவனை நோக்கினார். "ஏனப்பா நின்று விட்டாய்?"

"தானம் கொடுக்கப் பொருள் அறியாது நின்று விட்டேன், ஸ்வாமி!"

குரு சிரித்தார். "தோளில் ஆட்டைப் போட்டுக் கொண்டு யாராவது தேடுவார்களா? அல்லது வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்கு அழுவார்களா? கழுத்தில் மின்னும் தங்க ஹாரத்தை மறந்து விட்டாயோ? அதுவும் தானம் கொடுப்பதற்குத் தகுதியான பொருள்தானப்பா!"

பலி தயங்கி நின்றான். அந்த ஹாரத்தைப் பற்றி அவனுக்கு நினைவு இருக்கத்தான் செய்தது. ஆயின் மனைவியின் அன்பளிப்பான அப்பரிசை எப்படி எடுப்பது? மனைவியின் உள்ளம் நொந்து போகுமே!

பிரஹலாதன் பலியைக் கூர்ந்து நோக்கினார். அவனது மனக் குறிப்பை அறிந்தார். அவன் தயங்கும் காரணத்தையும் புரிந்து கொண்டு விட்டார். பிறகு "குழந்தாய், பலி!" என விளித்தார்.

பலி திரும்பிப் பாட்டனை நோக்கினான்.

பிரஹலாதன் புன்னகை புரிந்தார். பிறகு விந்தியாவலியை நோக்கி, "அம்மா, மனைவி என்று உன்னை அங்கீகரித்து உன்னோடு உடலோடும் உள்ளத்தோடும் பழகிய பலிக்கு இன்னும் உன் குணம் புரியவில்லையேம்மா!" என்று கூறியவர், பிறகு பேரனை நோக்கி, "பலி, தன் மனத்துக்குத் துயரம் அளிப்பதே யாயினும் கணவருக்குப் புகழும் கீர்த்தியும் வரும் வழியில் உன் மனைவி குறுக்கே நிற்க மாட்டாள், அப்பா. அதனால் ஹாரத்தைத் தானம் செய்வதால் உனக்கு வரும் ஆசிகளுக்கு இடையே உன் மனைவி விக்னமாக நிற்க மாட்டாள்" என்றார்.

விந்தியாவலியின் மனத்தில் சட்டென்று விழிப்புக் கொடுத்தது. போருக்குப் புறப்படும் போது கணவர் கூறிய வார்த்தைகளே இவை. இப்போது பாட்டனார் வாயிலிருந்துவருகிறது. நல்ல கருத்துடனே அவற்றை ஏற்க வேண்டும்.

பலி மனைவியை நோக்கினான். அவள் மனச் சம்மதம் கண்களில் ஒளியிட்டது.

தங்க ஹாரத்தை அடைந்த அந்தணர் குதூகலத்துடன் பலியை வாழ்த்தியபடி தம் இருப்பிடத்துக்குத் திரும்பினார்.

சில காலம் சென்றது. தேவர்களுடைய பட்டணமாகிய அமராவதியிலிருந்துகொண்டு பலி மூன்று லோகங்களையும் ஆக்கிரமித்துக் கொண்டான். அவனால் ஆக்கிரமிக்கப்பட்ட பிருகு வம்சத்து அந்தணர்கள் மேலும் ஒரு யோசனை கூறினர். அவர்களது யோசனைக்குச் செவிசாய்த்துப் பலி உடனே அச்வமேத யாகத்தைச்செய்ய நிச்சயித்துக்கொண்டான்.

அந்தப்புரத்தில் தோழிகளுடன் அமர்ந்திருந்தாள் விந்தியாவலி. அது சமயம் சுக்கிராச்சாரியார் அவளைத் தேடி வந்திருப்பது தெரிந்தது.

ஓடோடி வந்து அவரை வணங்கினாள் விந்தியாவலி. "ஸ்வாமி! இவ்விடத்தைத் தேடித் தாங்கள் வந்ததில் நான் தன்யளானேன். ஒரு சிறு கட்டளை அனுப்பியிருந்தால் தங்களிடத்துக்கே நான் வந்திருப்பேனே!" என்றாள்.

"நீ இப்படிக் கூறுவதே உனக்கு என்னிடம் இருக்கும் மரியாதைக்கு அறிகுறி. பலிக்கு ஏற்ற மனைவி. நான் மகிழ்ச்சி அடைகிறேன்" என்று கூறிய குரு, சற்று நிறுத்தி விட்டுப் பிறகு கூறினார்: "உனக்குத் தெரிந்திருக்குமே......!"

"என்ன ஸ்வாமி!" பாத பூஜையை முடித்துவிட்டுத் தலைநிமிர்த்தினாள் பலிபத்னி.

"பலி அச்வமேத யாகம் செய்யப் போகிறான். அதைப் பற்றி உன்னிடம் கூறவே தான் வந்தேன்."

"அச்வமேத யக்ஞம் ஆரம்பிக்கப்போவதை அறிந்து நானும் மகிழ்ச்சி யடைந்தேன். யாகம் நிர்விக்னமாக முடிய வேண்டுமென்பதுதான் என் அபிலாஷை."

"உன் உத்தமமான குணத்தை நான் அறிவேன், விந்தியாவலி! அதனால் தான் துணிவுடன் உன்னிடம் கூறுகிறேன். பலி ஆரம்பிக்கும் இந்த யாகத்தில் உனக்கும் பங்கு உண்டு. யாகம் ஒழுங்காக முடிய வேண்டுமென்றால் அவன் மட்டுமல்ல, அவனுக்குப் பத்னியான நீயும் கடுமையான விரதங்களை யெல்லாம் அனுஷ்டிக்க வேண்டும்..."

"தங்கள் சித்தம் ஸ்வாமி!"

## டாக்டர்கள் மில்க் ஆப் மக்னீஷியாவையே சிபாரிசு செய்கிறார்கள் — மிதமாக பேதி ஆவது, அமிலத்தை எதிர்த்து பூர்ண நிவாரணமளிப்பதில் சக்தி வாய்ந்தது.

உலகத்திலுள்ள ஆயிரக்கணக்கான டாக்டர்களையும், சிசு வைத்திய நிபுணர்களையும், பிரசவ வைத்தியர்களையும், ரண சிகிச்சை வைத்தியர்களையும் "நீங்கள் உங்கள் நோயாளிகளுக்கு பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியாவை சிபார்சு செய்கிறீர்களா?" என்று கேட்டதற்கு அவர்களில் அனேகர் "ஆம்!" என்று பதிலளித்தார்கள்.

ஆம், குழந்தைகளுக்கும், பிரசவம் மற்றும் ரண சிகிச்சை பெற்ற நோயாளிகளுக்கும் கூட பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா மிகவும் பலன் தரக்கூடியது என்று டாக்டர்கள் கருதுகிறார்கள்.

இதில் ஆச்சர்யமொன்றுமில்லை!

பேதி மருந்து ஆனாலும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா நிதானமாகவும், செம்மையாகவும், இதமாகவும் வேலை செய்கிறது; ஜீரண உறுப்புகளை பலவீனப்படுத்துவதில்லை. அமிலங்களை அடக்கும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வயிற்றுக் கோளாறு, வாயு, நெஞ்செரிச்சல் மற்றும் மலச்சிக்கலுடன் வரும் இதர அமில உபாதைகளிலிருந்தும் நிவாரணமளிக்கிறது.

எந்தவிதமான பேதி மருந்தும் இம்மாதிரி சுகமான பரிபூரண நிவாரணமளிக்காது!

உங்கள் டாக்டரைக் கேளுங்கள்! ஒவ்வொரு வீட்டிலும் கட்டாயம் இருக்கவேண்டியது




# பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா

REGD. TRADE MARK




இரைப்பையில் மித மிஞ்சிய அமிலத்தால் ஏற்படக்கூடும் அஜீரணத்திலிருந்து உடனடியாக நிவாரணம் பெற எங்கும், என்றும் இன்பமான, இனிப்பான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வில்லைகளை உட்கொள்ளுங்கள். 4 வில்லைகள் கொண்ட கையடக்கமான பாக்கெட்களிலும், 75, 150 கொண்ட புட்டிகளிலும் கிடைக்கும்.




பூரண விநியோகஸ்தர்கள்:
டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் ப்ரைவேட் லிமிடெட்

''விரதம் கடுமையானவைதாம். ஆயின் கணவருக்குப் பெயரும், புகழும், கீர்த்தியும் தரும் வழியானது தனக்குக் கஷ்டம் தருவதே யாயினும் மனைவி அதைப் பொருட்படுத்த மாட்டாள் என்பதை நீ அறிவாயல்லவா..''

விந்தியாவலியின் மனத்தில் மின்னல் பளிச்சிட்டது. இதே பொருளுடன் யுத்தத்துக்குப் புறப்படும்போது கணவரும், தானம் கொடுக்கும்போது பாட்டனாரும், யாகம் ஆரம்பிக்கும் நேரத்தில் குருவும் வார்த்தைகள் கூறி விட்டனர். என்ன கஷ்டம்நேரிடினும் இவ்வார்த்தைகளை அவள் உண்மையாக்கவே விரும்பினாள்.

இனி நேரப் போகும் நிகழ்ச்சிக்கு இவ்வார்த்தைகள் ஒரு ஆசிஸ் என்பதை அப்பொழுது ஒருவரும் அறிந்திருக்கவில்லை.

அச்வமேத யாகம் ஆரம்பமாகி விட்டது. நர்மதா நதியினுடைய வட கரையில் பிருகு வச்ச மென்கிற க்ஷேத்திரத்தில் பலிச் சக்ரவர்த்தி யாகத்தை நடத்திக் கொண்டிருந்தான். மனைவி விந்தியாவலி சுக்கிராச்சாரியார் கூறிய விரதங்களை ஒரு சிறு தவறும் நேரிடாமல் அனுஷ்டித்துக் கொண்டிருந்தாள். கணவருக்கு அருகிலிருந்து கொண்டு பணிவிடையும் செய்து கொண்டிருந்தாள்.

அந்நேரத்தில்....

அதோ யார் அது? பால சூர்யனோ, அக்னியோ! கண்களைக் கூசச் செய்து நான்கு புறமும் காந்தியைப் பரப்பிக் கொண்டு, சுவர்ண தேகத்துடன், மூர்த்தி சிறிதேயாயினும் கீர்த்தியைப் பெரிதாக்கிக் கொண்டு யாகசாலையின் உள்ளே நுழையும் தேஜோமய வாமனரை நோக்கி அனைவரது கண்களும் சென்றன.

பலியும், அவனது சகதர்மிணி விந்தியாவலி இருவருமே உள்ளே வந்தவரை நோக்கினர். விந்தியாவலியின் கண்களில் அவ்வுருவம் பதிந்ததும் மனத்தில் எல்லையற்ற மகிழ்ச்சி அவள் அறியாமலே தோன்றியது போல், வலது கண் சற்றே துடிக்க மனத்திலும் சிறு சஞ்சலம் குடி புகுந்து விட்டது. இது ஆனந்த நிலையா, துயர நிலையா? அவளுக்கு ஒன்றுமே புரியவில்லை. தவித்து நின்றாள்.

பலியோ புன்முறுவலுடன் வந்தவரை உபசரித்தான். ஆசனம் தந்து, பாதம் கழுவிச் சிரசில் ஏற்றபின் முகமன் கூறினான். இவனது பக்தியில் வாமனரோ சற்றுத் துயரமும் கொண்டார். சுக்கிராச்சாரியார் அனைத்தும் நோக்கியபடி அமர்ந்திருந்தார்.

''ஸ்வாமி, இந்த யாக சாலையில் நுழையும் போதே உத்தேசம் புரிந்திருக்கும். வந்தபின் மகத்துவம் புரிந்திருக்கும். தங்கள் வரவால் நான் கிருதார்த்தனானேன். தங்களுக்கு யாது விருப்பம் எனக் கூறின் அதை நான் நிரமேற் கொள்வேன்.'' பவ்ய பந்தமாகக் கூறினான் பலி.

சிறிய உருவில் அமர்ந்திருந்த பரந்தாமன் பலியை நோக்கி விட்டுச் சற்று மௌனமாக இருந்தார். பிறகு கூறினார்: ''என்னைப் பார்த்தாலே நான் வந்திருக்கும் காரணம் உனக்குப் புரியுமே!''

''ஓரளவு புரிகிறது, ஸ்வாமி! உங்கள் தேஜஸும் காந்தியும் பெரிதாக திகழும்போது நீங்கள் சிறிய உருவில் இருப்பதைப் பார்த்தால் என்னிடம் தாங்கள் ஏதோ யாசிக்க

> நிலத்தை உழுதவுடனே பயிரை எதிர்பார்ப்பது போல் சிலர், இந்தப் புதுக் கட்சியினால் என்ன விளைந்தது என்று கேட்கிறார்கள். நிலத்தை உழுத நான் என்ன பதில் சொல்வேன்? என்னுடைய விதை நல்ல விதை; ஏரைப் பிடித்து நன்றி உழுது விதைத்தாயிற்று. மக்களுடைய அன்பும் உற்சாகமும் பெய்தால் நல்லது விளையும் எனக் காத்திருக்கிறேன். —ராஜாஜி

வந்திருப்பதாகவே நினைக்கிறேன். பெரியவர்களும் யாசிக்கும்போது குறுகி விடுவார்கள் என்று சொல்லக் கேட்டிருக்கிறேன். குற்றமிருப்பின் க்ஷமிக்க வேண்டும்....'' மென்னக் கூறினான் பலி.

''சரியாகத்தான் சொல்லி விட்டாயப்பா. என் உருவத்தைப் போலவே நான் யாசிக்கும் பொருளும் சிறியதுதான்....''

''பெரிதாயினும் கேளுங்கள் ஸ்வாமி. கொடுப்பதற்குத் தயாராக இருக்கிறேன்.''

வாமனர் மெள்ள நகைத்துக் கொண்டே கூறினார். ''மூன்று அடி பூமியே நான் யாசிக்கும் பொருள்.''

பலி பெரியதாகச் சிரித்தான். ''இச் சிறு யாசகத்தை நீங்கள் இவ்வளவு பீடிகையுடன் கேட்டு விட்டதை நினைத்து ஆச்சரியமடைகிறேன். இதை விடப் பெரிதான பொருளைத் தாங்கள் யாசிப்பதையே நான் விரும்புகிறேன்.''

''மூன்று அடிகளில் திருப்தி யடையாத மனம் மூவுலகு கிடைத்தாலும் திருப்தியடையாது. இந்த மூன்று அடிகளை நீ எனக்கு அளித்தாலே போதும்...''

சுக்கிராச்சாரியாரின் மனம் விழிப்புற்றது. தம் சீடனைக் காப்பாற்ற அவர் முனைந்தார். ''பலி ஏமாந்து விட்டாய் நீ. இதோ வந்திருப்பவர் தைத்திரியர்களை நாசமாக்க உருவெடுத்தவர் ஆதி நாராயணன். இரண்டு அடிகளைப் பரப்பி மூவுலகையும் அளந்துவிட்டு மூன்றாவது அடிக்கு உன் நாசத்தைத் தேடி விடுவார். தர்மங்களை அறியும் போது, சரீரத்துக்கு ஆபத்து நேரும்போது பொய் சொல்வதில் தவறில்லை என்று தெரியும். கொடுத்த வாக்கை நீக்கிவிடு. மூன்று அடிகளைத் தானம் செய்துவிடாதே...'' படபடத்துக் கூறினார்.

பலியின் முகத்தில் ஆச்சரியம் இல்லை, தவிப்பு இல்லை, பச்சாதாபம் இல்லை. அமைதி நிலவிக் கிடந்தது. ''ஸ்வாமி! எக்கஷ்டம் நேரிடினும் நான் துணிந்து விட்டேன். கொடுத்த வாக்கை மீற மாட்டேன். யாசகனை ஏமாற்ற மாட்டேன்.'' தனது வாக்கில் ஸ்திரமாக நின்ற பலி சாந்தமாகப் பதில் கூறினான்.

அனைத்தும் நோக்கியபடி அருகே நின்றிருந்த விந்தியாவலி ஒருக்ஷணம் மகிழ்ந்தாள்; ஒரு க்ஷணம் நடுங்கினாள். வந்திருப்பவர் பரப்பிரும்மன் என்று குருவின் வாக்கில் கேட்டபோது குதூகலித்தாள். கணவருக்கு நாசம் நேரும் எனக் கேட்டபோது உடல் ஆடியது.

இப்பொழுது பலி இந்திரனுடன் யுத்தம் செய்யப் புறப்பட்ட காட்சிதான் அவள் முன் தோன்றியது. அவன் விடை கொடுக்கத் தவித்தபோது, கணவருக்கு எது நல்லதோ, அது தனக்கு வருத்தம் தருவதே யாயினும் மனச் சோர்வு அடையாது சிரித்த முகத்துடன் இருக்கப் பழக வேண்டும்' எனக் கூறினரே.... இவ் வார்த்தைகள் நினைவுக்குள் நுழைந்த போது.... பாட்டன் பிரகலாதன் அவள் அளித்த பரிசைக் கணவர் தானம் கொடுக்கத் தயங்கியபோது கூறிய இதே பொருள்கொண்ட வார்த்தைகளும் யாசகம் ஆரம்பித்த போது சுக்கிராச்சாரியார் கூறிய அதே தத்துவமும் .... ஐயோ...... ஏன் இப்பொழுது நினைவுக்கு வருகின்றன....

சித்தம் கலங்கியது. தலை சுற்றியது........

எதிரே அவள் கணவரை ஆளப் போகும் பரந்தாமன் ..... அவர் அருகே எள்ளளவும் துயரம் காணாது சிரித்த முகத்துடன் பலி.....

''ஸ்வாமி!''

மென் குரல் கேட்டுப் பலி திரும்பினன். விந்தியாவலி தலைகுனிந்து நின்றாள்.

பலி மெள்ள மனைவியின் அருகில் வந்தான். ''என்ன விந்தியாவலி!''

விந்தியாவலி உடனே பதில் கூறவில்லை.

''என்ன விந்தியாவலி, நீயும் தடுக்க வந்து விட்டாயா? எப்படியாயினும் சரி, கொடுத்த வாக்கை மீறமாட்டேன். சொந்தம், சுற்றம், சம்பத்து....ஏன், சொல்லப் போனல் என் சரீரத்தையும்விடக் கொடுத்த வாக்கைக் காப்பாற்றுவதையே நான் மேல் ஸ்தானத்தில் இருத்தி நோக்குகிறேன்.'' உறுதியாகக் கூறிவிட்டான் பலி.

விந்தியாவலி தலை நிமிர்ந்தாள். ''ஸ்வாமி! எல்லாம் அறிந்த தாங்கள் ஒன்றை மறந்துவிட்டீர்கள். மனைவியை உடையவர்கள் ஒருவனுக்கு யாசகம் கொடுக்கும்போது அது பூரணத்துவம் பெறத் தருமம் ஒன்றுண்டு. மனைவி கைகளில் நீர் வார்க்க, கணவர்...''

சுக்கிராச்சாரியாரோ உள்ளம் உவகை பொங்க அவ்விருவரின் அருகில் வந்தார். தன் சிஷ்யனை 'பலியை நோக்கி, ''பலி, கேட்டுக் கொண்டாயல்லவா? மனைவி உனது அங்கத்தில் பாதி அம்சம். அவள் நீர் வார்த்துக் கொடுத்தாலல்லவோ உன் வாக்கு நிறைவேறும்'' என்றார். விந்தியாவலியாவது தன் வார்த்தைகளுக்குச் செவி சாய்த்து விட்டாளே என்பது அவர் எண்ணம்; மகிழ்ச்சி.

பலி சினத்துடன் மனைவியை நோக்கினான். அவளோ சிரித்தபடி ஸ்வர்ண கலசத்தில் நீர் எடுத்து வந்தாள். பிறகு பலியை நோக்கி, ''ம், சீக்கிரம் தயாராகுங்கள். நான் நீர் வார்த்துத் தருகிறேன். நீங்கள் கொடுத்த வாக்கை நிறைவேற்றுங்கள்'' என்றாள்.

ஆஹா! இது பூலோகமா, கைலாசமா, தேன் அருவியா, அமிருத தாரையா....இவ் வார்த்தைகளைக் கேட்ட பலி மகிழ்வுடன் மனைவியை நோக்கினான் கண்களில் நன்றி பெருக.

புயலைப் பார்த்தார் சுக்கிராச்சாரியார். ''விந்தியாவலி! வருவதை அறியாது செய்யும் மூடத்தனம் இது.''

விந்தியாவலி குருவின் பாதங்களை வணங்கி எழுந்தாள். ''ஸ்வாமி! பிழை இருப்பின் பொறுத்தருள வேண்டும். இந்த யாகம் ஆரம்பிக்கும்போது 'கணவருக்குப் பெரும், புகழும் கீர்த்தியும் தரும் வழியானது தனக்குத் துன்பம் தருவதே யாயினும் மனைவி அதைப் பொருட்படுத்த மாட்டாள்' என்று நீங்கள் கூறிய உபதேசமான வாக்கையே எங்கள் பாட்டனரும், என் கணவரும் என்னிடம் கூறக் கேட்டிருக்கிறேன். இந்த நல் உபதேசத்தை மனத்தில் பதியவிட்டு வைத்திருக்கும் போது இதை எப்படி மீற முடியும்.... ?''

''போதும் உன் பேச்சு. வந்திருப்பது யார் தெரியுமா?'' குரு கர்ஜித்தார்.

''புரிகிறது, ஸ்வாமி! அதனால்தான் என் கடமை அதிகமாகிறது. மூவுலகுக்கும் கர்த்தாவான பரந்தாமனே சிறிய உருக் கொண்டு பெரியவராக என் கணவரை மதித்து யாசகம் கேட்க வந்து விட்டாரெனில் என் கணவர் அவருக்கு யாசகம் கொடுப்பதில் அடையக் கூடிய பெருமைக்கு எதை ஈடு கட்ட முடியும்? இரு அடிகளால் உலகை அளந்து விட்டு, நீங்கள் கூறுவது போல் மூன்றாவது அடிக்கு என் கணவரை ஆட்கொண்டாலும் குறைவில்லை. பரமனடி சேரப் பலர் தவம் கிடக்கும்போது, தானே வலிய வரும் பாதார விந்தங்களை நான் எப்படித் தடுக்க முடியும்? கணவருக்குக் கிடைக்கும் பெரும் பாக்கியத்தின் இடையே நானும் நிற்க விரும்பவில்லை.'' விந்தியாவலி அமைதியாகவே பதில் கூறி விட்டாள்.

சுக்கிராச்சாரியாரோ தன் கட்டளை பலிக்கவில்லை என்ற கோபத்துடன் சாபமிட்டபோது விந்தியாவலி நீர் வார்க்க, பலி பரமனின் பாதங்களைக் கழுவிச் சிரமேற்கொண்டு தாரை வார்த்து யாசகம் கொடுத்து விட்டான்.

ஸ்ரீஹரியின் வாமன ரூபமானது விருத்தியடைய வட்சத்தில் மகாலட்சுமியையும், கண்டத்தில் வேதங்களையும், சிரசில் ஆகாயத்தையும், கண்களில் சூரியனையும், இவ்விதம் நானாவிதமான சராசரங்களை எம்பெருமானின் சரீரத்தில் பலி கண்டான். பூமி, ஆகாயம், இவைகளை ஓர் அடியினாலும் இரண்டாவது அடியால் சுவர்க்கத்தையும் அளந்து விட்ட பெருமான் மூன்றாவதடிக்குப் பலியை நோக்கினார்.

பலி உள்ளம் கலங்க வில்லை. ஒரு நிமிடம் மனைவியை நோக்கினான். அவள் பார்த்துக் கொண்டிருந்த போதே தனது தலையை நாராயணனின் பாதங்களுக்கு அளித்து விட்டான்.

விந்தியாவலியின் மார்பு படபடத்தது.. எந்தப் பாதங்களைக் கோடிக் கணக்கானவர் யுகம் யுகமாகப் பூஜித்தனரோ அத் திருப் பாதங்கள் கணவருக்கு அநாயசமாகக் கிடைத்துவிட்ட மகிழ்ச்சியா .... தன் கண்களுக்கு எதிரிலேயே தன் சம்மதத்தின் பேரிலேயே கணவரை அர்ப்பணித்து விட்ட துயரமா....'ஐயோ! ஒன்றும் புரியவில்லையே! மனத்துக்கு இவ்வளவு சிரமமா!'

கணவருக்குக் கிடைத்த நற்கதியில் மகிழ்வும், கணவர் தன்னை விட்டுப் பிரிகிறாரே என்ற ஏக்கமும் அவளை மாறி மாறி ஆட்கொண்டன. அவள் மெல்லக் கண்களை மூடிக் கொண்டு விட்டாள்.

விந்தியாவலியின் பிரார்த்தனைக்கு இணங்கித்தானே என்னவோ பரந்தாமன் பலியிடம் பிரசன்னராகி அவனைப் பாதாள உலகத்தில் ஸ்தாபித்து விட்டார்.

# வெள்ளம்

வாசவன்

ஓடும் வெள்ளத்துக்கு உறவு பெரிதில்லை. பந்தபாசம் அதன் நெஞ்சைப் பிழிவதில்லை. மண்மாதாவின் இதயத்தைக் கிழித்துக் கொண்டே வந்த உறவு வழியை ஒரு கணமேனும் அது திரும்பிப் பார்ப்பதே இல்லை. ஓடுகிற வெள்ளம் ஓடுகிற வெள்ளம்தான்.

என் இருபத்தைந்து வருஷ வாழ்க்கையில் உயிர் மூச்சாகக் கலந்து விட்ட உறவையும், ஊரையும் உதறிவிட்டு வெள்ளமாக ஓடியவன் மீண்டும் ஊர் திரும்புவேன் என்று நான் அப்போது எண்ணவில்லை.

என் அம்மா சாகப் பிழைக்கக் கிடக்கிறாளாம்! நான் ஊரை விட்டு வந்த நாள் முதல் என்னிடம் அவள் வைத்திருந்த பாசத்தையே படுக்கையாக விரித்துப் படுத்து விட்டாளாம். என்னை என்றாவது ஒரு நாள் பார்ப்போம் என்ற ஆசையில் உயிர் மூச்சை இழுத்து நிறுத்திக் கொண்டிருக்கிறாளாம். இனி ரொம்ப நாள் தாளாதாம்.

சொன்னவன் எங்கள் ஊர் சினிமாக் கொட்டகையில் மக்கடை நடத்திக் கொண்டிருக்கும் ராமன் நாயர்.

ஐந்து வருஷங்களுக்கு முன்னால் என் பிறந்த மண்ணைத் தவிர நான் சொர்க்கத்தைக்கூட நினைத்துப் பார்த்தவனில்லை. என் நினைவின் இறக்கையைக் கத்திரித்துக் கூண்டுப் பறவையாகவே என்னை வளர்த்து விட்ட அம்மாவுக்கு ஓர் உள் நோக்கம் இருக்கவே செய்தது. என் பதினைந்தாவது வயதில் அப்பா அகால மரணமடைந்து விட்ட பிறகு, அம்மாவுக்குத் தன் உலர்ந்து விட்ட வாழ்க்கையில் உலராத பற்றுக்கோடாக நானானேன். அந்தப் பற்றுக் கோட்டுக்கு உலகமே தெரியக் கூடாது. அபிலாஷைகள், கனவுகள் முதலிய வளர்ச்சியின் துருதுருப்புகள் அதன் மேல் நிழல் காட்டக் கூடாது என்னும் மாதிரியில் என்னை மடியில் போட்டு வளர்த்தாள் அம்மா. அந்த மடிக்கு அப்பால் நல்லதும் கெட்டதும் நிறைந்த ஓர் உலகம் இருக்கிறது என்பது தெரியாத குருடனாகவே வளர்ந்து வாலிபனானேன்.

எட்டுத் தலைமுறைக்குக் காணக்கூடிய சொத்து எங்களுக்கு இருந்தது. ஒருவன் புற்று மண்ணாய்ப் புதைந்து போவதற்குப் பரம்பரைச் சொத்து ஒன்றே போதாதா? செல்வத்தாலும், அம்மாவின் செல்லத்தாலும் எந்த உலகத்தைக் காணவும், காண வைக்கவும் பிறந்தேனோ அந்த உலகத்தைத் தலை நிமிர்ந்து பார்க்காமலேயே நான் புதைந்து போய்க் கொண்டிருந்த போது, என் மனம் பத்துப் பிறவிகளுக்குப் போதுமான புத்துணர்வுடன் விழித்துக் கொண்டது.

எறும்பு இரை தேடுகிறது; குளவி கூடு கட்டுகிறது; சிலந்தி வலை பின்னுகிறது—இப்படி எடுத்த பிறவிக்கு இளைக்காத முயற்சிகள் பல செய்தே வாழும் ஜீவராசிகள் என் மனத்தின் உறக்கத்தைக் கலைத்தன.

நான் பிடித்து வைத்த மண் பாண்டமல்ல. பிறப்பென்னும் சூளையில் வெந்து உலகம் என்னும் சந்தைக்கு வந்ததோடு என் பிறவியின் நோக்கம் தீர்ந்து விடக் கூடியதல்ல. நான் செய்யப்பட்டவனல்ல. செயல் புரியக் கூடியவன்.

நினைந்து நினைந்து, உருகி உருகி, எனக்குள்ளிருந்து ஒரு புதிய மனிதன் பிறந்தான்.

அவன் எழுத்தாளன். ஒரு தொழிலதிபதியே பிறக்கக் கூடிய சுகக் கருப்பையிலிருந்து, பொன் போன்ற கருத்துக்களை ஊதி ஊதி உருவாக்கக் கூடிய நெருப்புக் குழி போன்ற அந்த இலக்கியப் பித்தன்தான் முளைத்தெழுந்தான். நான் என்ன செய்ய?

எழுதுவதற்கு உலகம் தெரிய வேண்டும் என்கிறார்கள். உலகத்தைத் தெரிந்தவர் யார் என்று கேட்கிறேன்.

உண்மையைச் சொல்கிறேன். நான் உலகத்தைத் 'தெரிந்து' எழுதவில்லை. ஏனென்றால் எனக்குள்ளேயே நான் 'கண்டு' களித்த உலகத்திலே இல்லாதவை எவையும் இல்லை. அவற்றைத்தான் எழுதினேன்.

'மயில் ஒத்த சாயலாள்' என்று நான் எழுதியதைப் படித்து வெருண்டு எழுந்தவர் யாரும் இல்லை. 'மயிலைப் போலப் பெண் இருந்தால் பார்க்கச் சகிப்பாளா ஐயா?' எதிர் முழக்கம் செய்பவர் எந்தப் பக்கத்திலிருந்தும் வரவில்லை. கம்பனும், காளிதாசனும் பகுத்தறிவை இழக்க வைத்த இந்தப் பழம் கலைக்குப் பின்னோடியாக வந்த என்னைப் பாராட்டியவர்கள் பல்லாயிரம் பேர்.

அவர்களில் ஒருத்திதான் ஈசுவரி என்ற எங்கள் ஊர்ப் பெண். ஆனால் அவள் என் வீடு தேடி வந்து என்னைப் பாராட்டிய போது நான் அதை வெறும் பாராட்டாகவே கருதவில்லை. என் எத்தனையோ பிறவிகளில் தொட்டுத் தொடர்ந்து வரும் பிறவியின் இன்பநிழலை இனம் புரிந்து கொண்ட ஒரு புளகம் என் மனத்தை நீவிக் கொண்டிருந்தது. அதைப் பல்லாயிரம் பாராட்டுக்களில் ஒன்றாக நான் நினைக்க முடியாததற்குக் காரணம் அவள் பேச்சில் இருந்தது.

"உங்கள் கதைகள் என்றால் எனக்கு உயிர். தினம் ஒரு முறையாவது படிக்காவிட்டால் என் பழம் பிறவிகளின் பரிவுக்குரியவர் பேச்சைக் கேட்காத சோகம் என்னைச் சூழ்ந்து கொண்டு விடும்."

பழம் பிறவிகளின் பரிவுக்குரியவனுமே, நான்? 'அச்சமும் நாணமும் நாய்கட்கு வேண்டுமாம்' என்னும் நவயுகப் பெண்ணின் நாணமற்ற பேச்சல்ல அது. வெட்கம் என்ற கவசத்தைக் கழற்றி எறியக் கூடிய உரிமையாளன் எவனோ, அவனிடம் உள்ளத்தைத் திறந்து காட்டுகிறாள்! அப்படித்தானே இருக்க வேண்டும் அது?

இதற்குப் பின் ஏற்பட்ட இரண்டொரு சந்திப்புக்களில் என்னை அவளும், அவளை நானும் புரியக் கூடாத ரகசியத்தின் புதிர்ப் பொருள்களாக்கிக் கொண்டோம்!

நாங்கள் காதலித்தோம். 'இதிலென்ன புரியக் கூடாத இரகசியம்? எங்கே இருக்கிறது புதிர்?' என்று இரண்டொரு வினாக்கள் எழுமானாலும், சொல்லிவிட வேண்டியது அவசியம்தான்.



பாட்டி: ஏண்டாப்பா முனியா! ஏன் நாற்காலி மேலே சொகுசா சாஞ்சிண்டு நிக்கறே! போய் வேஷ்டியெல்லாம் தோச்சிண்டு வருகிறதுதானே!

---

நான் யாரோ பிராசுதாரின் மகன். சகவரியோ மேளக்கார வீட்டுப் பெண். இனத்தாலும் பணத்தாலும் எங்களுக்கு இடையே இருந்த அகழியை நாங்கள் பெரிதாக நினைக்கத்தான் இல்லை. ஆனால் என் அம்மா எவ்வளவு பெரிதுபடுத்தி விட்டாள்!

மூன்றாவது முறையாக சகவரி எங்கள் வீட்டுக்கு வந்து விடைபெற்றுப் பிரிந்த பிறகு, என்முன்னே புழுதிப் புயல் போலப் பொருமிக் கொண்டு வந்து நின்றாள் அம்மா.

நான் அயர்ந்து போனேன். அவள் எப்போதும் அப்படி இருந்தவள் அல்ல. அன்பின் நீரோட்டமாக மட்டுமே இருக்கத் தெரிந்த அவளால் இப்பொழுது எப்படி இற்றுப் பொரிந்த கனலாக முடிந்தது?

திகைத்தவனின் நெஞ்சிலே ஒரு திக்குச்சியையும் கிழித்துச்செருகினாள் அவள்: ''சோமு, எனக்கு இருக்கும் ஒரே பிள்ளை நீ! ஏன் இப்படிக் குட்டிச் சுவராகப் போகிறாய்?''

நான் கதை எழுதுவதில் அம்மாவுக்குக் கொஞ்சங்கூட இஷ்டம் இல்லை. அது ஒரு தரித்திரம் பிடித்த தொழில் என்று அவள் நினைத்தாள். அதையேதான் இப்பொழுதும் சொல்ல வருகிறாளோ என எண்ணிய நான் புன்னகையுடன் கேட்டேன்: ''என்ன சொல்கிறாய், அம்மா? நான் குட்டிச்சுவராகப் போகிறேனா?''

''பின்னே?'' அவள் ஆத்திரம் இன்னும் கொழுந்து விட்டது.

''எழுதுவதை அவ்வளவு மட்டமாகக் கருதக்கூடிய வம்சத்தில் பிறக்கவில்லையே நீ? அழகிய திருச்சிற்றம்பலக் கவிராயர் தோன்றிய குடும்பத்தில் பிறந்த நீயா இப்படிச் சொல்கிறாய்?'' உள்ளம் அசையாத நாடக பாணியில்தான் கேட்டேன்.

''எழுதுவதோடு நிறுத்திக் கொண்டால் தேவலையே! உன்னைத் தேடி இவர்களெல்லாம் வீட்டுக்கு வரும்படியாகி விட்டதேடா! உன் அப்பா இருக்கும் வரை இந்த மாதிரிப் பேர்வழிகள் நம் வீட்டுவாசலை மிதித்திருப்பார்களா?''

அவள் 'இந்த மாதிரிப் பேர்வழிகள்', 'சாதி கெட்ட கழுதை' என்றெல்லாம் யாரை மறைமுகமாக வர்ணிக்கிறாள் என்பதை நான் புரிந்து கொள்ளாமல் போக வில்லை. ஆனால் தெரிந்து கொள்ளாதவன் போலக் கேட்டேன். ''யாரைச் சொல்கிறாய்?''

''இங்கே கொஞ்ச நேரத்துக்கு முன்னால் குலுக்கி மினுக்கி விட்டுப் போனாளே, சகவரி, அவளைச் சொல்கிறேன். 'பெரிய இடத்துப் பையன்' என்று உன்னை வலை வீசிப் பிடிக்க நினைக்கிறாள்....''

''அம்மா!.....'' எப்படிக் கத்தி விட்டேன் நான்?

''எவ்வளவுதான் நீ உரக்கக் கத்தினாலும் அவள் உயர்ந்த குடும்பப் பெண்ணாகி விடமாட்டாள்....''

''அவள் இழிந்த குடும்பத்தைச் சேர்ந்தவளாக இருப்பதைப் பற்றி இவ்வளவு உரக்கப் பேச உனக்கு யார் அதிகாரம் தந்தது?'' வெறிபிடித்தவனாக அலறினேன். எப்பொழுதும் நான் அவளிடம் இப்படிப் பேசியவன் இல்லை. பேச வைத்து விட்டாள்.

அம்மா சட்டென்று பதில் பேச வில்லை. அவள் அனுபவசாலி. என்னைத் தன்னிடம் ஈர்த்துக் கொள்கிறவலிமையை வெறும் கூச்சலாலோ சாரமற்ற விவாதத்தாலோ பெற முடியாது என்பதை அறிந்தவள். இல்லா விட்டால் அத்தனை கோபத்தோடு வந்தவள் இப்போது ஏன் இப்படிச் சிரிக்கிறாள்?

அவள் பேச்சால் என் உள்ளத்தில் சினந்து மூண்டு விட்ட தீயை இந்தக் காரிய ரூபமான சிரிப்பால் அணைக்க முடியவில்லை.

''சோமு, நாளைக்கு நாம் மதுரைக்குப் புறப்படுகிறோம்.''

குரல் முற்றிலும் மாறி யிருந்தாலும், சட்ட ரீதியான பிரகடனம் போல இருந்தது அவள் பேச்சு. வீடு வாசல், வெளியே போனால் சிவன் கோயில் என்ற குறுகிய எல்லைக்குள்ளேயே வாழ்ந்தவளுக்கு இப்பொழுது ஐம்பது மைல்களுக்கு அப்பாலுள்ள மதுரையில் என்ன ஜோலி?

''போய் வாயேன். நானும் எதற்கு?''

''உனக்குப் பிரார்த்தனைக் கடன் இருக்கிறது.''

''எப்பொழுது திரும்புவோம்?''

''ஒரு மாதத்தில்.''

''அவ்வளவு நாட்களாகுமா, பிரார்த்தனைக் கடன் செலுத்த?''

அம்மா பேசவில்லை.

ஆனால் நான் பேசினேன். ''என்னால் மதுரைக்கு வர முடியாது!''

''ஏன்?'' திடுக்கிட்டிருக்க வேண்டும் அவள். குரலும் கண்ணும் கலங்கி இருந்தன.

இடி விழுந்தவள் போலாகி விட்டாள் அம்மா. நீண்ட நேரம் அவள் பேசவே இல்லை. துயர் இழைந்த நீண்டதொரு பெருமூச்சுக்குப் பிறகு என்னை உற்றுப் பார்த்தாள். திசை திரும்பி நீண்டிருக்கும் என் மனத்தை ஒரு வேலை இல்லாத இடமெல்லாம் தேடித் தேடித் துழாவுகிறாளோ?

''நான் மட்டும் மதுரை போய்வரட்டுமா?'' வெம்பனித் திரளோடு கலந்தது ஓர் ஏக்கம்.

''ஹூம்.''

''வருவதற்கு ஒரு மாதமாகலாம்.''

''ஆகட்டும்.''

''ஆகட்டுமா?'' எப்படிப் பனிச்சிட்டு மின்னின அவள் கண்கள்?

"ஹூம்."

"அந்தக் கழுதையை விட்டு உன்னால் ஒரு மாதம் பிரிந்திருக்க முடியாது. ஆனால் பெற்றவளை விட்டு ஒரு நூறு வருஷம் கூட உன்னால் பிரிந்திருக்க முடியும். அப்படித்தானே?"

"அப்படி இல்லை."

"வேறு எப்படி?"

என்னால் பதிலிறுக்க முடியவில்லை. மௌனத்தின் வயிப்பில் மட்டுமே மண்டலமிட்டிருக்கும் பாசத்தை எப்படி அம்மாவுக்கு வெளி விட்டுக் காட்டுவது?

"என்னைவிட உனக்கு அவள் உயர்ந்தவளாகி விட்டாள் என்பதைத் தானே உன் மௌனம் ஒப்புக் கொள்கிறது?"

"ஒருவரிடத்தில் விரோதமாக இருப்பது ஒன்றே மற்றொருவரிடம் காட்டும் பிரியம் என்று நினைக்கிறாயா அம்மா? நான் அப்படி நினைக்கவில்லை. உன்னாலும் கூட அப்படி நினைக்க முடியாது. அது காலமெல்லாம் பல கிளைகள் விட்டுத் தழைத்துக்கொண்டிருக்கும். மனித மனத்திலும் பாசத்தை அப்படித்தான் வைத்திருக்கிறான் கடவுள். பெற்றவர்களிடத்தில் பாசம் வைக்கும் மனிதன் மனைவியினிடத்திலும், தன் குழந்தைகளிடத்திலும் பாசத்தைப் பரிமாறுகிறான். இதற்காகஅவன்யாரையும் வெறுக்க வேண்டியதில்லை. பல கிளைகளிலும் பிரிந்து செல்லும் பாதை அல்லது பிரியும் ஜீவக் கரப்பான ஆவேசத்தை மாற்றிக் கொள்வதில்லை..."

என் நீண்ட பேச்சை இன்னும் நான் முடிக்கவில்லை. ஆனால் அம்மா அங்கே இருந்தால்தானே?

'புயல் ஓய்ந்ததே' என்ற என் அற்பமான திருப்தி ஒரு வாரத்தில் பொடிப் பொடியாக நொறுங்கி என் கண்ணில் விழுந்தது.

சகவரிக்குக் கல்யாணமாம்! மேட்டுத் தெரு நாகப்பன் மணமகனாம்! பழம் பிறவிகளின் பரிவுக் குரியவனான என்னைத் துடைசென்று இரஸ்கரித்து விட்டு வேறொருவனை மாலையிட எப்படித்துணிந்தாள் அவள்? நாகப்பன் பணம் படைத்தவன்தான். ஆனால் குணம்படைத்தவனல்ல. தீமைகளின் விளை நிலமான அவனைக் கைப்பிடிக்க எப்படித்தான் சம்மதித்தாள்?

இப்பொழுது நினைவுக்கு வருகிறது. இந்த ஒரு வார காலமாக அவள் என் வீட்டுப் பக்கமே வரவில்லை. அவளைச் சந்திக்காத நாள் ஒவ்வொன்றும் வாள் போல் என் நெஞ்சைப் பிளந்ததை அவள் அறிய மாட்டாள். கொஞ்சம் அறிந்திருந்தாலும் அவள் முக தரிசனம் எனக்குக் கிடைக்காமல் போயிருக்காது. இரண்டொரு முறை நானே அவள் வீட்டுக்குப் போனேன். அப்பொழுதெல்லாம் அவள் என்னைக் கண்டு மகிழ்வோடு குதித்தோடி வந்து வரவேற்கவில்லை.

ஏன் இந்த மாற்றம்! சகவரி என்னை வெறுத்து விட்டாளா? ஓயாத அலைகளை எழுப்பிக் கொண்டிருந்த என் மனம் அவளுடைய புரிபடாத செய்கையின் புதிரை அவிழ்க்கப் புறப்பட்ட போதெல்லாம் குவியல் குவியலாகக் கிடைத்தது தோல்வியே!

அம்மா என்னிடம் சொல்லியதையெல்லாம் அவள் இத்தனை சீக்கிரமாக உண்மை என்று நிரூபித்துக் காட்டுகிறாளா? 'பெரிய இடத்துப் பையன் என்று உன்னை வலைவீசிப் பிடிக்க நினைக்கிறாள் அவள்' என்றுதானே சொன்னாள் அம்மா? வலையை வீசி விட்டு என்னைப் பிடிக்காமலே இத்தனை தூரம் விலகிப் போய் விட்ட சகவரி நாகப்பன் பக்கமாக வலையை வீசி இருக்கிறாளா?

என்னைக் காதலிக்கவும், சட்டென்று வேறு ஒருவனை மணந்து கொள்ளவும் அவளால் ரொம்ப ரொம்பச் சுலபமாக முடிகிறது. எனக்கு எதுவுமே சுலபமில்லை. அவளைக் கண்



''ஒரு பொடிக் கடை வைக்கலாமான்னு யோசனை செய்திண்டிருந்தேன். எவனோ தும்மறான், சார்!''

முன்னாலேயே இன்னொருவனுக்கு வாரிக் கொடுத்து விட்டு நான் மட்டும் வாழ்வதா?

சகவரிக்குக் கல்யாணம் நாளைக்கு. அவிந்து கொண்டிருந்த அந்தி மாலையின் புலம்பலில் கவனம் செலுத்தி யிருந்தேன், தோட்டத்தில் நின்றபடி.

''ஸார்...'' ஓர் இளம் கீற்றுக் குரல்.

திரும்பிப் பார்த்தேன். பன்னிரண்டு வயதுப் பெண் ஒருத்தி மிரள மிரள விழித்தபடியே என்னிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்தாள். ''சகவரி அக்கா இதை உங்களிடம் கொடுத்து விட்டு வரச் சொன்னாங்க.'' சொல்லி விட்டு வாசலை நோக்கிப் போய் விட்டாள் அந்தச் சிறுமி.

''எழுத்தாலேயே என்னைச் சரம் சரமாகக் கோத்துப் பிறகு இதழ் இதழாகவே உதிர்த்து விட்ட சோமு அவர்கட்கு. நாளைப் பொழுது விடிந்தால் என் வாழ்நாளுக்கும் விடியாத இரவு பிறந்து விடும். அந்த விலக்க முடியாத வேதனையைத்தான் திருமணம் என்று பிறர் சொல்கிறார்கள். என் பழம்பிறவிகளின் பரிவுக்குரியவரான உங்களிடம் இதயத்தைப் பறி கொடுத்ததற்குத்தான் எனக்கு எத்தனை பெரிய அடி? நீங்கள் பெரிய இடத்துப்பிள்ளையாம். உங்கள் அம்மாவுக்கு ஒரே பிள்ளையாம். உங்கள் குடும்ப மானம் காப்பாற்றப்படுவது என் கையில்தான் இருக்கிறதாம். உங்கள் அம்மா கண்ணீருடன் கூறிய இந்தச் செய்திகளுடன் இன்னொன்றையும் சொன்னார். உங்கள் குடும்பம் நல்லபடியாக வாழ்வதற்காக என் காதலைத் தியாகம் செய்து விட வேண்டுமாம். கதறிக் கதறி அழுதார் அவர், என் வீட்டை நாடி வந்து. நான் என்ன செய்வேன்?'உங்கள் மகனை மறந்துவிட முடியாது என்றேன்..ஆனால் என் காதலைத் தீயில் பொசுக்கி விடுகிறேன்' என்று கூறிவிட்டேன். இப்படிக் கூறியதற்குத் தியாக உணர்வு மட்டும் காரணம் இல்லை. என் அம்மாவின் பிடிவாதம், எங்கள் குடும்ப நிலை, நாகப்பன் என்னை உத்தேசித்தே எங்களுக்கு ஏராளமாக வழங்கி யிருந்த கடன் எல்லாமாகச் சேர்ந்து என்னைத் தனிப்படுத்தி விட்டன. இத்தனை நாட்களாகக் காதலுக்கு ஒன்றுபட்ட இரண்டு உள்ளங்கள் தாம் தேவை என்று நினைத்திருந்தேன். இப்பொழுதுதான் காதலுக்குக் குலம், செல்வம் எல்லாம் தேவை என்பது புரிகிறது.

''நான் புரிந்து கொண்ட துன்பம் ஒன்றே எனக்கு வாழ்க்கையாகி விட்டது. உங்கள் மனத்தை என்னிடமிருந்து உடனடியாகத் திருப்ப அவசரம் அவசரமாக எனக்குத் திருமணமாக வேண்டும் என்று கேட்டுக் கொண்டதோடு நில்லாமல், செலவுக்காகப் பத்தாயிரம் ரூபாயும் தந்திருக்கிறார் உங்கள் அம்மா. அந்தப் பெருந் தொகையே என் அம்மாவின் வாயையும், என் வாழ்க்கையையும் அடைத்து விட்டது. என்னை மன்னிக்க நீங்கள் தயாராக இருந்தால், எனக்கு நாளைக்குத் திருமணம் நடக்கும் நேரத்தில் இரண்டு சொட்டுக் கண்ணீர் விடுங்கள் - சகவரி.''

கடிதம் முடிந்த போது பகலின் இறுதிச் சாம்பலும் உதிர்ந்து விட்டது. என் இதயமே கரைந்து உலர்ந்து விட்டது போல.

'சகவரியை விட்டுப் பிரிந்திருக்க முடியாது' என்று அன்று நான் கூறியதற்குப் பிறகு அம்மா எத்தனை சூழ்ச்சிகளைச் செய்து விட்டாள்! அவளை விட்டு நான் பிரியக் கூடாது என்பதற்காக என் சகவரியை என்னிலிருந்து என்றுமே நிரந்தரமாக வல்லவா பிரித்து விட்டாள்? இவளால் சூழ்ச்சிக்காரியாக முடிந்தால் இவள் பெற்ற பிள்ளையானும் சூழ்ச்சிக்காரனாக முடியாதா?

'ஆமாம். நான் ஒரு சூழ்ச்சிக்காரன். அம்மாவிடம் சொல்லாமல் எங்கேயாவது ஓடிப் போவேன். என்னை நினைந்து நினைந்து உருகுவாள். உருகட்டும். நானும் சகவரியை நினைந்து உருகத்தானே செய்வேன்? அந்தக் கொடுமையை அவளும் அனுபவிக்கட்டும். பிரிவின் வேதனையை அவள் உணர்வதற்காகவாவது அவளுக்கு நான் பிள்ளையாக இல்லாமல் போவேன்.'

அன்றிரவு. அம்மா அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்த போது ஒரு டிரங்குப் பெட்டியுடன் வெளியே கிளம்பி விட்டேன்.

எங்கெங்கோ போனேன். எப்படி எல்லாமோ வாழ்ந்தேன். சகவரி என்று எனக்கு இல்லாமல் போனாளோ அன்றே என் எழுத்தும் இறந்து விட்டது. என் கதைகளில் நான் கூறும் இனிய செய்திகளைப் படிப்பதற்காக ஒரேயொரு வாசகியையும் இழந்த பிறகு எதற்காக நான் எழுத வேண்டும்?

குருவாயூரில் சுவாமி தரிசனத்திற்காக வந்திருந்த மக்கடை ராமன் நாயரை நான் சந்தித்த போது அம்மா படுத்த படுக்கையாக இருப்பதைச் சொன்னான். என் மனத்தில் பதித்திருந்த பழி உணர்ச்சி என்னும் நாண் அறுந்து விட்டது. அம்மாவினுடைய சூழ்ச்சிக்கு அவள் உயிரையே பலி வாங்கப் போகிறது. தன் மகனைத் தன் மடியிலேயே இறுத்திக் கொள்ள நினைத்த ஒரு தாய்க்கு, அவள் மகன் கருணை இல்லாமல் வழங்கிய தண்டனை எத்தனை கொடியது?

கேள்வியே என்னைச் சாட்டையாக்கி வளைக்க இதோ அம்மாவை நோக்கி ஓடிக் கொண்டிருக்கிறேன் நான்.

நான் ஊருக்குள் நுழைந்த போது கரிய இரவு தலைதூக்கிக் கொண்டிருந்த நேரம்.

மேட்டுத் தெரு வழியாகத்தான் எங்கள் வீட்டுக்குச் செல்ல வேண்டும்.

நாகப்பனின் வீட்டுத் தலைவாசலில் போய்க் கொண்டிருந்த பொழுது என் கால்கள் முளை அடித்துக் கொண்டு விட்டன.

சகவரி வாழ்ந்து கொண்டிருக்கும் வீடல்லவா?

நினைவுகள் கற்றையாக முளைத்துத் தளிர்த்த போது வீட்டுக்குள்ளிருந்து வந்த ஒரு பெண்ணின் அழுகை ஓலம் என்னை விதிர் விதிர்க்க வைத்து விட்டது. அழுவது சகவரியல்லவா?

என் சிந்தனையைக் கத்திரித்தது உள்ளிருந்து வந்த நாகப்பனின் குரல். "சோமுவின் படத்தை ஏனடி உன் டிரங்குப் பெட்டியில் வைத்திருந்தாய்? அந்தப் பயலை இன்னுமா நினைத்துக் கொண்டிருக்கிறாய்?"

"நினைவு சாவதில்லை." இரண்டே வார்த்தைகளைத் தான் புலம்பலுக்கிடையே கூறுகிறாள் சகவரி.

மீண்டும் அடி; அலறல். கொலைகாரப் பாவி! இவனிடம் ஒரு மெல்லிய மலரைக் கொடுத்து வேடிக்கை பார்க்கிறதே விதி?

"குருவாயூர் போய் விட்டுத் திரும்பிய டீக் கடை ராமன் நாயர், அந்தப் பயல் சீக்காகக் கிடந்த அவன் அம்மாளைப் பார்க்க வரவிருப்பதாகச் சொன்னான். அப்படி வந்தால் நீ அவனைப் போய்ப் பார்ப்பாயா?"

"நன்றாகப் பார்க்கத்தான் போவேன்!"

"போவாயா? போவாயா?" மேலும் மேலும் அடிகள்; அலறல்கள்.

என்னை நினைப்பதற்கே சகவரிக்கு இவ்வளவு பெரிய தண்டனை கிடைக்கும் போது, அவள் என்னைப் பார்க்க வந்தால் கொலையே நடந்து விடாதா? கொலைகாரன் தானே நாகப்பன்? குறைந்த பட்சம் சகவரி உயிரோடு இருப்பதற்காகவாவது நான் இந்த ஊரிலேயே இல்லாமல் தான் போக வேண்டுமா? அவளுக்காக என் அம்மாளையே பிரிந்திருக்கத் தயாராகி விட்ட பிறகு ஊரை விடுவது தானா ஒருபெரிய காரியம்?

ஆனால் அம்மாவுக்கு உடல் நலம் திரும்பும் வரை ஊரை விட்டு நான் எப்படிப் போக முடியும்?

நாகப்பனின் குரல் சினத்துடன் என் நெஞ்சை அறைந்தது: "ஓடுகாலிப் பயல்! பெற்ற தாய்க்கு ஒரு கைக் கொள்ளி வைக்கக் கூட வராமல் ஊர் சுற்றிக் கொண்டு திரியும் பொழுது நான் தானே நேற்று அந்தக் கிழவிக்குக் கொள்ளி வைத்தேன்? அப்படிப்பட்ட கிராதகப் பயலைப் பார்க்கப் போனால் உன் காலை வெட்டி விடுவேன்."

என்ன! நேற்றே என் அம்மா இறந்து விட்டாளா? "அம்மா...." என்று கூட வாய் விட்டு அலற முடியாத பலவீனமும் அநாதைத் தனமும் என்னைச் சூழ்ந்து கொண்டன.

இனி நான் அம்மாவின் நலத்துக்காக ஊரில் தங்க வேண்டிய அவசியம் இல்லை. முரடனுடன் வாழ்வைப் பிணைத்துக் கொண்ட சகவரிக்கு என்னைப் பார்ப்பதற்கும் சந்தர்ப்பம் இல்லாமலே செய்து விடலாம். அதனால் அவளுக்கு நாகப்பனால் விளையும் தொல்லைகள் இல்லாமல் போகும்.

வந்த வழியே திரும்பி நடந்தேன். அது ஏற்கெனவே எனக்குப் பழக்கப்பட்ட வழி தான். ஐந்து வருஷங்களுக்கு முன்னும் நான் அந்த வழியாகத் தான் போனேன். அப்பொழுது அம்மாளைப் பழி வாங்குவதற்காகப் போனேன். இப்பொழுதும் போகிறேன். ஆனால் ஒரு பெண்ணின் வாழ்வு பாழாகி விடலாகாது என்கிற எண்ணத்துடன் போகிறேன். நான் சொத்து சுகத்தை யெல்லாம் துறந்து போவதற்காக யாரும் என்னைத் தியாக சீலனாக்க வேண்டாம்.

ஏனென்றால் நான் ஓடுகின்ற வெள்ளம். ஓடிக் கொண்டே தான் இருக்க வேண்டும்.

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில், ஒரே தேய்ப்பில் கால்கேட் டெண்டல் கிரீம் துர்நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சத விகிதத்தை ஒழிக்கிறது.

கால்கேட் உடனடியாக வாய் துர்நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான பரீட்சைகள் நிரூபித்துள்ளன: இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு! சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித்தால் மட்டும் போதாது—சாப்பிட்டவுடன் வழக்கமாக கால்கேட் டெண்டல் கிரீமினால் உங்கள் பற்களை நன்றாகத் துலக்குங்கள். இதன் விசேஷமும், ஊடுருவும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர்நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் நீடித்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்.

வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✔ துர்நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது




நீங்கள் பற்பொடியை விரும்பினால், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.




பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெறவும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிறார்கள்.

OCG.12QT-TAM

# தேன் நிலவு

காந்தன்

பணக்காரரான சொக்கலிங்கம் தம் மனைவியுடன் தேன்நிலவுக்காகக் காஷ்மீர் செல்கிறார். அவருடன் அவரது மகள் சாந்தியும் செல்கிறாள்; அவளுடன் மானேஜர் ராஜுவும் செல்கிறான்; பிறகு வில்லன் அவர்களைத் தொடர்ந்து காஷ்மீர் செல்கிறான்; அதன் பிறகு வில்லனின் மனைவி — கணவனால் கைவிடப் பட்டவள் — கணவனைத் தேடிக் கொண்டு காஷ்மீர் செல்கிறாள்; காரணமில்லாமல் வில்லன் காதலர்களைக் கண்டு பொறாமைப்படுகிறான். தன் மனைவியை ராஜுவின் மனைவி என்று கூறி அவளை அவன் கொலை செய்து விட்டதாகப் புனைந்துரைத்து ராஜுவைக் கொலைகாரனாக்க முனைகிறான்; வில்லனுக்கும் கதாநாயகனுக்கும் உள்ள பெயர் ஒற்றுமைதான் படத்தின் சஸ்பென்ஸாகவும், கதையின் முக்கியப் பகுதியாகவும் வைக்கப்பட்டிருக்கிறது. ஆனால் முன்னாலேயே தெரிந்து விடுகிறதே!

படத்தின் ஆரம்பத்திலேயே காதலும் ஆரம்பமாகி விடுகிறது. கிரிக்கெட் மாட்சில் தொடங்கும் காதல் இடைவிடாது வளர்ந்து, காஷ்மீர் படகுகளிலும், நீர் நிலைகளிலும், பனிச் சறுக்கல்களிலும் வளம் பெறுகிறது. வளம் பெற்ற காதலுக்கு வரும் தடைகள் வளமாயில்லையே!

ஜெமினி கணேசனும், வைஜயந்திமாலாவும் சேர்ந்து தோன்றும் காட்சிகளில் தாராளமான நடிப்பையும், ரொம்ப ரொம்ப நெருக்கத்தையும் காண முடிகிறது. தியேட்டர் முன்னணிகளின் கரகோஷத்தை நிறையக் கேட்கமுடிகிறது! காதல்காட்சிகளை நிறைய சேர்த்து விட்டால் படம் வெற்றி பெற்றுவிடும் என்ற நினைப்போ!

காதல் காட்சிகளைத் தவிர 'தேன் நில'வில் உருக்கமோ, வேதனையோ, தவிப்போ, கோப தாபமோ எதுவுமே இல்லாததால் கதாநாயகனான ஜெமினி கணேசனுக்குக் காதலிப்பதைத் தவிர வேறு எந்தவித நடிப்பையும் காட்ட வழியில்லாமற் போய் விடுகிறது.

வைஜயந்திமாலாதான் கதாநாயகி சாந்தி. (உலக நிலையில் சாந்தி நிலவா விட்டாலும் படஉலகில்தான் சாந்தி நிறைந்திருக்கிறதே!) பரவசமூட்டும் நடிப்பினாலும், கவர்ச்சி நிறைந்த உடைகளினாலும் வைஜயந்தி களிப்பூட்டுகிறார். ஆனால் விசேஷமாகப் பாராட்டிக் கூறும்படியாக நடிப்பில் எதுவும் இல்லையே!

தங்கவேலுவின் ஹாஸ்யம் படத்துக்குச் சுவையூட்டுகிறது. யாருக்கும் தெரியாமல் மாடியில் இருக்கும் சாந்திக்கும் ராஜுவுக்கும் கூடையில் சிற்றுண்டி அனுப்பி வைக்கும் காட்சி நன்றாயிருக்கிறது. அப்பொழுது ஒளிப்பதிவு பாராட்டும்படி இருக்கிறது.

காஷ்மீர் காட்சிகள் பலே ஜோர்.

வில்லனாக வரும் எம். என். நம்பியார் நன்றாக நடித்திருக்கிறார். வில்லனின் மனைவியான லலிதாவின் பாகத்தைப் புது முகம் வசந்தி ஏற்று மிக நன்றாக நடித்திருக்கிறார்.

''பாட்டுப் பாடவா'' என்ற பாட்டு காதலர்களின் குதிரைச் சவாரிக்குச் சுவை தருகிறது. பாராட்டி அனுபவிக்கக் கூடிய பாட்டு ''காலையும் நீயே, மாலையும் நீயே'' என்ற கர்நாடக மெட்டுப் பாட்டுத்தான்.

''தேன் நில''வின் முற்பகுதி ஒரே இடத்தில் தேங்கி விடுகிறது. பிற்பகுதியில்தான் ஓரளவு கதையிருக்கிறது.

கதை, வசனம், தயாரிப்பு, டைரக்ஷன் எல்லாப் பொறுப்புக்களையும் ஏற்றிருக்கும் ஸ்ரீதர், எல்லா அம்சங்களிலும் வெற்றி பெற்று விட்டதாகக் கூற முடியவில்லை. முக்கிய அம்சமான கதை தெவிட்டிப் போய் விடுகிறதே!



# இருமல் மற்றும் ஜலதோஷத்திலிருந்து பூர்ண நிவாரணம் பெற





# ஸிரோலின் 'ரோஷ்' அருந்துங்கள்




இருமலுக்கும் ஜலதோஷத் தீர்க்கும் ஏற்ற இந்தியாவின் குடும்ப மருந்து

இருமல் அல்லது ஜலதோஷமிருந்தால் அசட்டை செய்யாதீர்கள்—ஸிரோலின் அருந்தி அபாயமின்றி துரிதமாக பூர்ண நிவாரணம் பெறுங்கள். ஸிரோலின் இருமலை நிறுத்துவதோடு மட்டுமல்லாமல் இருமலை உண்டுபண்ணும் கிருமிகளைக் கொல்லவும் செய்கிறது. ஸிரோலின் தொண்டைப் புண்களுக்கு சமனமூட்டுகிறது, கபம் மற்றும் சளியை போக்குகிறது. அது எவ்வளவு கடுமையான இருமலிலிருந்தும் அபாயமின்றி துரிதமாக நிவாரணமளிக்கிறது. அபாயமற்ற, நிவாரணமளிக்கும் தன்மையையும் மற்றும் இனிய ருசியையும் ஸிரோலின் பெற்றிருப்பதால் குடும்பத்திலுள்ள அனைவரும் அதைப்பெரிதும் விரும்புகிறார்கள். ஸிரோலின் என்றால் குழந்தைகளுக்கு ஒரே குஷி!

**உங்கள் வீட்டில் எப்பொழுதும் ஸிரோலின் வைத்திருங்கள்**

'ரோஷ்' தயாரிப்பு

ஸோல் டிஸ்டிரிப்யூட்டர்கள்:
வால்டாஸ் லிமிடெட்

# வாழும் வர்ணனைகள்

6. கு. ப. ரா.

## 1. நூருன்னிஸா

இந்தப் பத்து வருஷங்களாகப் பரதேசி போல் திரிந்த பொழுதும், உப்புச் சத்தியாக்கிரகத்தின் காரணமாக ஆறு மாதம் சிறையில் இருந்த பொழுதும் அடிக்கடி என் மனத்தில் தோன்றித் தோன்றி என்னை மயக்கிய பெண் உருவம் யாருடையது என்று தவித்தேனே - அப்பா, அது நூருன்னிஸா வுடையதுதான்!

ஒரு சிறுமியின் முக்காடிட்ட குற்றமற்ற முகம்; அதில் மைதீட்டிய இமைகளிடையே குறுகுறு என்று சஞ்சலித்த இரண்டு குறை கூறும் விழிகள். ரோஜாக்களிடையே மல்லிகை போலக் கீழ் இதழைச் சற்றே கடித்து வெளியே தோற்றின பல்வரிசை - இத்தகைய உருவம் மோகினி போல் என் மனத்தில் குடி கொண்டு ஆட்டி வைத்ததே அது அவளுடையது!

ஃ

நூருன்னிஸா உருவம் என் மனத்தில் வரைந்த சித்திரம் போல் நிற்கிறது. நான் முதல் முதலில் பார்த்த அன்று அவள் ஜரிகை மயமாயிருந்த பச்சைப் பட்டுப் பாவாடை உடுத்தியிருந்தாள். இலேசான மஞ்சள் பட்டு இரவிக்கையும் ரோஜாப் பட்டுத் தாவணியும் அணிந்திருந்தாள். காலில் காப்பு, பாத ஸரம், கையில் காப்புக்கள், விரல்களில் மோதிரங்கள். கர்நாடக முகம்மதியர் போலக் குருடு முதலியன இல்லை. முகம் என் மனத்தில் அப்படியே இருக்கிறது. நீண்ட புருவங்களும், தலை மயிரும் கன்னங் கரேலென்று இருந்தன. பின்னல் இல்லாமல் தலை மயிரை முடித்திருந்தாள். அது அவளுக்கு ரொம்ப அழகாக இருந்தது. அவள் உடலின் சிவப்புக்குச் சமானமே சொல்ல முடியாது. அவள் கண்கள் - அவற்றின் தன்மையை எடுத்துச் சொல்ல முடியவில்லை. வேண்டுமானால் தாமரை இதழ்கள் போன்றன, மீனுருவம் கொண்டன— என்று கவியைப் போல் சொல்லிக் கொண்டே போகலாம்.



### உழைக்கும் தோற்றம்

'பறச் செங்கான்' என் பாட்டனார் காலம் முதல் எங்கள் நிலத்தைச் சாகுபடி செய்கிறவன். சொக்கனூர் கிராமத்திலேயே அவன்தான் வயதுமுதிர்ந்த கிழவன். எண்பது வயது என்று பேச்சு. ஆனால் பார்த்தால் அறுபதிற்கு மேல் சொல்ல முடியாது. கையில் அவன்உயரமுள்ள மூங்கில் தடி. தடி எடுத்தவன் தோட்டி என்பார்கள். ஆனால் செங்கான் தோட்டியல்ல. விவசாய ஜீவனம். பழுப்பு நிலத்தில் பயிரேற்றிப் பிழைத்தான். தளதளவென்று செழித்திருந்த மார்பளவு பயிரின் நடுவில் சதா ஏதாவது வரப்பைக் கிண்டிக் கொண்டே இருப்பான்.

நிலத்தை விட்டு வெளியே வந்தாலும் அந்தத் தடி, இடுப்புக் கோவணந்தான். கறுப்புக் கம்பளி யொன்றைத் தலையிலிருந்து கால் வரை, மழைக் காலத்தில் சாக்கை மடித்துப் போட்டுக் கொள்வது போலப் போட்டுக் கொண்டிருப்பான். காலில் செருப்பு, கறுத்த உடல், நரைத்த மீசையும், உச்சிக் குடுமியும்...

### சாலையோரம்

சாலையில் இரண்டு பக்கங்களிலும் நெல்லி மரங்கள். நடுவில் சில இடங்களில் நாவல் மரங்களும் இருந்தன. ஆடி மாத முடிவாகையால் சாலையெல்லாம் நாவற் பழங்கள் கொட்டிக் கிடந்தன. இரண்டு பக்கங்களிலும் கண்ணுக்கு எட்டிய தூரம் வரையில் நன்செய்கள். நடவு காலம்; வயல்களில் எல்லாம் ஜலம் நிறையக் கட்டியிருந்தார்கள். சேறு, புளித்த மாவு போல நுரைத்துப் பொங்கி நின்றது. சில இடங்களில் நடவாகி இருந்தது. சோகை பிடித்த மஞ்சள் நிற நாற்றுக்கள் தூர தூரமாக நடப்பட்டிருந்தன. சில

இடங்களில் பள்ளப் பெண்கள் சேலையை இடுப்பில் சுற்றி முழங்கால் சேற்றில் நாற்று நட்டுக் கொண்டிருந்தார்கள்.

**நடிகை**

நடிகை வேஷம் தரித்த ஸீதா பார்வதி போலவே தான் இருந்தாள். மெய்ந் நிறைந்த யௌவனத்தின் பூர்ண கலை அவளுடைய கண்களிலும், இதழ்களிலும் ததும்பிக் கொண்டிருந்தது. அப்பொழுதுதான் ஸ்நானம் செய்து தலைமயிரை முடிந்திருந்தாள். அதில் பவித்திரமான புஷ்பங்களைச் செருகியிருந்தாள். நெற்றியிலும், கைகளிலும், அழகான சிறு விபூதிப் பட்டைகள் இருந்தன. புருவங்களுக்கிடையே குங்குமத்தை ஒரு பட்டையாக வைத்துக் கொண்டிருந்தாள். மேலாக்கை வக்ஷஸ்தலத்தில் இறுக்கி இடுப்பில்கொண்டு வந்து செருகிக் கொண்டிருந்தாள். இந்து நாகரிகத்தின் ஆரம்பக் காலத்தில், கஞ்சுகம் என்று பின்னால் ஏற்பட்ட இரவிக்கை இல்லை. சிறிய மணிகள் கட்டிய ஓர் ஒட்டியாணம் (மேகலை) புடைவையின் மேல் இறுகிப் படிந்திருந்தது. முழங்கை அருகே தோள்களில் தோளணிகள் அணிந்திருந்தாள். கையில் சிவார்ச்சனைக்காக அப்பொழுதுதான் கொய்த வில்வத்தை ஏந்தி நின்றாள். அந்த நிமிஷத்தில் ஸீதா (தான் நடிகை என்பதையும் மறந்து) தானே உமை என்று எண்ணி விட்டாள்.

**மஞ்சிவிரட்டு**

காத்தான் மாட்டின் கொம்புகளை அணைத்துக் கொண்டு அதன் கழுத்தில் கால்களைப் பின்னிக் கொண்டிருந்தான். மாடு வெறி பிடித்தது போல் ஓட ஆரம்பித்தது. காத்தான் தன்னுடைய பற்களால் அதன் கழுத்தில் கட்டப் பட்டிருந்த புதுத் துண்டை அவிழ்த்துக் கவ்விக் கொண்டு, அபாரத் துணிச்சலும் தீர்மானமும் கொண்டு ஓர் ஊசல் கொடுத்துத் திடீரென்று கையைவிட்டுப் பின்புறமாக மாட்டின் முதுகின் மேலே தாவினான். தாவின சமயம் மாடு ஒரு மரத்தடியில் வந்தது. ஒரு விநாடிதான் அவனுக்கு யோசிக்க இடமிருந்தது. மரத்தில் தொத்திக் கொள்ளலாம் என்று கிளையைப் பற்றிக் கால்களைத் தூக்கினான். மாடு வெகுண்டது போல் பின் வாங்குவதற்கும், அவன் கனமையால் எதிர்பாராத 'வண்ணம்' கிளை தாழ்வதற்கும் சரியாக இருந்தது. மாடு பாய்ந்து அவனுக்குக் கீழே கொம்புகளைத் தாழ்த்திற்று. காத்தான் உடல் மாட்டின் கொம்புகளில் இறங்கியது.

## தற்கால நாகரீகம்

# கைத்தறி துணிகளே



# திருமூலர் தவ மொழி

## ராஜாஜி - சோமு

### 27

கடவுளுடைய சிருஷ்டியைப் பற்றிச் சொல்லும்போது அந்தச் சிருஷ்டிக்குக் காரணமாக அமைந்தது, இறைவனின் திருவுள்ளத்தில் தானாகத் தோன்றிய உகப்பு என்று பாடுகிறார் திருமூலர்.

உகந்துநின் றேபடைத்
தான்உல கேழும்
உகந்துநின் றேபடைத்
தான்பல ஊழி

ஊழி ஊழியாக, ஒரு கற்பம் முடிந்ததும் மறுபடியும் படைத்துத் திரும்பத் திரும்ப இந்த உலகங்களைத் தோற்றுவித்தான் இறைவன், தன் னுடைய உள்ளத்து உகப்பினால்!

உகந்துநின் றேபடைத்
தான்ஐந்து பூதம்
உகந்துநின் றேஉயிர்
ஊன்படைத் தானே!

பஞ்ச பூதங்களையும், உயிரையும், உயிருக்கு நிலையமாக உடம்பையும் படைத்தான். எல்லாம் அவனுடைய உகப்பில் பிறந்தவை.

உகந்துநின் றேபடைத்
தான்உல கேழும்
உகந்துநின் றேபடைத்
தான்பல ஊழி
உகந்துநின் றேபடைத்
தான்ஐந்து பூதம்
உகந்துநின் றேஉயிர்
ஊன்படைத் தானே

இந்தப் பாட்டைத் திருமூலர் பாடியதன் கருத்து என்னவென்றால், ஆண்டவனுடைய உகப்பில் தோன்றிய இந்தப் படைப்பு அழிப்பு ஆகிய திருவிளையாடலை நாமும் உகந்தே ஒப்புக் கொள்ள வேண்டும், அதைப் பற்றி வருந்தலாகாது என்பது.

இப்படித் திரும்பத் திரும்ப உகந்து சிருஷ்டித்துக் காத்து அழிக்கும் தெய்வத்தின் திருவுருவம் யாரும் கண்டறிய முடியாத தன்மையது என்பதை இனிப் பாடுகிறார் முனிவர்.

ஆரும் அறியாதவ்
அண்டத் திருவுரு

பிரபஞ்சமே தனது வடிவாகக் கொண்டு நிற்கும் அந்தத் தெய்வத் திருவுருவத்தை யாரும் அறிவதில்லை. அந்த உருவத்தைப் பற்றி மேலும் சொல்லுகிறார்.

பார்முத லாகப்
பயிலும் கடத்திலே

[பார்—பூமி. கடம்—பாத்திரம்]

நிலம், நீர், காற்று முதலிய அனைத்தையும் ஒரு பாத்திரமாக வைத்துப் பாடுகிறார். இந்தப் பாத்திரத்தில்,

நீரினில் பால்போல
நிற்கின்ற நேர்மையை

நீரிலே பால் கலந்தால் அது எப்படி நீர் முழுதும் பரவிநிற்கிறதோ, அப்படி இறைவன் பிரபஞ்சத்தில் கலந்து நிற்கும் தன்மையை,

சோராமல் காணும்
சுகம்அறிந் தேனே

அந்தத் தன்மையை இடைவிடாமல் நியானித்து உணர்ந்து அனுபவிக்கிற ஆனந்தத்தை அடைந்தேன் என்று களிப்போடு பாடுகிறார்.

ஆரும் அறியாதவ்
அண்டத் திருவுரு
பார்முத லாகப்
பயிலும் கடத்திலே
நீரினில் பால்போல
நிற்கின்ற நேர்மையைச்
சோராமல் காணும்
சுகம்அறிந் தேனே!

# உழவனுக்கு உதவும் ஸ்தாபனம்

“பொருளாதார முன்னேற்றம் விவசாயத்திலிருந்து தான் ஆரம்பமாகிறது என்பதை இந்தியா கசப்பான அனுபவங்களுக்குப் பிறகுதான் உணரத் தொடங்கியிருக்கிறது'' என்று தயங்காமல் இடித்துக் காட்டியிருக்கிறார் ஸ்ரீ பெர். 'யார் இந்தப் பெர்' என்று கேட்கிறீர்களோ? சொல்கிறோம்.

ஸிம்ஸன் கம்பெனியாரும் டிராக்டர்கள் உற்பத்தி செய்யும் அமெரிக்கக் கம்பெனியாகிய மாஸெ பெர்குஸன் ஸ்தாபனமும் ஒத்துழைத்துச் சென்னையில் டிராக்டர் உற்பத்தித் தொழிற்சாலை ஒன்றினை நிறுவியுள்ளனர். ஸ்ரீ சிவசைலம் அவர்களை ஜெனரல் மானேஜராகக் கொண்ட இந்த ஸ்தாபனம் வருஷத்தில் ஏழாயிரம் டிராக்டர்களை உற்பத்தி செய்யும். எடுத்த எடுப்பிலேயே ஐம்பது சதவிதத்துக்கு மேற்பட்ட டிராக்டர் பாகங்களை அயல் நாடுகளிலிருந்து தருவிக்காமல் இங்கேயே உருவாக்குவது மகிழ்ச்சிக்குரிய செய்தி. விரைவில் இந்தச் சதவீதம் மேலும் அதிகமாகும். ஸிம்ஸன் கம்பெனியார் தயாரிக்கும் பெர்க்கின்ஸ் டீஸல் என்ஜின்கள்தான் இந்த டிராக்டர்களில் பொருத்தப்படுகின்றன.

இந்த டிராக்டர் தொழிற்சாலையை நமது முதல் மந்திரி ஸ்ரீ காமராஜர் சமீபத்தில் திறந்து வைத்தார். இரண்டு டிராக்டர்களைச் சுற்றிக் கட்டியிருந்த ரிப்பனைக் கத்திரித்ததுடன் நில்லாமல் அவற்றுள் ஒன்றின் மீது ஏறி அமர்ந்தும் பார்த்தார். தொழில் மந்திரி ஸ்ரீ வெங்கடராமனே டிராக்டர்கள் சரியாகத் தொழிற்படுகின்றனவா என்று பரிசோதிக்க அவற்றுள் ஒன்றை ஓட்டியே பார்த்துத் திருப்தியடைந்தார்.

'ஸிம்ஸன் குரூப்' கம்பெனிகளின் சேர்மன் ஸ்ரீ அனந்தராமகிருஷ்ணன் அனைவரையும் வரவேற்று அழகாகப் பேசினார்.

இந்த டிராக்டர் விவசாய சாதனங்கள் உற்பத்திச் சாலையின் விற்பனை மானேஜர்தான் ஆரம்பத்தில் குறிப்பிட்ட ஸ்ரீ பெர். அவர் ஆராய்ந்தறிந்து எழுதியுள்ள ஒரு கட்டுரையினை இந்த விழாவின்போது அச்சிட்டு விநியோகம் செய்தார்கள். அக் கட்டுரையில் ஸ்ரீ பெர் மேலும் கூறுகிறார்:

''கிராமங்களில் விவசாயத்தை நம்பி வாழும் ஜனத்தொகையைக் குறைத்து வேறு தொழில்களில் அவர்களை ஈடுபடுத்துவதே ஐந்தாண்டுத் திட்டங்களின் நோக்கமாக இருந்து வருகிறது. அப்படி விவசாயத்தை நம்பி வாழும் மக்களின் தொகை கணிசமாகக் குறையும்போது டிராக்டர்கள் போன்ற நவீன சாதனங்களின் உபயோகம் அதிகமாகும்.

''மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் இறுதியில் - 1966க்குள் - நாம் 105 மிலியன் டன் உணவு உற்பத்தி செய்ய வேண்டும். இல்லையேல் நாட்டின் பல பாகங்களிலும் நிச்சயமாகப் பஞ்சம் ஏற்படும். இந்நிலையில் நமது அதிகபட்ச உற்பத்தி 1959ல் 73 மிலியன் டன்கள்தான்....''

சரி, உணவு உற்பத்தியை அதிகரிக்க நமது சர்க்கார் என்ன செய்து வருகிறது? ஸ்ரீ பெர் கூறுகிறார்:

''உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்காக என்று கூறிக் கொண்டு நில உச்ச வரம்புச் சட்டம் கொண்டு வருவது தேசத்தின் அடிப்படை நலனுக்கு எதிராகக் காரியம் செய்வதாகத்தான் முடியும்.. கூட்டுறவு முறையை ஆதரித்தும் அதற்கு எதிராகவும் நிறையப் பேசலாம். ஆனால் செயல் முறையில் பார்க்கும் போது பலன் எண்ணிக்கையில் குறைவாகவே இருக்கும். அதுவும் மிக மிக நிதானமாகவே ஏற்படும்....''

ரொம்பவும் ஜாக்கிரதையாகப் பேனாவை ஓட்டும் ஸ்ரீ பெர் கூட்டுறவின் உதவாக்கரைத் தன்மைக்கு நிபுணர்களின் எழுத்திலிருந்து மேற்கோள்களும் எடுத்துக் காட்டுகிறார்.

''பொருளாதார லட்சியத்துக்கும் அரசியல் லட்சியத்துக்கும் உள்ள இந்த முரண்பாடு உலகின் மற்ற நாடுகளில் தவிர்க்கப்படுவதற்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகிறது'' என்றும் சொல்கிறார்.

ஆகக் கூடி ஸ்ரீ பெர் எதிர்பார்ப்பது போல் பொருளாதார முன்னேற்றம் விவசாயத்திலிருந்து தான் ஆரம்பமாகிறது என்பதை இந்தியா - பாரத மக்கள் - உணர்ந்திருக்கலாம்; ஆனால் ஆளும் கட்சியினர் உணர்ந்ததாகத் தெரியவில்லை.



# பிணி தீர்க்கும் நற்பணி

அந்தச் சிறுவனுக்கு வயது ஏழு. தகப்பனார் ஒரு பள்ளி உபாத்தியாயர். மாதச் சம்பளம் நூற்றி நாற்பத்தெட்டு ரூபாய். அதைக் கொண்டுதான் குடும்பத்தின் ஜீவனம் நடைபெற்று வந்தது.

ஒரு நாள் அந்த உபாத்தியாயர் ஒரு நற்செய்தியைக் கேள்வியுற்றார். டாக்டர்களெல்லாம் ஒன்றுகூடிக் குறைந்த வருவாயுள்ளவர்களுக்குத் தன்னலமற்ற சேவை செய்யத் தீர்மானித்திருப்பதைப் பற்றி அவருக்குத் தெரிய வந்தது.

குடும்பத் தலைவர் புத்திசாலி. இந்த அரிய வாய்ப்பைக் கை நழுவ விடாமல் உடனடியாக அந்த ஸ்தாபனத்தில் சேர்ந்துவிட முடிவு செய்தார். 'வாலண்டரி ஹெல்த் ஸர்விஸஸ்' என்ற அந்த ஸ்தாபனத்தில் அங்கத்தினராகிவிட்டால் தமது குடும்பத்தின் ஆரோக்கியத்தை 'இன்ஷுர்' செய்து கொண்டது போலாகும் என்பதை நன்கு உணர்ந்து கொண்டார் அவர்.

வருஷ வருமானத்தைக் கேட்டறிந்தவர்கள் அதில் கால் சதவீதத்தைத்தான் சந்தாவாகத் தரச் சொன்னார்கள். அதன்படி உபாத்தியாயர் ரூபாய் 4-44 கொடுத்து அங்கத்தினராகப் பதிவு செய்து கொண்டதின் மூலம் தமது குடும்பத்தின் ஆரோக்கியத்தை ஒரு வருஷத்துக்கு 'இன்ஷுர்' செய்துகொண்டார்.

கொஞ்ச நாட்களுக்குப் பிறகு பையனுக்குச் சுரம் கண்டது. உபாத்தியாயர் சிறிதும் தயங்கவில்லை. உடனடியாகச் சிறுவனை வி. ஹெச். எஸ். ஸ்தாபனத்துக்கு அழைத்துப் போனார். பல பரிசோதனைகளுடன் பையனின் மார்பை 'எக்ஸ்ரே' எடுத்துப் பார்த்தார்கள். க்ஷயரோகத்தின் ஆரம்பநிலை என்பதைக் கண்டார்கள். உடனே சிகிச்சையும் தொடங்கியது. பையன் வெகு சீக்கிரத்தில் குணமாகி ஓடியாடி விளையாட ஆரம்பித்து விட்டான்.

பல மாதங்களாகவே அந்த உபாத்தியாயருக்குக் கண் பார்வை சரியில்லாமலிருந்து வந்தது. கண் வைத்திய நிபுணரிடம் செல்ல வேண்டும் என்று அவருக்கு ஆலோசனை கூறியிருந்தார்கள். ஒரு கண் டாக்டரை நாடிச் சென்றார் உபாத்தியாயர். கண்களைப் பரிசோதனை செய்துவிட்டுக் கண்ணாடியணிந்துகொள்ள வேண்டும் என்று கூறி எழுதிக் கொடுத்தார் டாக்டர். அவருடைய வழக்கமான 'பீஸ்' இருபத்தைந்து ரூபாய். ஆனால் தம்மிடம் வந்திருக்கும் நபர் வி. ஹெச். எஸ். ஸ்தாபனத்தின் அங்கத்தினர் என அறிந்து கொண்டதும் ஐந்து ரூபாய்தான் பீஸாகப் பெற்றுக் கொண்டார். தாம் கட்டிய சந்தாத் தொகையைப் போலப் பல மடங்கு அதிகமாகத் தாம் லாபம் அடைந்திருப்பதை அந்த உபாத்தியாயர் உணர்ந்தார்.

மேற்குறிப்பிட்ட சம்பவம் கற்பனையல்ல; உண்மைதான்! அந்த உபாத்தியாயர் இந்த ஸ்தாபனத்தின் அங்கத்தினராக இல்லாமலிருந்திருந்தால், என்னவாகியிருக்கும்? நோயுற்ற தமது பையனை டாக்டரிடம் அழைத்துப் போக ஒரு தடவைக்குப் பத்து தடவை யோசித்திருப்பார் அவர், செலவைக் கருதி. அவர் ஒரு முடிவுக்கு வருமுன் பையனுடைய ரோகம் மிக அதிகமாகி விட்டிருக்கும்.

ஆனால் அதிர்ஷ்டவசமாக அப்படியொன்றும் நேரவில்லை. செலவைப் பற்றிய லட்சியமே இல்லாமல் உடனடியாக வைத்திய சிகிச்சை நடைபெற்றது. சர்க்கார் ஆஸ்பத்திரிக்கு அவனை அழைத்துப் போயிருந்தாலும் கூட நூறு ரூபாய்க்கு அதிகமாகச் சம்பளம் வாங்குகிறவரானகையால் அவர் கட்டணம் செலுத்த வேண்டியிருந்திருக்கும்.

சரி, இப்படி அங்கத்தினராகப் பதிவுசெய்து கொண்ட ஒருவரது குடும்பத்தில் யாருக்குமே நோயுண்டாகவில்லை என்று வைத்துக் கொள்ளுவோம். அவர் செலுத்திய வருஷச் சந்தாத் தொகை வீணாகி விட்டதா, என்ன? இல்லவே இல்லை. அவரைப் போன்ற குறைந்த வருவாயுள்ள வேறொருவருக்குச் சிகிச்சை அளிக்கத்தான் பயன்பட்டிருக்கிறது. அதோடு, அந்த அங்கத்தினர் குடும்பத்துடன் ஒரு முறை சென்று தேக ஆரோக்கியத்தை இலவசமாகப் பரிசோதனை செய்து கொண்டு திரும்பலாம்.

நானூறு ரூபாய்க்கு அதிகமாக வருவாயில்லாதவர்களுக்கு இந்த ஸ்தாபனம் ஒரு வரப்பிரசாதம் போலாகும். ஆரம்பத்தில் காலஞ்சென்ற திரு 'ஹிந்து' ஸ்ரீனிவாசன் இந்த ஸ்தாபனத்தின் தலைவராக இருந்து சிறப்பாகத் தொண்டாற்றி வந்தார். இப்பொழுது அப்பதவிக்குப் பெருமை சேர்க்கும் வகையில் தலைவராகப் பணியாற்றி வருகிறார் திரு பி. ஜகந்நாததாஸ் அவர்கள்.

நல்ல மனம் கொண்டவர்கள் இந்த ஸ்தாபனத்துக்கு நன்கொடை அளித்துள்ளார்கள். இனியும் அளிக்கப் போகிறார்கள், அளிக்கவும் வேண்டும்! சர்க்காரும் பெருமளவுக்கு உதவக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

வைத்திய உதவி அளிப்பதுடன் மருத்துவத் துறையில் கல்வி அறிவு புகட்டவும் ஆராய்ச்சிகள் நடத்தவும் திட்டமிட்டு வருகிறது வி. ஹெச். எஸ். ஸ்தாபனம். சென்னை அடையாற்றில் ஓர் ஆஸ்பத்திரி கட்டவும் இப்போது ஏற்பாடாகி வருகிறது.

பிணி தீர்க்கும் நற்பணியைத் தனது பெருங் குறிக்கோளாகக் கொண்டுள்ள இந்த ஸ்தாபனத்தின் தன்னலமற்ற இந்தத் தொண்டு வாழ்க வளர்க என்று பாரதப் பிரதமர் நேருஜியுடன் நாமும் சேர்ந்து வாழ்த்துவோம்.



'ஹிந்து' ஸ்ரீனிவாசன்

# பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடரை உபயோகித்து நாள் முழுவதும் புத்துணர்ச்சியையும் நறுமணத்தையும் அனுபவியுங்கள்




நறுமணமுள்ள, புத்துணர்ச்சியளிக்கும் பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடரை உபயோகித்தால் மிக உஷ்ண காலத்திலும்கூட குளுமையுடன் இருக்கலாம். இந்த மிருதுவான பவுடரை உங்கள் உடம்பின்மேல் தூவிக்கொண்டால் அது வியர்வையை உறிஞ்சி உங்களை நாள் முழுவதும் காலையில் இருக்கும் புதுமலர்ச்சியுடனும், நறுமணத்துடனும் விளங்கச் செய்யும். நீண்ட நேரம் புத்துணர்ச்சியுடன் இருக்க எப்பொழுதும் பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடரையே உபயோகியுங்கள்.

சீஸ்ப்ரோ–பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பெற்றது)

JWT-P 1873

# வட்டமேஜை 

## அஞ்சல்துறைக்கு ஓர் அஞ்சல்

இந்தக் கடிதத்தில் நான் யாரைப் பற்றிக் கூறப் போகிறேனோ, அவர் ஆயிரத்தில் ஒருவராகப் புகழ் பெற்றவர்.

அவர் ஆங்கிலேயரும் வியந்து போற்றும் வண்ணம் ஆங்கிலத்தில் சொல்மாரி பொழிந்தவர்; கோபாலகிருஷ்ண கோகலே அவர்களைத் தம்முடைய அரசியல் குருநாதராகக் கொண்டவர்; காந்தியடிகளைப் பின்பற்றிக் கடல்கடந்து தென் ஆப்பிரிக்கா சென்று கல்விப் பணி புரிந்தவர்; அந்தப் பணியின் காரணமாகப் பிற்காலத்தில் தம் பெயராலேயே அங்குள்ள இந்தியர்கள் ஒரு கல்லூரி நிறுவும் அளவுக்குப் பெருமை பெற்றவர்; அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும் சிறிது காலம் துணை வேந்தராயிருந்தவர்.

இவ்வளவு தகுதிகளை உடையவராயிருந்து அமரரான அந்தப் பெரியவர் யாரென்று சொல்லாமலே எழுதிக் கொண்டு போகிறேனே! அவர்தாம் மகாகனம் சீனிவாச சாஸ்திரியார். இன்று நம் இளைஞர்கள் எல்லாம் 'அவ்வளவு அருமையாக அந்நாளில் ஆங்கிலச் சொற்பொழிவு செய்த சாஸ்திரியார் யார்' என்று கேட்டு வியப்பதற்கும் பெருமைப்படுவதற்கும் காரணமானவராய் இருந்தவர்.

"பொன்னணி உலகு சென்றான்
புவிப்புகழ் போதும் என்பான்"

என்று புதுமைக் கவியரசர் பாடியது ஒப்பப் புவிப் புகழ் போதும் என்றாற் போல் சாஸ்திரியார் அமரராகி விட்டாராயினும் அவரைப் போல் நாவிறு படைத்தவர்களை மறவாமற் போற்ற வேண்டிய கடமை நமக்கு உண்டு.

மறவாமற் போற்றுவதற்கு எத்தனையோ வழிகள் உண்டு. அஞ்சலி செய்து போற்றுவதற்குரிய ஒரு வழி அஞ்சல் வழி (தபால் துறை). திருவள்ளுவர், பாரதியார் போன்ற தமிழ்ப் புலவர்களின் உருவங்களைத் தபால் தலைகளில் அச்சிட்டாற்போல மகாகனம் சாஸ்திரியாருடைய உருவத்தையும் அச்சிட்டுப் போற்றுமாறு வேண்டுகிறேன். அந்தச் சொல் வீரரின் உருவைக் காணும் ஆவலோடு உள்நாட்டிலும், வெளிநாடுகளிலும் இருக்கும் அன்பர்களின் விருப்பத்தைத் தயங்காமல் நிறைவேற்றி வைக்க அஞ்சல் இலாகாவினர் தவற மாட்டார்கள் என நம்புகிறேன்.

சென்னை-17 — டி. எஸ். நாராயணசுவாமி
29-9-61 — பி. ஏ. பி. எல்.

## வேண்டாம் இந்த மாற்றம்

இதுவரை ஜில்லாபோர்டைச் சேர்ந்திருந்த லோகல் பண்ட் டிஸ்பென்சரிகளிலும், ஆஸ்பத்திரிகளிலும் எல். ஐ. எம். தேறியவர்கள் மருத்துவ அதிகாரிகளாகப் பணியாற்றி வந்துள்ளார்கள். 1958-ம் வருஷத்திய சென்னை பஞ்சாயத்து ஆக்ட் பதின்மூன்றாவது பிரிவின்படி பஞ்சாயத்து யூனியன் ஏற்பட்ட தேதியிலிருந்து ஜில்லா போர்டு ஆஸ்பத்திரிகள் அரசாங்கத்தின் வசம் மாற்றப்பட்டு வருகிறது. சர்க்காரால் 1-6-61 தேதி வெளியிடப்பட்ட (நெம்பர் 19036-எச்., 3-61-5 கல்வி சுகாதார இலாக்கா) உத்தரவில் இந்த ஆஸ்பத்திரிகளில் ஏற்கனவே வேலை பார்த்து வரும் எல். ஐ. எம். மருத்துவர்களைச் சர்விசில் சேர்த்துக் கொள்ள முடியாது என்று கூறப்பட்டிருக்கிறது. முன்பு, எம். பி. பி. எஸ்., எல். எம். பி., ஜி. சி. ஐ. எம். இவற்றில் தேர்ச்சி பெற்றவர்களைப் போலவே எல். ஐ. எம்.களும் இந்த ஜில்லா போர்டு ஆஸ்பத்திரிகளில் பணி புரிவதை அரசாங்கம் அனுமதித்து உத்தரவிட்டிருக்கிறது. கிராமாந்தரங்களிலேயே உள்ள வைத்தியசாலைகளில் ஆங்கில முறை வைத்தியத்தில் தேறியவர்கள் பணிபுரிய முன்வராததால் எல். ஐ. எம். தேர்ச்சி பெற்று ஒரு வருஷ 'ஹவுஸ் சர்ஜன்சி' அனுபவத்துடன் இருந்தவர்களை வேலையில் அமர்த்தி வந்தனர். அவர்களின் கீழ் இந்த ஆஸ்பத்திரிகள் திறம்பட இயங்கி வந்திருக்கின்றன. பொதுமக்களுக்குச் சிறந்தமுறையில் உபயோகப்படும்படி நடந்து வந்திருக்கின்றன.

ஆஸ்பத்திரிகளைப் பராமரிக்கும் பொறுப்பு ஸ்தல ஸ்தாபனங்களிலிருந்து அரசாங்கத்துக்கு மாற்றப்படுவதால் ஆஸ்பத்திரிகளில் இது வரையிலிருந்து வந்த நடைமுறையை ஏன் மாற்ற வேண்டும் என்பது புரியவில்லை. எனவே, எல். ஐ. எம். தேர்ச்சி பெற்றவர்களின் நியாயமான வேண்டுகோளைப் பரிசீலனை செய்து அவர்களைத் தற்போது வேலை பார்த்து வரும் ஆஸ்பத்திரிகளில் நீடித்துச் சேவை செய்ய அனுமதிக்குமாறும் அரசாங்க சர்விசில் சேர்த்துக் கொள்ளுமாறும் கேட்டுக் கொள்ளுகிறேன்.

காரியதரிசி,
எல். ஐ. எம். மருத்துவர் சங்கம்

## பர்மிட் (துர்) விநியோகம்

சென்னை ராஜ்யத்தில் சிலருக்குப் பருத்தி நூல் அல்லாத மற்ற நூல்களை உபயோகித்து விசைத் தறியில் ஜவுளிகளைத் தயார் செய்யப் பம்பாய் ஜவுளி ஆணையாளர் அனுமதி கொடுத்திருக்கிறார். மதுரைமா நகரில் இந்த அனுமதி பெற்றவர்கள் இந்த நூல்களை உபயோகித்துப் பார்த்ததில் மதுரையின் சீதோஷ்ண நிலை காரணமாக அவை நெசவுக்கு ஒத்துவரவில்லை என்பது தெரிந்தது. ஆகையால் சென்னை ராஜ்யத்தின் சீதோஷ்ண நிலை காரணத்தாலும், பருத்தி நூல் அல்லாத மற்ற நூல்களில் ஜவுளிகளைத் தயார் செய்ய அனுபவம் வாய்ந்த தொழிலாளர்கள் கிடைக்காத காரணத்தாலும் தொழில் செய்ய முடியவில்லை என்று சென்னை சர்க்காருக்கு அவர்கள் பல ஆண்டுகளுக்கு முன்பிருந்து சுட்டிக்காட்டி வந்திருக்கிறார்கள். தொழில் மந்திரிக்குப் பர்மிட் 'எண்ணைக் குறிப்பிட்டு, தங்களுக்குப் பருத்தி நூல் வழங்க ஏற்பாடு செய்யுமாறு கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். எனினும் இவற்றை



திருப்புகழ் பஜனையின் ஐந்தாவது ஆண்டு விழா சென்ற 23-ந் தேதி மாலை திருவல்லிக்கேணி தவன உத்ஸவ பங்களாவில் திருப்புகழ்மணி டி. எம். கிருஷ்ண சாமி அய்யர் தலைமையில் சிறப்பாக நடந்தது. சேங்காலிபுரம் பிரம்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர் அவர்கள், நாம பஜனையின் மகிமையை எடுத்துக் கூறினர். பிறகு பஜனை கோஷ்டிகள் புடைசூழக் கந்தனும் கண்ணனும் நான்கு வீதிகளையும் சுற்றிப் பவனி வந்தனர்.

---

அரசாங்கம் பொருட்படுத்தாமல் தங்களுக்கு வேண்டிய பல ஜவுளி ஆலைகளுக்கே இந்த வசதி அளித்திருப்பது மறுக்க முடியாத உண்மை. பர்மிட் லைசென்சு வழங்கும் அதிகாரமும், பணம் படைத்தவர்களின் ஆதரவுமே ஆளும் கட்சியை இயக்குகிற தென்பதற்கு இதுவும் ஓர் உதாரணம்!

மதுரை
25-9-61 பி. ஆர். சௌந்தர பாண்டியன்

## பணம் கொடுத்தும் பயனில்லை

இராமநாதபுரம் ஜில்லா சிவகங்கை தாலூகா பாகனேரியில் அரு. கண. அருணாசலம் செட்டியார் பெயரால் ஒரு பிரசவ ஆஸ்பத்திரி கட்டுவதற்காக என் மாமனார் அருணாசலம் செட்டியாரவர்கள் ரொக்கமாக ரூபாய் இருபதாயிரமும் சுமார் பத்தாயிரம் மதிப்புள்ள மனையையும் இராமநாதபுரம் ஜில்லா போர்டு தலைவர் திரு இராமசாமி நாயுடு எம். ஏ. பி. எல். எம். எல். ஏ. அவர்களிடம் 1-6-55 ல் கொடுத்தார்கள். நன்கொடை கொடுத்த அருணாசலம் செட்டியாரவர்கள் 2-11-57 ல் காலமாகி விட்டார்கள். அவர்கள் காலத்திலேயே பிரசவ ஆஸ்பத்திரியைக் கட்டி முடிக்க வேண்டுமென்று வெகு பிரயாசைப்பட்டும் இராமநாதபுரம் ஜில்லா போர்டு முயற்சியின்மையின் காரணமாக ஆஸ்பத்திரி கட்டி முடியாமல் போய் விட்டது. மேலும் அருணாசலம் செட்டியார் உயிருடன் இருக்கும் காலத்திலேயே மேற்படி பிரசவ ஆஸ்பத்திரித் தலைவர், திரு இராமசாமிநாயுடு அவர்களையும் திரு ராஜா சர் முத்தையா செட்டியார் அவர்களையும் கூட்டி வந்து பிரசவ ஆஸ்பத்திரிக்காகக் கொடுத்த இடத்தில் கல்நாட்டு விழாவும் வெகு சிறப்பாக நடத்தினர். அதன்பின் ஆஸ்பத்திரி கட்டிட வேலை ஒன்றும் நடைபெறாததால் அவர்களுடைய வாரிசுதாரர்கள் ஜில்லா போர்டுக்கு எழுதிக் கேட்டதில் மேற்படி ஆஸ்பத்திரி வேலையைக் காரையார் கோயில் பிளாக் டெவலப்மெண்டார் வசம் ஒப்புவித்துப் பணத்தையும் கொடுத்து விட்டதாகவும் அவர்களிடம் தொடர்பு வைத்துக் கொள்ளும் படியும் சொல்லி விட்டார்கள். அதன் பின் காரையார்கோயில் பிளாக் டெவலப்மெண்ட் ஆபீஸில் போய் நேரிலும் கடித மூலமும் கேட்டதில் பிளான் வந்தவுடன் வேலை பார்ப்பதாகச் சொன்னார்கள். ஆஸ்பத்திரி பிளானும் சிவகங்கை அசிஸ்டெண்டு இன்ஜினீயர் சென்ற 15-11-59 டெவலப்மெண்டு ஆபீஸருக்கு அனுப்பி விட்டார்கள். அதன் பின்னும் இதுவரை ஆஸ்பத்திரி வேலை ஆரம்பிக்கவில்லை. வேலை ஆரம்பிப்பதில் ஏன் தாமதம் என்று சமீபத்தில் கேட்டதற்கு, பேப்பர் சென்னை ஆர். டி. பி. ஆபீசுக்குப் போயிருப்பதாகவும், அது வந்துதான் வேலை ஆரம்பிக்க வேண்டுமென்றும் சொல்லி விட்டார்கள்.

அருணாசலம் செட்டியார் காலமாகிய பின் மேற்படி ஆஸ்பத்திரி வேலை சம்பந்தமாகச் சென்னை முதலமைச்சருக்கு நேரில் மனுக் கொடுத்தும் மந்திரிகளுக்கும் அதிகாரிகளுக்கும் கடிதம் எழுதியும் இதுவரை எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை.

திரு அருணாசலம் செட்டியாரவர்கள் இவ்வூரில் பூங்காவும், ரேடியோவும், கால அறிவிப்புச் சங்கும் அமைத்து அவற்றை இவ்வூர் பஞ்சாயத்து போர்டுக்கு இனமாக வழங்கியும் மற்றும் இராமநாதபுரம் ஜில்லா போர்டுக்குத் தம் இடத்திலேயே ஓர் ஆரம்பப் பாடசாலை கட்டியும் உதவியுள்ளார்கள்.

பாகனேரியில் ஒரு பிரசவ ஆஸ்பத்திரி இல்லாததால் இவ்வூர் மக்கள் மிகவும் கஷ்டத்துக்குள்ளாகி வருகிறார்கள். நன்கொடைத் தொகை கொடுத்து ஆறு ஆண்டு காலத்துக்கு மேல் ஆகியும் இதுவரை ஆஸ்பத்திரி கட்டப்படவில்லை.

பாகனேரி
30-8-61 சுப. வே. மாணிக்கம்

# புதுவெள்ளம்

அத்தியாயம் இருபத்தொன்று

## வெளியேற்றம்

அகிலன்

இரண்டு வெளித் திண்ணைகள், ஒரு கூடம், கூடத்தை யொட்டிய சமையல் அறை, இதுதான் முருகையனின் கூரை வீடு. அந்த வீட்டுக்குள் திடீரென்று செல்வரத்தினம் நுழைந்தபோது அங்கே முருகையன் இல்லை. பாட்டியம்மாள் எரிச்சலோடு செல்வரத்தினத்தை ஏறிட்டுப் பார்த்து விட்டு, ''வா!'' என்று கூட அழைக்காமல் சமையலறைக்குள் சென்று விட்டாள். கட்டிலில் உட்கார்ந்திருந்த சிவப்பிரகாசத்துக்கு ஒரே வியப்பு. மகிழ்ச்சியோடு வரவேற்று அவனைத் தம் அருகில் உட்காரச் சொன்னார். செல்வரத்தினமோ மரியாதையுடன் தரையில் அமர்ந்தான்.

சிறிது நேரம் அவன் எதுவும் பேசவில்லை. பிறகு, ''ஒரு முக்கியமான விஷயத்தை உங்களிடம் சொல்லி விட்டுப் போகலாமென்று வந்தேன்'' என்றான். அவனுடைய பரபரப்பைக் கண்ட சிவப்பிரகாசம் அவன் சொல்லப் போவதைக் கேட்கத் தலை குனிந்தார். அடுப்படிக்குள்ளிருந்த பாட்டியும் தன் செவிகளைக் கூர்மையாக்கிக் கொண்டாள்.

''முருகையன் இந்தப் பட்டிக்காட்டில் இருந்துகொண்டு ஒரு வேலையும் கிடைக்காமல் சிரமப் படுவதை விட, அவன் எங்கேயாவது வெளியூருக்குப் போய் ஒரு வேலை தேடுவது நல்லது. அதைச் சொல்லி விட்டுப் போவதற்கே வந்தேன்'' என்றான் செல்வரத்தினம்.

''அட, பாவிகளா!'' என்ற பாட்டியின் குரல் சமையலறைக்குள்ளிருந்து கேட்டது. ''செய்ததையெல்லாம் செய்துவிட்டு, போதாக்குறைக்கு அவனை இந்த ஊரை விட்டே விரட்டப் பார்க்கிறீர்களா? அவனுக்கு எந்த ஊரிலே யாரைத் தெரியும்? இந்த ஊரிலேயே பிழைக்க முடியாதவன் எப்படி வெளியூரிலே போய்ப் பிழைப்பான்?''

பாட்டியின் ஆத்திரப் பேச்சைக் கேட்டுச் செல்வரத்தினம் கலக்கமடையவில்லை. அமைதியோடு, அதைக் காதில் வாங்கிக் கொள்ளாதவன் போல், சிவப்பிரகாசத்திடம் அன்றைக்கு நடந்த விஷயங்களைக் கூறினான். ஊருக்குள் பெருமான் சாமி கூட்டி வந்த கூட்டத்தையும், அதில் முருகையன் கலந்து கொண்டதையும்,



தன் தகப்பனார் கோபமடைந்திருப்ப தையும் தெரிவித்தான்.

''தவறுகளைச் சுட்டிக் காட்டினால், தெரியாமல் தவறு செய்பவர்கள் ஒரு வேளை திருந்தக் கூடும். ஆனால் தெரிந்து கொண்டே செய்பவர்களுக்குக் கோபம் தான் வரும். என்னுடைய அப்பா வுக்கு இப்போது முருகையன் மேலும் பெருமாள்சாமியின் மீதும் கோபம் வந் திருக்கிறது. அவரைப் பகைத்துக் கொண்டு இனி யாரும் இந்த ஊரில் அமைதியாக வாழ முடியாது. என் னுடைய மனம் கேட்கவில்லை. அதனால் தான் சொல்கிறேன்'' என்றான்.

''உங்கப்பனோட கோபம் வந்து எங் களை ஒண்ணும் செஞ்சிட முடியாது, போ!'' என்று கத்தினாள் பாட்டி.

''பணக்காரர்களுடைய கோபத்துக்கு ஏழைகள் பயப்பட்டுத்தான் ஆக வேண் டும், பாட்டி! அப்பா பணக்காரர்; முருகையன் ஏழை.''

சிவப்பிரகாசம் கிழவியை அதட்டி, அடக்கி விட்டு, செல்வ ரத்தினத்தைக் கண் கலங்க ஏறிட்டுப் பார்த்தார். அவ ருடைய செயலிழந்த நிலைமை அவருடைய பரி தாபகரமான பார்வையில் தெரிந்தது.

''ஊர் எப்படிப் போனால் என்னன்னு முருகையனும் சும்மா யிருக்க மாட்டேங் கிறான். ஒரு தடவை ஜெயி லுக்குப் போயிட்டு வந்த பிறகாவது அவன் திருந்தி யிருக்கணும். வயசுக்கு மீறிய பிள்ளையிடம் நான் இனி மேல் எதைச் சொல்லுவது?''

''அவனைக் குற்றம் சொல் லாதீர்கள், சித்தப்பா. அவன் என்னைவிட நல்லவன்!'' என் றான் செல்வரத்தினம். ''நான் அவனைவிட அதிகமாய்ப் படித் திருக்கிறேனே தவிர, அவ னுக்கு மற்ற மனிதர்களிடம் உள்ள பற்றுதல் எனக்குக் கிடையாது. ஆனால் மற்றவர் களுக்கு நல்லதைச் செய்ய முடியாத நிலையில் இருப்பவன், அதைச் செய்யப் போனால் அவனுக்கே ஆபத்தைத் தேடிக் கொள் வான். இப்போது நாம் பேசிய எந்த விஷயத்தையும் அவனிடம் சொல்லா மல், எப்படியாவது அவனை வெளி யூருக்கு அனுப்பப் பாருங்கள்.''

செல்வரத்தினத்தின் பேச்சுக்களைக் கேட்டுப் பாட்டிகூட மனம் நெகிழ்ந்து விட்டாள். 'தகப்பனுருக்கும் பிள்ளைக் கும் எவ்வளவு வித்தியாசம்!' என்று அவளால் எண்ணிப் பார்க்காமலிருக்க முடியவில்லை.

புறப்படுவதற்காக எழுந்த செல்வ ரத்தினம் சமையலறைக்குள் நுழைந்து, ''பாட்டி! நீங்கள் என் மீது எவ்வளவு கோபம் கொண்டிருந்தாலும் எனக்கு வருத்தமில்லை; ஆனால் முருகையனை மட் டும் இங்கே வைத்திருக்க வேண்டாம்'' என்றான். பெருமாள்சாமியுடன் சேர்ந்து கொண்டு எதையாவது முன் யோசனை யின்றிச் செய்துவிட்டு அகப்பட்டுக் கொள்வான் என்ற அச்சம் அவனுக்கு.

அத்துடன் பாட்டியிடம், நூறு ரூபாய் பணத்தை எடுத்துக் கொடுத்து, ''இதை அவனுடைய வழிச் செலவுக்கு நீங்கள் கொடுப்பதாகக் கொடுங்கள்'' என்றான். பாட்டி முதலில் மறுத்துப் பார்த்தாள்.



பிறகு செல்வரத்தினத்தின் அன்பையும் முருகையனின் நிலையையும் எண்ணிப் பார்த்து வாங்கிக் கொண்டான். சிவப் பிரகாசத்துக்கு அவன் பாட்டியிடம் பணம் கொடுத்துச் சென்ற விவரம் தெரியாது. தெரிந்திருந்தால் செல்வரத்தினம் தம்மை அவமதித்து விட்டதாக நினைப்பாரே தவிர, தமக்கு உதவிய தாக நினைக்க மாட்டார். கிராமத்துப் பழைய மண்ணில் விளைந்த முற்றிய பயிர் அவர்.

அன்றைக்கு இரவு முருகையனும் சிவப்பிரகாசமும் சாப்பிட்டு முடிந்த பிறகு, பாட்டியம்மாள் மெதுவாக முருகையனிடம் அந்தக் கிராமத்தைப் பற்றி வெறுத்துப் பேசத் தொடங்கினாள். கிராமத்தின் மீதுள்ள வெறுப்பால் அவனுகவே வேற்று ஊருக்குப் புறப்பட வேண்டுமென்பது அவள் ஆசை.

''ஊர் என்ன செய்யும் பாட்டி? இந்த ஊரில் உள்ள எல்லாருக்கும் இங்கேயே வேலை கொடுக்கவும் முடியும்; எல்லாரும் ஒரே குடும்பம்போல் கவலையில்லாமல் வாழவும் முடியும். 'கிராம சுயராஜ்யம்' என்று மகாத்மா சொல்லுகிருரே, அதை இங்கே கூடியவரையில் ஏற்படுத்திப் பார்க்கலாமென்றுதான் நம்பிக் கொண்டு வந்தேன்'' என்ருன் முருகையன். அவன் பேச்சு பாட்டிக்குப் புரியவில்லை.

''ஏன், தம்பி! எனக்கொரு யோசனை தோணுது. அதன்படி செய்தால்





கேரளா சீப் இன்ஸ்பெக்டர் ஆப் பிளான்டேஷன் திரு ராமசுவாமி அய்யர் அவர்களின் மருமான் சௌ. விஜயலக்ஷ்மிக்கும் திரு ராமகிருஷ்ணனுக்கும் விவாகம் வெகு விமரிசையாக பம்பாயில் நடைபெற்றது.



பாலக்காடு கே. எஸ். எம்போரியம் அதிபர் வைத்தியலிங்கம் அவர்களின் புதல்வி சௌ. கௌரிக்கும், கோயமுத்தூர் இராம்டன் கம்பெனியைச் சேர்ந்த திரு கிருஷ்ணனுக்கும் திருமணம் சிறப்பாக நடந்தது.



சென்னை லைப் இன்ஷ்யூரென்ஸ் கார்ப்பரேஷன் பிராந்தியக் காரியாலய சூப்பரின்டென்ட் திரு கணபதி அவர்களின் புதல்வி சௌ உமாசங்கரி திரு சீனிவாசனை மணம் புரிந்து கொண்டார்.

என்ன?'' என்றார் சிவப்பிரகாசம். அவர் கூறிய யோசனை முருகையன் சென்னைக்குப் புறப்பட்டுப் போய்ப் பட்டணத்துத் தங்கச்சியின் வீட்டில் தங்கிக் கொண்டு ஒரு வேலைக்கு முயற்சி செய்ய வேண்டு மென்பதுதான்.

முருகையன் ஏற்கனவே பல முறை சென்னைக்குப் புறப்படுவது பற்றி யோசனைகள் செய்திருக்கிறான். அங்கு சென்றால் சித்திராவின் சகோதரர்கள் தனக்குக் கட்டாயம் உதவி செய்வார்கள் என்று அவனுக்கொரு நம்பிக்கை. என்றாலும் ஏனோ அவனுக்குக் கிராமத்தை விட்டு வெளியேறுவதற்கு மிகவும் தயக்கமாக இருந்தது. தகப்பனாரையும் பாட்டியையும் முதுமைக் காலத்தில் ஏழைமையின் பிடிப்பில் விட்டு விட்டுச் செல்ல வேண்டும். சென்னைக்குச் சென்றால் தங்களுடைய குடும்பத்துக் கேற்பட்ட சிரமங்களை யெல்லாம் அங்குள்ளவர்களிடம் வெளியிடாமலிருக்க முடியாது. சித்திராவுக்குச் செய்தி தெரிந்தால் அவள் என்ன நினைப்பாள்?

முருகையன் மீண்டும் யோசனை செய்தான்.

அதற்குள் பாட்டி, ''அதுதான் சரி; அவங்களுடைய வேலைக்கு ஆள் தேவையாக இருந்தாலும் நீ அங்கேயே இருக்கலாம்'' என்றாள்.

''சரி, அப்பா! நாளைக்கே புறப்படுகிறேன்'' என்றான் முருகையன். வேறு எந்த வழிகளும் புலப்படாத போது, தென்பட்ட அந்த ஒரு வழியையும் அவன் விட்டுவிட விரும்பவில்லை.

அன்றைக்கு இரவில் படுக்கையில் உறக்கம் வராமல் தவித்துக் கொண்டிருந்தான் முருகையன். சித்திராவின் நினைவுமட்டிலும் அவனுக்கு இனிமையாக இருந்தது. விழுப்புரத்தில் சந்தித்தபோது உடனே தன்னோடு சென்னைக்கு வரும்படி வற்புறுத்திய அவள், அதன் பிறகு கடிதமே எழுதவில்லை. கடிதம் எழுதினால் உண்மைகளை எழுதி அவளுக்கும் துன்பம் கொடுக்க வேண்டுமே என்று பேசாதிருந்து விட்டான். இனி எந்தத் துணிவோடு, எந்தத் தன்னம்பிக்கையோடு, எந்த உறவோடு அவளிடம் பேசுவது? பழகுவது?

மறுநாள் பெருமாள்சாமியிடம் தன்னுடைய முடிவைப் பற்றித் தெரிவித்தான் முருகையன்.

வழக்கம் போலவே, ''நீ ஒரு கோழை!'' என்று தூற்றினான் அவன். ''என்னால் உனக்கு இந்த ஊரில் இப்போதைக்கு எதுவும் உதவி செய்ய முடியாது




# கால்கேட் பேபி பவுடர்

## குழந்தைகளின் சருமத்திற்கு அதிக சுகமூட்டுகிறது!

சிறந்த வாசனையோடு இதமளிக்கிறது என்று பல ஆயிரக்கணக்கான தாய்மார்களால் புகழப்படுவது !

---

பனகல் பார்க் நல்லி பனகல் பார்க் நல்லி



## நவராத்திரி விற்பனை!

பட்டுச் சேலைகள் - பாவாடைத் துண்டுகள் - சோளி பீஸ்களுக்கென

ஏர் - கண்டிஷன்

செய்யப்பெற்ற பிரத்தியேக வசதியுள்ள

## நல்லி சின்னசாமி செட்டி

(டெலிபோன் நெ. 88115)

தியாகராயநகர் - சென்னை -17

பனகல் பார்க் நல்லி பனகல் பார்க் நல்லி

பனகல் பார்க் நல்லி பனகல் பார்க் நல்லி

பின்னியின் சிறந்த ரகங்களனைத்தும் எமது பிரத்தியேக ஷோ-ரூமில் கிடைக்கும்

தான். இருந்தாலும் நான் சாப்பிடுவதில் பாதியை உனக்குப் பகிர்ந்து தருகிறேன். ஒருவருக்கொருவர் துணையாக நின்று இந்தக் கிராமத்தில் போராட்டங்களை நடத்துவோம். பலன் கிடைக்காமல் போகாது. நீ என்ன சொல்கிறாய்...?''

''உன்னோடிருந்து நன்மை தீமைகளைப் பகிர்ந்து கொள்வதற்கு நான் தயங்கவில்லை. ஆனால் உன்னுடைய வழிகளில் உள்ள பலாத்காரம்தான் எனக்கு வெறுப்பைத் தருகிறது. காந்தியத்திலிருந்து நழுவி நீ இப்போது அடிதடியில் இறங்கி விட்டாய். நமக்குள் இந்த அடிப்படை விஷயத்தில் ஒற்றுமையில்லாத போது, நாம் எப்படி ஒன்று சேர்ந்து ஊருக்கு உழைக்க முடியும்?

யோசித்துப் பார்த்தான் பெருமாள் சாமி. ''நீ சொல்வதும் நியாயம்தான். நாளைக்கு நமக்குள்ளாகவே ஒருவருக்கொருவர் மோதிக் கொண்டால், ஊரைக் கெடுக்கிறவர்கள் பாடு கொண்டாட்டமாகி விடும். தாராளமாகப் பட்டணத்துக்குப் போய் ஒரு வேலை தேடிக் கொள். ஆனால் எப்போதும் உன்னைச் சுற்றியிருக்கும் மனிதர்களை மட்டும் மறந்து விடாதே!''

வீட்டுக்கு வந்து தன் தந்தையிடம் விடைபெற்றுக் கொள்ளும் போது முருகையனால் தன் கண்ணீரை அடக்க முடியவில்லை. ''எப்போதும் உங்களுக்குப் பக்கத்தில் இருக்க முடியும் என்றுதான் நினைத்தேன். ஏதாவது நல்ல வேலை கிடைத்து உங்களையும் பாட்டியையும் அங்கே அழைத்துக் கொள்ள முடியுமென்றால் கட்டாயம் அழைத்துக் கொள்ளுகிறேன். மத்தியில் பணம் கிடைத்தால் அனுப்பி வைக்கிறேன்'' என்று முருகையன் தழுதழுத்த குரலில் கூறினான்.

''முருகையா! நீ எங்கே இருந்தாலும் நன்றாக இருந்தால் போதும். எங்களைப் பற்றிக் கவலைப் படாதே!'' என்று கூறினார் சிவப்பிரகாசம். காலில் விழுந்து எழுந்த மகனைக் கணப்போது இறுக்கமாகத் தழுவிக் கொண்டார். அவருடைய தேகம் நடுங்கியது.

பாட்டியிடம் விடைபெற்றுக்கொண்டு ரயிலடிக்குப் புறப்பட்டான் முருகையன். ரயிலேறி விழுப்புரம் தாண்டும் வரையிலும் அவனுடைய நினைவு பெரியபாளையத்தில் இருந்தது. பிறகு சென்னையை நோக்கிப் பறந்தது. சித்திராவைக் காணப் போகும் மகிழ்ச்சியில் அவன் தன் துன்பக் கவலைகளை மறந்தான்.

## அத்தியாயம் இருபத்திரண்டு

# மாப்பிள்ளை வந்து விட்டார்!

எழும்பூரில் இறங்கி வாடகைக்கார் ஒன்றைப் பிடித்துக் கொண்டு மாம்பலத்திலிருந்த சித்திராவின் பங்களாவுக்கு வந்து சேர்ந்தான் முருகையன். வாசலில் காவலுக்கு நின்ற கூர்க்காவுக்குத் தமிழும் தெரியவில்லை; ஆங்கிலமும் தெரியவில்லை. காரிலிருந்து பெட்டி படுக்கைகளை இறக்கி வைத்து விட்டுத் தான் யார் என்பதை அவனிடம் விளக்கப் புகுந்தான்.

வெளி வாயிலை ஒட்டினாற் போல், உள்ளே கார் செல்லும் பாதையும், பாதையை அடுத்துப் பூந்தோட்டமும் அதற்கப்பால் வீட்டுக் கட்டடமும் தெரிந்தன. மூன்றடுக்கு மாடிகள் உள்ள பெரிய பங்களா அது. அதற்கு முன்னால் நின்றபோது தான் எவ்வளவு சிறியவன் என்பது புலப்பட்டது. கூர்க்காவும் அவனும் பேசிக் கொண்ட குரல் கேட்டு விட்டு முகப்பிலிருந்து, யாரோ எட்டிப் பார்த்தார்கள். முருகையனும் பார்த்தான். அவனை அடையாளம் கண்டுகொண்ட பட்டினத்துத் தாத்தா உற்சாகத்தோடு முன்னால் ஓடி வந்தார்.

''யாரது, மாடி வீட்டு மாப்பிள்ளையா? வாங்க, வாங்க!''

மாடி வீடு தன்னை விட்டுப் போன பிறகும் அந்தப் பட்டம் போகாததைக் கண்டு தனக்குள் நகைத்துக் கொண்டான் முருகையன். தாத்தா அவனைப் பார்த்து உபசாரமாக இரண்டு வார்த்தைகள் பேசி விட்டு அவனுடைய பெட்டியையும் படுக்கையையும் தூக்கிக் கொண்டு உள்ளே வேகமாக நடந்தார். அதுவரையில் சிறிது குழப்பத்தோடு இருந்த முருகையனுக்குத் தாத்தாவின் பரிவைக் கண்டவுடன் தெம்பு வந்தது.

வீட்டின் முன் கூடத்துக்கு இரு புறங்களிலும் பெரிய பெரிய அறைகள் இருந்தன. ஓர் அறைக்குள் அவனுடைய சாமான்களை வைத்து விட்டு நாற்காலியில் அவனை உட்காரச் சொல்லி விட்டுப் பங்களாவின் பின்கட்டுக்குப் போனார் தாத்தா. போனவர் ஐந்து நிமிடங்களாகியும் திரும்பி வரவில்லை.

வீட்டின் உட்புறச் சுவர்கள் பனிங்கில் இழைத்தது போல் அழகாக இருந்தன. மூலைக்கு மூலை பூச்செடிகளையும் சின்னஞ்சிறு சிலை உருவங்களையும் வைத்து வீட்டின் அழகுக்கு மெருகு கொடுத்திருந்தார்கள். கதவுகளிலும் சன்னல்களிலும் திரைத் துணிகள் தொங்கின. முருகையன் வியப்புடன் ஒவ்வொரு புறமாகத் திரும்பிப் பார்த்து, 'நம்முடைய சித்திராவின் வீடா இது!' என்று திகைப்படைந்தான்.

ஓரிரண்டு வேலைக்காரர்களைத் தவிர, வீட்டுக்காரர்கள் யாரும் இன்னும்அவன் கண்களில் தென்படவில்லை. சித்திராவை எதிர்பார்த்து அவன் இருதயம் ஆவலுடன் துடித்தது. அவள் வந்தால் அவளிடம் எதை முதலில் பேச வேண்டும் என்பதைக்கூட அவன் மனப்பாடம் செய்து கொண்டான்.

ஆனால் தாத்தாவோ சித்திராவின் சிறிய அண்ணனை முதலில் அழைத்துக் கொண்டு வந்து சேர்ந்தார். ''மாடி வீட்டு மாப்பிள்ளையை நீங்க பார்த்திருக்கீங்களா? பெரியபாளையத்திலே பெரிய மாடிவீடு இவங்களுடையதுதான். பட்டணத்திலேன்னு தடுக்கி விழுந்தா மாடி வீட்டிலேதான் விழுகணும். பெரியபாளையத்து விஷயம் அப்படியில்லே! தம்பியோட மாடி வீட்டுக்குத்தான் அங்கே தனிப் பெருமை!''

முருகையனை அறிமுகப்படுத்த முனைந்த தாத்தா அவனை மறந்து விட்டு, அவனுடைய வீடு வாசல் நில புலன்களைப் பற்றியே சித்திராவின் சிறிய அண்ணனிடம் ஒன்றுக்குப் பத்தாக அளந்து விட்டுக் கொண்டிருந்தார். முருகையனுக்கோ வாயைத் திறந்து அந்தச் சமயத்தில் உண்மையைச் சொல்ல முடியவில்லை.

''வாங்க தம்பி! நம்பதான் விழுப்புரத்திலே ஏற்கெனவே சந்திச்சிருக்கோமே! அப்பவே நீங்க இங்கே வரப் போறிங்கன்னு சித்திரா சொல்லிக்கிட்டிருந்தா'' என்றார் சித்திராவின் தமையன் மாணிக்கம்.

''நம்ப பாப்பாவுக்குக்கூட நீங்க இங்கே வரலேன்னு ரொம்பக் கோபம்!'' என்றார் தாத்தா. பாப்பா என்று அவர் குறிப்பிட்டது சித்திராவைத்தான் என்று யூகித்துக் கொண்டான் முருகையன்.

சித்திராவின் சிறிய அண்ணன் தாத்தாவிடம் சொல்லி முருகையனுக்கு வேண்டிய ஏற்பாடுகளைக் கவனிக்கச் சொல்லி விட்டுக் குளிப்பதற்குச் சென்றார். தாத்தா அவனுக்குக் காப்பியைக் கொடுத்து விட்டு, அந்த அறையிலேயே பல் விளக்கிக் குளிப்பதற்கான வசதிகள் இருப்பதைக் காண்பித்தார்.

தான் ஏற்றக் கிணற்றிலேறிக் குதித்த போது, சித்திரா தன்னை ஏன் அப்படி வியப்போடு பார்த்தாள் என்பது முருகையனுக்கு இப்போதுதான் விளங்கியது. குளிக்கும் அறைக்குள்ளாகவே நீண்ட பீங்கான் தொட்டி, வெந்நீர்க் குழாய், கண்ணாடி சீப்பு, சோப்பு, தைலங்கள், துண்டுகள் முதலிய சாமான்கள் அவ்வளவும் தயாராக இருந்தன.

மனிதன் கையை நீட்டினால் எடுத்துக் கொள்ளுகிற வசதியோடு அவனுக்கு வேண்டிய பொருள்கள் எல்லாமே சில இடங்களில் குவிந்திருப்பதையும், மனிதனுடைய முதல் தேவையான உணவுக்கே அவன் பல இடங்களில் கானல் நீரைக் கண்டு மான் அலைவது போல் அலைய வேண்டியிருப்பதையும் முருகையனால் அப்போது ஒப்பிட்டுப் பார்க்காமல் இருக்க முடியவில்லை. அந்த வீட்டுக்குள்ளிருந்து கொண்டு அவன் பெரிய பாளையத்தை நினைத்துக் கொண்டான்.

குளித்து உடை மாற்றிக் கொண்டவுடன் அவனைக் காலைச் சிற்றுண்டிக்கு அழைத்துச் சென்றார் தாத்தா. சமையற்கட்டை ஒட்டியிருந்த சாப்பாட்டு மேசையில் வெள்ளைக்கார முறையில் சிற்றுண்டி பரிமாறப் பட்டிருந்தது. அப்போதாவது அங்கு சித்திரா வருவாள் என்று எதிர்பார்த்தான் முருகையன். வரவில்லை. மாணிக்கம், தாத்தா, முருகையன் மூவர் மட்டிலுமே உட்கார்ந்து சாப்பிட்டார்கள்.

மாணிக்கத்தின் மனைவி வந்து முருகையனைப் பார்த்து, ''வாங்க!'' என்ற ஒரு சொல்லையும் புன்னகையையும் சேர்ந்தாற் போல் உதிர்த்து விட்டு உள்ளே போனாள். அங்கு நடப்பவையெல்லாம் ஏதோ நாடக பாணியில் நடப்பது போல் தோன்றியது முருகையனுக்கு.

''சரி, நான் ஆபீசுக்குப் போயிட்டு வர்றேன். இங்கேதான் இருக்கப் போறீங்க? மெதுவாய்ப் பேசிக்கலாம்'' என்று சொல்லி விட்டு, வாசலில் காத்திருந்த காரை எடுத்துக் கொண்டு கிளம்பினார் மாணிக்கம். தாத்தா காரோட்டிச் செல்லாமல் முருகையனோடு வீட்டில்தங்கி விட்டார். தவிரவும் மற்றொரு காரும் வீட்டில் இருந்தது. அது வீட்டுப் பெண்களின் உபயோகத்துக்கு உள்ள கார் என்பதைப் பின்னால் தெரிந்து கொண்டான் முருகையன்.

மதியச் சாப்பாடு மாணிக்கத்துக்கு ஆபீசுக்குப் போய் விட்டது. தாத்தாவும் முருகையனும் சாப்பிட்டு முடித்த

பிறகு, ''எங்கே, நான் வந்ததிலிருந்து சித்திராவையும் அத்தையையும் பார்க்கவே முடியவில்லையே?'' என்று கேட்டான் முருகையன்.

''ஓ! அதுவா? பெரியவருக்கு உடம்பு சுகமில்லே; சித்திராவுக்கும் காலேஜு லீவு; அதனாலே எல்லாரும் பங்களூருக்குப் போயிருக்காங்க. திரும்பறதுக்கு ஒரு மாசம் ஆகும்.''

இந்தச் செய்தியைக் கேட்டவுடன் முருகையனின் உடலிலிருந்து ஒரு பாதி வலிமை குறைந்து விட்டது. வேறு யாரிடமும் அதிகப் பழக்கமில்லாத முருகையன் அவளிடந்தான் முழு நம்பிக்கையும் வைத்திருந்தான். மனம் விட்டுப் பேசி, தன்னுடைய நிலையை அவளுக்கு எடுத்துச் சொல்லி, அவள் வாயிலாக மற்றவர்களிடம் தான் வந்திருக்கும் நோக்கத்தைக் கூற விரும்பினான். அவள் அந்த வீட்டின் செல்லப் பெண் என்பதால் அவளுடைய செல்வாக்கு அப்போது அவனுக்கு மிகவும் தேவையாக இருந்தது. இனி யாரிடம் சொல்வது?

தாத்தாவைத் திரும்பிப் பார்த்தான். அவரோ அவனை இன்னும் 'மாடி வீட்டுக்காரன்' என்றே நம்பிக் கொண்டிருப்பவர்!

பிற்பகலின் தனிமையில் பஞ்சு மெத்தைக் கட்டிலில் கிடந்து பலவிதமான சிந்தனைகளில் தன்னைக் குழப்பிக் கொண்டிருந்தான் முருகையன். பாட்டி கொடுத்தனுப்பிய பணத்தில் தொண்ணூறு ரூபாய் மீதமிருந்தது. அந்தப் பணம் அவனுக்குச் சிறிதளவு தெம்பைக் கொடுத்தது.

சித்திராவுக்கு ஒரு கடிதம் எழுதித் தான் அங்கு வந்திருப்பதைத் தெரிவித்தால், ஒருவேளை அவள் புறப்பட்டு வந்தாலும் வருவாள் என்று நம்பினான். அல்லது அவள் அழைத்தால் பெங்களூருக்குப் போனாலும் போகலாம்.

ஒரு காகிதத்தை எடுத்துச் சுருக்கமாகச் சித்திராவுக்கு ஒரு கடிதம் எழுதினான். மற்ற விவரங்கள் ஒன்றையும் அதில் குறிப்பிடவில்லை. அவளையும் மற்றவர்களையும் பார்க்க விரும்புவதாகவும், அவசியமானால் தானே அங்கு வருவதாகவும் குறிப்பிட்டான். எழுதிய கடிதத்தை உடனே தபாலில் சேர்க்கவில்லை. படித்துப் பார்த்து விட்டு, மடித்துச் சட்டைப் பைக்குள் வைத்துக் கொண்டான். மெதுவாகத் தாத்தாவிடம் விலாசம் கேட்டெழுதித் தபாலில் சேர்க்க வேண்டும் என்று தோன்றியது.

மாலை ஐந்து மணியானவுடன் தாத்தா வந்து, ''வர்ரீங்களா மாப்பிள்ளை! காரெடுத்துக்கிட்டு ஊரைச் சுத்திப் பார்த்துட்டு வரலாம்'' என்று அழைத்தார். காரில் தாத்தாவுக்குப் பக்கத்தில் முருகையன் உட்கார்ந்து கொள்ள, அவர் சிரிக்கச் சிரிக்கப் பேசிக் கொண்டே காரோட்டி வந்தார்.

சென்னைப் பட்டணத்தின் பரபரப்பு நிறைந்த பாதசாரிக் கூட்டத்தைப் பின்னே தள்ளிக் கொண்டு, முன்னால் உல்லாசமாகக் காரில் சாய்ந்து செல்வது முருகையனுக்கு வேடிக்கையாக இருந்தது. மனிதர்கள், மனிதர்கள், எவ்வளவு மனிதர்கள்! ஆனால், கார் போகிற வேகத்தில் அவர்களை முருகையனால் கூர்ந்து கவனிக்க முடியவில்லை.

போகிற போக்கிலேயே முக்கியமான இடங்களை அவனுக்குச் சுட்டிக் காட்டிக் கொண்டு போனார் தாத்தா. பிறகு ஒரு பெரிய ஓட்டலுக்குள் கார் நுழைந்து நின்றது. காப்பி சாப்பிட்டு விட்டுப் போகலாம் என்று அவனை இறங்கச் சொன்னார்.

''உங்களுக்குப் பசிக்கிறதா? எனக்குப் பசிக்கவில்லையே, தாத்தா!''

கேலியாகச் சிரித்தார் அவர். ''பசிச்சாத்தான் சாப்பிடணும்னு ஒரு கட்டாயமா? படிச்ச மாப்பிள்ளையாயிருந்தும் இன்னும் உங்களுக்கு அந்தப் பட்டிக்காட்டுப் பழக்கம் விடமாட்டேங்குதே! இங்கே சாப்பிட வருகிறவங்கெல்லாம் பசிச்சா சாப்பிட வர்ராங்க? ருசி மாப்பிள்ளை, ருசி! உள்ளே வந்து பாருங்க. வயிறு ஏதாவது கோளாறு பண்ணுச்சின்னா, அடுத்தாப்பிலே மருந்துக் கடையிலே உங்களுக்கு மாத்திரை வாங்கித் தாரேன்!''

முருகையன் வேண்டாம் வேண்டாமென்று சொல்ல, அவனைத் தம்முடைய அழுத்தமான உபசரிப்பில் அடக்கி வைத்து, என்னென்னவோ தின்பண்டங்களால் அவனைத் நிறைய வைத்து விட்டார் தாத்தா. தாமும் வஞ்சனையின்றித் தம்மைக் கவனித்துக் கொண்டார். வெளியில் வரும்போது, ஓட்டல் 'பில்' இருபத்தைந்து ரூபாயை முருகையன் நடுங்கும் கரங்களால் எடுத்தான். தாத்தா அப்போது காரில் உட்கார்ந்து கொண்டு, அவனிடம் தமக்கு ஒரு சிகரெட் பெட்டி வாங்கிக் கொண்டு வரும்படி 'அன்புக் கட்டளை' யிட்டார்.

அடுத்தாற் போல் அவர்களுடைய கார் சினிமாக் கொட்டகையின் முன்னால் போய் நின்றது. கீழே இறங்கிக் கொண்டு, முருகையனின் சட்டைப் பையிலிருந்த பணப்பையை உரிமையோடு வெளியே இழுத்தார் தாத்தா. முருகையனுக்குச் சினிமாக் கொட்டகையே வேகமாகச் சுழலுவது போல் தோன்றியது. (தொடரும்)

# உங்கள் வீட்டில் இருக்கின்றதா?




ஸ்பென்ஸர்ஸ் கிரைப் ஸிரப்
குழந்தைகளின்
எல்லா வயிற்று
உபாதைகளுக்கும்.




ஸி. ஏ. க்யூ
சீதளம், ஜலதோஷம், வலிகள்
மற்றும் ஜுரங்களுக்கு.



எக்ஸ்-மா
படை, வண்ணரப்புண் மற்றும்
எல்லா சரும கோளாறுகளுக்கும்.

## ஸ்பென்ஸர் & கம்பெனி லிட்.

ரசாயன மருந்து தயாரிப்பாளர்கள்

1/153 மவுண்டு ரோடு, சென்னை-2. இந்தியா

SC-26-3A

# மணிபல்லவம்



## 16 – அகங்கார தகனம்

இளங்குமரனும் நீலநாகரும் பார்த்துக் கொண்டிருக்கும்போதே எதிரே குன்றுபோல் நின்று கொண்டிருந்தவருடைய கைகளில் இருந்து ஏடுகள் நழுவி மண்ணில் வீழ்ந்தன. பூகம்பம் நிகழ்கிற காலத்து மரம் போல் அவர் உடல் ஆடியது. நடுங்கும் கைகளால் தம் செவிகளில் இருந்த குண்டலங்களை ஒவ்வொன்றாகக் கழற்றினார் அவர். மார்பில் மின்னிய இரத்தின கண்டிகைகளையும் கழற்றினார். தோளில் பொன் மின்னலாய்ச் சரிந்து மடிந்து வழிந்து கொண்டிருந்த பட்டுப் பீதாம்பரத்தை எடுத்து மடித்து அதன் மேல் குண்டலங்களையும், இரத்தின கண்டிகைகளையும் வைத்துக் கொண்டு கீழே குனிந்து......

அவர் செய்கையைப் புரிந்துகொள்ள முடியாமல் இளங்குமரன் பயந்து பின்னுக்கு நகர்ந்து கொண்டான்.. நீலநாகர் திகைத்து விலகினார்.

அறிவு மலையாகிய அந்தப் பன்மொழிப் புலவர் இளங்குமரனுக்கு முன்னால் மண்டியிட்டு அமர்ந்து கொண்டார்.

''சுவாமீ! இதென்ன காரியம்?'' என்று பதறினான் இளங்குமரன். அந்தப் பெரும் புலவருடைய கண்களிலிருந்து, நீரும், நாவிலிருந்து சொற்களும் நெகிழ்ந்தன:

''என் பெயர் முகுந்த பட்டர்! இன்றைக்குப் பத்து ஆண்டுகளுக்கு முன்னால் காசியிலிருந்து புறப்பட்டு ஒவ்வோர் அரச சபையாகப் போய்த் தங்கி அந்தந்த நாட்டு அறிவாளிகளுடன் வாதம் புரிந்து வாகை சூடினேன். கடைசியாக இந்த ஆண்டு இந்திர விழாவின்போது இங்கு வந்தேன். ......'' என்று தம் கதையைத் தொடங்கினார் முகுந்தபட்டர். இப்படிக் கண்களில் நீர் மல்க ஒவ்வொரு சொல்லாக அவர் நாவிலிருந்து கழன்ற போது, சொற்களோடு சொற்களாக இன்னும் ஏதோ ஒருணர்வும் அவர் மனத்திலிருந்து கழன்று கொண்டிருந்தது. அவர் பேசினார்

''கலிங்க தேசத்திலும், உச்சயினியிலும், அயோத்தியிலும், குயிலாலுவத்திலும், விதர்ப்ப நாட்டிலும், பாஞ்சால தேசத்திலும் வெற்றிக் கொடி நாட்டிப் பலப் பல ஞானிகளுக்கு நான் குருவானேன். அந்தந்த தேசத்து அரசர்கள் மனமுவந்து புகழுரைகளும், பொற்கடகங்களும், மகர குண்டலங்களும், இரத்தின கண்டிகைகளும், பட்டுப் பீதாம்பரங்களும் அளித்து இந்தச் சரீரம் நிறைய அகம்பாவங்களைப் பூட்டி விட்டார்கள். எத்தனையோ விதத்தில் முயன்றும் என் அகங்காரத்தை என்னாலேயே அடக்க முடியவில்லை. உண்ணும் உணவுகளைக் குறைத்து உடற் கொழுப்பையும் குறைத்து உடலை வாட்டிப் பார்த்தேன். தெய்வ பக்தியை வளர்த்துக் கொண்டு இறுமாப்பை அடக்க முயன்றேன். என்னைப் பிடித்த அகங்காரமோ மருந்தினால் தீராத பெருநோயாய் வதைத்தது. காய்ந்த நருப்பைப் புதரில் பற்றிய நெருப்பைப் போல் –மூங்கில் உரசி மூங்கிலே எரிவது போல் என்னுள்ளே உண்டான அகம்பாவத்தால் நானே எரிந்து எரிந்து சிவப்பாகிக் கொண்டிருந்தேன். 'தயை கூர்ந்து என் அறிவுக் கொழுப்பை அடக்கி என்னுள் எரியும் அகம்பாவ நெருப்பை அவித்து யாராவது என் இதயத்தைக் குளிர வைக்க மாட்டார்களா?' என்று இந்தப் பத்து ஆண்டுகளாக அதைச் செய்யவல்ல மேதைகளைத் தேடித் திரிந்தேன். கால் போன போக்கில் வந்த தேச தேசாந்தரங்களில் எல்லாம் திரிந்தேன். நேற்று அதிகாலையில் இந்த நகரத்தை அடைந்து காவிரியில் நீராடிவிட்டு நான் நிமிர்ந்த போது கரை மேலுள்ள மரத்திலிருந்து நல்ல சகுனம் போல் பூக்கள் என் தலையில் உதிர்ந்தன. என்னுடைய அகம்பாவத்தை அழித்து என்னைத் தடுத்தாட் கொள்ளப் போகிற ஞானம் இந்தக் காவிரியின் கரையில் எங்கோ இருக்கிறது என்று என் மனம் புரிந்து கொண்டு மகிழ்ச்சியால் துள்ளியது. என்னுள்ளே தகித்துக் கொண்டிருக்கும் நெருப்பு விரைவில் தணிய வேண்டுமே என்ற தவிப்பில் இன்று இங்கே உன்னோடு வாதத்தைத் தொடங்கிய சில நாழிகைகளில் பொருத்தமில்லாத கேள்விகளையெல்லாம் கூட நான் உன்னிடம் கேட்க முற்பட்டு விட்டேன். அப்படிக் கேட்டதற்கு அந்தரங்கமான காரணம் எப்படியாவது நான் உனக்குத் தோற்றுப் போக வேண்டுமே என்ற என் ஆசைதான். ஆனால் பொருத்தமில்லாமல் நான் கேட்க முற்பட்ட கேள்விகளுக்குக் கூட நீ அழகாக மறுமொழி கூறினாய். பத்து ஆண்டுகளுக்கு

முன்னால் நான் காசியில் கங்கைக் கரையி லிருந்து புறப்பட்டபோது என்னுடைய இலட்சியம் எதுவாயிருந்ததோ அது இன்று காவிரிக் கரையில் வந்து நிறை வேறியது. தெய்வகுமாரா! அருள் கூர்ந்து உன் பாத கமலங்களை ஒரு முறை வணங்கி என்னுடைய இந்த ஐசுவரியங்களை அவற்றில் படைக்க எனக்கு அனுமதி கொடு....''

முகுந்தபட்டர் தரையில் மண்டியிட்டு அமர்ந்தவராய் இப்படி அவனை வணங்கு வதற்குக் கெஞ்சிக் கொண்டிருந்தபோது நீலநாகர் ஒரு விஷயத்தை ஞாபகப்படுத் திக் கொண்டு ஆச்சரியத்தில் மூழ்கினார்.

'இந்த முகுந்தபட்டர் இப்போது தானே இவ்வளவு விவரமும் சொல் கிறார்! இளங்குமரன் இவரை எதிரே பார்த்தவுடனேயே 'இந்தப் புலவ ருக்கு வந்திருப்பது அகங்கார நோய். இதை நேர் எதிரே கண்டு உணர்ந்தபின் னும் இவரை இந்த நோயோடு இப் படியே நலிய விட்டுவிட்டு நான் மேலே செல்வது நல்லதன்று' என்று தீர்க்க தரிசனம் போலச் சொல்லி விட்டானே! அவ்வாறு சொல்ல அவனால் எப்படி முடிந்தது? என்று நினைந்து நினைந்து அந்த நினைப்புக்கு ஒரு முடிவும் தெரியா மல் பக்தி மலரும் கண்களால் இளங்குமர னைப் பார்க்கலானார் நீலநாகமறவர்.

ஆனால் அவனோ ஒன்றும் அறியாத குழந்தை போலக் காலடியில் மண்டி யிட்டுக் கொண்டிருக்கும் முகுந்தபட்ட ரையும், பக்கத்தில் நின்று கொண்டு கண்கள் மலர வியந்து தன்னையே நோக்கும் நீல நாகரையும் மாறி மாறிப் பார்த்தான்.

முகுந்த பட்டர் அவன் விழிகளை நிமிர்ந்து பார்த்து இறைஞ்சினார்.

''என்னை அங்கீகரித்துக் கொள்ள வேண்டும்.''—

''சுவாமி! நீங்கள் நிறை குடம். உங்களை அங்கீகரித்துக் கொள்ள நான் யார்? நோயுற்றவன் ஒருவன் அடர்ந்த காட்டு வழியாக நடந்த போது தற் செயலாய் அவன் உடம்பில் உராய்ந்த செடி ஒன்று உயரிய மருந்துச் செடியாக இருந்து அந்த நோயைச் சில நாட்களில் தணித்தாற் போல இந்த நிகழ்ச்சியை நீங்கள் தற்செயலாக எடுத்துக்கொள்ள வேணுமே ஒழிய நான் உங்கள் அகம்பா வத்தைத் தணித்ததாக எண்ணிக் கொள் ளக் கூடாது. இது தன் போக்கில் நேர்ந் ததே ஒழிய என்னால் உங்களுக்கு நேரப் பட்டது அன்று. காட்டில் நடந்து போன மனிதனுடைய நோயைத் தீர்க்க வேண்டுமென்ற கருத்து அவன் மேல் உராய்ந்த பச்சிலைக்கு இல்லை. பச்சிலையை உராய்ந்தவனுடைய கருத்திலும் 'அத னால் நோய் தீரும்' என்ற ஞாபகமும், நோக்கமும் இல்லை. இன்ன இடத் தில் இன்ன சமயத்தில் இன்ன பொரு ளால் இன்னது நேர வேண்டுமென்ற தெய்வசித்தம் தான் இதில் காரணம், காரியம், கருத்தா, கருமம் எல்லாம். அதற்கு மேலே நினைக்க ஒன்றும் இல்லை.''

''நீ இப்போது கூறியதுதான் மெய் யான ஞானம்! ஆனால் நானோ நீ இப் போது சொல்வதற்கு நேர்மாறாக நினைத்து நினைத்து இந்தப் பத்து ஆண்டு களாக அறிவு மதம் பிடித்து அலைந்து



விட்டேன். நான் நினைத்துப் பெருமைப் படும்படியாக இந்த உலகத்தில் என்னுடைய அறிவைத் தவிர வேறொன்றும் இல்லை என்ற ஒரே எண்ணம்தான் என் மனத்தில் இன்று வரை நிலைத்திருந்தது.

''செருக்கு எப்படி ஏற்படுகிறது என்றே புரிந்துகொள்ள முடியவில்லை, ஐயா! அதிக அறியாமையினும் செருக்குப் பிறக்கிறது! அதிக அறிவினும் செருக்குப் பிறக்கிறது! புயல் காற்றில் சிறிய அகல் விளக்கை அணைந்து விடாமல் காக்க முயல்வது போல் இந்த உலகத்தில் மனிதன் தன் இதயத்தைச் செருக்கு இல்லாமல் காப்பது எவ்வளவு அருமையான காரியமாயிருக்கிறது பார்த்தீர்களா? அறிவை வரம் பெற்று மற்றவர்களை அழிக்க முயன்றால் தானே அழிந்து போக வேண்டியதாகத்தான் நேரும் என்று ஒவ்வொரு அறிவாளியும் ஒவ்வொரு கணமும் தனக்குள் நினைத்துத் தன்னைத்தானே அடக்கிக் கொண்டிருக்க வேண்டும். இல்லாவிட்டால் பஸ்மாசுரனுடைய கதையாகத்தான் முடியும். நம்முடைய சத்துவ குணம்தான் நம் மனத்துக்கு அங்குசம். மனத்தில் மதம் பிடிக்கும் போது அடக்கப் பயன்படும் ஆயுதமும் அதுதான்.

''அந்த ஞானம் இன்றுதான் எனக்குக் கிடைத்தது. அது கிடைக்கக் காரணமாக இருந்த நீ இவற்றையெல்லாம் என் காணிக்கைகளாக ஏற்றுக் கொள்ள வேண்டும்.''

இப்படிக் கூறிக் கொண்டே அவர் தன் பாதங்களில் இடுவதற்கு முற்பட்ட அணிகலன்களைப் பார்த்து இளங்குமரன் சிரித்தான்

''எந்தெந்த அணிகலன்கள் உங்களுடைய உடம்பில் கர்வத் தீயை எரிய விட்டனவோ, அவற்றையே இப்போது என் பாதங்களில் இடுகிறீர்களே?''

''உன் சக்தி பெரிது. அதை இவற்றினாலும் எரிக்க முடியாது. நீ தெளிந்தவன். வீங்கவும், ஏங்கவும் விடாமல் மனத்தைக் காக்கத் தெரிந்தவன்.''

''இருக்கலாம்! ஆனால் இவை எனக்குத் தேவையில்லை. யாராவது ஏழைகளைத் தேடி இவற்றைத் தானமாக அளியுங்கள். எனக்கு வேண்டாம்....''

''அப்படிச் சொல்லக்கூடாது. குரு தட்சிணையாகவாவது....?''

''யார் யாருக்கு குரு? தாங்கள் எங்கே? நான் எங்கே? இந்த உலகத்தில் இல்லாப் பிழையும் பொல்லாப் பிழையும், எல்லாப் பிழையும் செய்து, நோயும் வறுமையும் கொண்டு ஏழையாக இருக்கிறவர்கள் தாம் என்னுடைய குருவும் வணங்குகிற குருக்கள். அவர்களுடைய பசியிலிருந்துதான் என்னுடைய சிந்தனைகள் பிறந்து வளர்ந்தன. அவர்களுடைய துக்கங்களிலிருந்துதான் என்னுடைய ஞானம் பிறந்தது. இன்றைக்குச் சில ஆண்டுகளுக்கு முன்னால் இதே நகரத்தில் இந்திர விகாரம் என்ற பௌத்த மடத்தின் வாயிலில் வயது முதிர்ந்த துறவி ஒருவரிடம் பேசியபோது தான் என் மனமே அகங்கார இருள் நீங்கி ஒளி பெற்றது. அருள் கூர்ந்து உலக அறவியிலும், இலஞ்சி மன்றத்திலும் நோயும் பசியுமாகக் கிடப்பவர்களைத் தேடிப் போய் இந்த அணிகலன்களை அளித்து மகிழுங்கள். என் வழியை எனக்கு விடுங்கள். என்னுடைய இந்த வழியில் பொன் கிடந்தாலும், மண் கிடந்தாலும் ஓடு கிடந்தாலும், எல்லாம் எனக்கு ஒன்றுதான். இது மண், இது பொன் என்று பிரித்து வேறுபாடு உணர்கிற காலத்தை நான் இழந்து விட்டேன். தயை கூர்ந்து என் வழியை எனக்கு விடுங்கள்.'''

முருகுந்தபட்டர் தலை நிமிர்ந்து நன்முக இளங்குமரனின் முகத்தைப் பார்த்தார். தம் கண்களின் அந்தப் பார்வையாலேயே ஐம்புலனும், எட்டு அங்கமும் தோய அவனை வணங்குகிறாற் போன்ற பாவனையின் சாயலைச் சுமந்தவராக வணங்கினார் அவர். இளங்குமரன், மதம் அடங்கப் பெற்ற அந்த அறிவு மேதையைப் பதிலுக்கு வணங்கிவிட்டு விடை பெற்றான். நீலநாகர் வியப்பும் திகைப்பும், மெல்ல மெல்ல, நீங்கியவராக அவனைப் பின்தொடர்ந்தார்.




தேர்ந்த ரசிகருக்கென விசேஷ
மாகப் பல ரகங்களைக் கலந்த
தூய இந்தியக் காப்பி
அல்லது இதிலிருந்து
மாறுதலை விரும்பு
வோருக்கு
பிரெஞ்சு காப்பி



Stanes

**PURE INDIAN COFFEE**

**STANES FRENCH.**

THE UNITED COFFEE SUPPLY COMPANY LIMITED, COIMBATORE.

# வாயு வேகம்



கடிதங்களை துரிதமாக விநியோகம் செய்வதற்காக பெரிய நகரங்களை தபால் பட்டுவாடா பிராந்தியங்களாகப் பிரித்திருக்கிறோம். உதாரணம், சென்னை—30. பிராந்திய நெம்பர் விலாசத்துக்கு இறக்கை போலாகும். கடிதம் வாயு வேகத்தில் பட்டுவாடா ஆகும். பூரா விலாசத்தை தெளிவாக எழுதுங்கள்.

கடிதம் எழுதும்போது உங்கள் விலாசத்திலும், பிராந்திய நெம்பரைக் குறிப்பிடுங்கள்.



பிராந்திய நெம்பர் உள்ள விலாசமே முழு விலாசம்

உங்களுக்கு
சிறந்த முறையில் சேவை செய்ய
எங்களுக்கு உதவுங்கள்

DA 60/475

தபால் தந்தி இலாகா

## 17- நிலவில் பிறந்த நினைவுகள்

பூக்கூடையைச் சுமந்து சென்ற யவனப் பணியாளன் திரும்பி வந்து கூறிய செய்திகளைக் கேட்டுப் பதற்றமடைந்தவராய் நகைவேழம்பரோடுதேரில் நாளங்காடிக்கு விரைந்து கொண்டிருந்தார் பெருநிதிச் செல்வர். அப்படி வேகமாகத் தேரில் போய்க் கொண்டிருக்கும் போது அவருடைய உடம்பு மட்டுமின்றி நினைவுகளும், மனமும் கூடப் பதறின, நடுங்கின. திரும்பி வந்த யவனப் பணியாளன் கூறிய செய்திகளிலிருந்து கரமஞ்சரி தன் மேல் கடுஞ் சீற்றம் கொண்டிருக்க வேண்டும் என்பது சந்தேகத்துக்கு இடமில்லாமல் அவருக்குப் புரிந்தது. நகைவேழம்பர் கூறியது போல் இந்தச் சூழ்ச்சியால் தாங்கள் நினைத்த பயன் விளையாவிட்டாலும் கரமஞ்சரியைப் பற்றி இளங்குமரன் மிகக் கேவலமாக எண்ணும்படியான சூழ்நிலை உருவாகியிருக்கும்.

'இவர்களுடைய பழக்கமும், உறவும் சிதைவதற்கு இந்த நிகழ்ச்சியே போதும். ஆனால் இதன் காரணமாக என் மகள் கரமஞ்சரிக்கு என் மேலும் நகைவேழம்பர் மேலும் பெருங் கோபம் மூண்டிருக்கும். ஏற்கெனவே அவளுக்கு எங்கள் மேல் இருந்த சந்தேகம் இன்று பெருகி வளர்ந்திருக்கும். அந்த ஆத்திரத்தினால் பெருங்கூட்டம் கூடியிருக்கிற நாளங்காடி நாற்சந்தியில் என் கௌரவமும் பெருமையும் பாழ்பட்டுப் போகும்படி எதையாவது சொல்லிவிடப் போகிறாளே' என்று எண்ணித் தேர்ச் சக்கரங்களைவிட வேகமாக உருண்டு கொண்டிருக்கும் பதறிய நினைவுகளோடு போய்க் கொண்டிருந்தார் அவர். இந்தச் சந்தேகங்களையும் பதற்றங்களையும் தேரில் உடன் வந்து கொண்டிருந்த நகைவேழம்பரிடம் மனம் விட்டுப் பேசலாம் என்றால் சற்று முன் அவருக்கு ஏற்பட்டிருந்த பிணக்கினால் அவர் பேசுவதற்கே விருப்பமில்லாதவர் போல வேறுபுறம் பார்த்துக் கொண்டிருந்தார். பல்லக்கின் பின்புறச் சட்டத்தில் பணிவாக முழந்தாளிட்டு உட்கார்ந்து கொண்டிருந்த யவன ஊழியனிடம் பேசலாமென்று மனம் தவித்தாலும் இதையெல்லாம் அவனைப் போன்ற ஊழியனிடம் பேசுவது கௌரவக் குறைவு என்ற எண்ணம் குறுக்கிட்டுத் தடுத்தது. எல்லா ஆத்திரத்தையும் சேர்த்துத் தேரோட்டியிடம் காண்பித்தார் அவர்: ''இதென்ன ஆமை ஊர்வதுபோல் தேரைச் செலுத்துகிறாயே? குதிரைகளை விரட்டு. என் பொறுமையைச் சோதிக்காதே....''

தேரோட்டி சாட்டையைச் சொடுக்கினான். குதிரைகள் தாவிப் பாய்ந்தன. நாளங்காடி நெருங்க, நெருங்கப் பயத்தினால் அவர் நெஞ்சு வேகமாக அடித்துக் கொண்டது. அவர்களுடைய தேர் நாளங்காடியை அடைந்து குறிப்பிட்ட இடத்தினை அணுகி நின்றபோது ஆத்திரத்தின் பிரதிபிம்பமாகப் பெண்மையின் ஊழிக் காலம் போலக் கரமஞ்சரி அங்கிருந்த கோலத்தை அவரே தம் கண்களால் கண்டு அஞ்சினார். அப்போது அவளுக்கு முன்னால் கீழே இறங்கிப் போய் நிற்க வேண்டுமென்று நினைப்பதற்கே பயமாக இருந்தது அவருக்கு. தலைவிரிகோலமாக நகைகளையெல்லாம் கழற்றி எறிந்து விட்டுத் திமிறிக்கொண்டு ஓட முயலும் கரமஞ்சரியை வானவல்லியும், வசந்தமாலையும் பக்கத்துக்குப் பக்கம் கைகளைப் பற்றித் தடுத்துக் கொண்டு நின்றார்கள். பல்லக்கிலும் தரையிலுமாக அவள் கழற்றிச் சிதறிய அணிகலன்கள் கிடந்தன. வெறிகொண்டவள் போல எதையோ சொல்லிக் கூக்குரலிட்டுக்கொண்டிருந்தாள் கரமஞ்சரி.

'இது நரகத்துக்குப் போகும் வாகனம். நான் இதில் ஏறி வரமாட்டேன்' என்று பல்லக்கைச் சுட்டிக் காட்டித் திரும்பத் திரும்பக் கத்தினாள் அவள். நிலைமையின் பயங்கரம் அவருக்குப் புரிந்தது. தானோ, நகைவேழம்பரோ அப்போது அவளுக்கு முன்னால் போய் நிற்பதால் நல்ல விளைவு எதுவும் ஏற்படாதென்று உறுதியாகத் தோன்றியது அவருக்கு. கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காக அவளைச் சமாதானப் படுத்தப் போய் அதனாலேயே அந்தக் கௌரவம் நாற்சந்தியில் சிதறும்படி ஆகிவிடக் கூடாதே—என்று மனத்தில் முன்னெச்சரிக்கை ஒன்றும் எழுந்தது.

''பக்கத்தில் கொண்டு போய் நிறுத்தாதே! தேரைச் சற்று ஒதுக்குப்புறமாகவே விலக்கி நிறுத்து'' என்று தேரோட்டிக்கு உத்தரவிட்டார் அவர். தேர் ஒதுக்கி நிறுத்தப்பட்டது.

மீண்டும் தேரோட்டிக்குக் கட்டளையிட்டார் அவர். ''நீ போய் வானவல்லியை மட்டும் இங்கே அழைத்து வா... நான் வந்திருப்பதை எல்லாரும் கேட்கும்படி சொல்லாமல் வானவல்லிக்கு மட்டும் குறிப்பினால் புலப்படுத்திவிட்டு அவளைக் கூப்பிடு.''

தேரோட்டி அவருடைய கட்டளையை நிறைவேற்றுவதற்குச் சென்றான். 'மௌனம் கலகத்தைத் தணிக்கும்'—என்பதற்கு மாறாக ஏதோ ஒரு கலகத்

தைப் பிறப்பிப்பதற்குக் காரணமாகப் போகிற அசாதாரண மௌனத்தோடு தேரில் இருந்தார் நகைவேழம்பர். பட்டினப்பாக்கத்திலிருந்து புறப்பட்டது தொடங்கி அவருடைய இந்த மௌனத்தைக் கவனித்தவராய் இது என்ன விளைவுக்கு அடிகோலுமோ என்று தொடர்ந்து சிந்தித்துக் கொண்டே வந்தார் பெருநிதிச் செல்வர். இப்போது, தேரோட்டியை அனுப்பி விட்டுக் காத்திருந்த இந்தச் சில விநாடிகளிலும் இதே மௌனத்தையே கவனித்து அவர் உணர்ந்தார்.

இதற்குள் தேரோட்டி வானவல்லியையும் அழைத்துக் கொண்டு வந்து எதிரே நிற்கவே அவருடைய கவனம் முழுவதும் செய்ய வேண்டிய காரியத்தின் அவசரத்தில் திரும்பியது. வானவல்லியே தன்னை வெறுப்போடு பார்ப்பதைக்கண்டு அவளிடம் என்ன சொல்வதென்று தயங்கினார் அவர். நடந்த நிகழ்ச்சிகள் அவள் மனத்தை எவ்வளவு தூரம் பாதித்திருந்தால் செல்வத் தந்தையாகிய தன்னையும் இப்படி வெறுப்போடு பார்க்கும் துணிவை அவளுக்கு அளித்திருக்க வேண்டும் என எண்ணிப் பார்த்துக் கொண்டு பின்பு பேசினார்: ''வானவல்லி! உன் முகத்தைப் பார்த்தால் கரமஞ்சரியைவிட நீதான் அதிகமாகக் கோபம் அடைந்திருக்கிறாற்போல் தோன்றுகிறது. நடந்ததை யெல்லாம் உங்களோடு பூக்கூடை சுமந்து வந்த பணியாளன் எனக்குச் சொன்னான். என்னிடம் ஒரு தவறும் இல்லை. நமக்குப் பூக்களைக் கொண்டு வந்து கொடுத்தவர்கள்தாம் ஏதோ சூழ்ச்சி செய்திருக்கிறார்கள். உலகத்தில் யாரையும் நம்ப முடிய வில்லை அம்மா. யாருக்கு எங்கே, எதன் மூலம் எதிரிகள் இருக்கிறார்கள் என்றே புரிந்து கொள்ள முடிவதில்லை. கரமஞ்சரியைக் காட்டிலும் உன் தந்தையிடம் உனக்கு அநுதாபம் அதிகமென்று நான் நம்பிக் கொண்டிருப்பதைப் பொய்யாக்கி விடாதே, மகளே! எப்படியாவது நீயும், வசந்தமாலையுமாக முயன்று கரமஞ்சரியைப் பல்லக்கில் ஏற்றி உட்காரச் செய்து மாளிகைக்கு அழைத்து வந்து விடுங்கள். நம்முடைய குடும்பத்தின் பெருமையும், பீடும், இப்படி இந்த நாளங்காடி நாற்சந்தியில் சிதற வேண்டாம். என் அருமைப் பெண்ணே! உன்னை மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறேன். இன்று இந்த விநாடியில் நீ என்னுடைய மானத்தைக் காப்பாற்றி உதவி செய்'' — பெருநிதிச் செல்வர் தம் மகள் வானவல்லியிடம் இவ்வாறு கூறி வேண்டிக் கொள்ளும் போது தேரோட்டியும், பணியாளனும் குறிப்பறிந்து விலகி நின்று கொண்டிருந்ததனால் நகைவேழம்பர் மட்டுமே மூன்றாம் மனிதராக இருந்து இவற்றைக் கேட்க நேர்ந்தது.

அன்று நடந்த நிகழ்ச்சியிலிருந்து தந்தையார் மேல் எவ்வளவோ சந்தேகங்களும், பயமும் ஏற்பட்டிருந்தாலும், அவர் இப்போது வேண்டிக் கொண்ட விதம் வானவல்லியின் மனத்தைக் குழையச் செய்து விட்டது. வந்த போது இருந்த ஆத்திர வேகம் தணிந்தவளாய் அவள் அவரைக் கேட்டாள்:

''இப்போது என்னை என்ன செய்யச் சொல்கிறீர்கள், அப்பா?''

''செய்வதற்கு முடியாத எதையும் செய்யச் சொல்ல வில்லை அம்மா! செய்ய முடிந்ததைத்தான் சொல்கிறேன். நீயும் வசந்தமாலையுமாகச் சேர்ந்து கரமஞ்சரியை வலுவில் பிடித்துத் தூக்கியாவது பல்லக்கில் உட்கார்த்தி மாளிகைக்குக் கொண்டு வந்துவிட வேண்டும். வீட்டுக்கு வந்து அவள் என்ன வேண்டுமானாலும் பேசட்டும். ஏசட்டும். நான் பொறுத்துக் கொள்ளுவேன். குடிப் பெருமையை நடுத் தெருவில் விலை பேச விடக்கூடாது மகளே! உனக்குத் தெரியாததில்லை'' என்று குழைந்து பணிந்து வேண்டினார் பெருநிதிச் செல்வர்.

அவருடைய வேண்டுகோள் தன் மனத்தில் உறைத்துத் தான் அதை ஏற்றுக் கொண்டு



இணங்கிச் செயற்படுத்தப் புறப்படுவது போல் திரும்பிச் சென்றாள் வானவல்லி. தம்முடைய தந்திரப் பேச்சுக்கு வெற்றி கிடைத்து விட்டது என்ற நம்பிக்கை பெருநிதிச் செல்வருக்கு ஏற்பட்டது.



சிறிது நேரத்தில் வசந்தமாலையும், வானவல்லியும் கரமஞ்சரியைத் திமிர விடாமல் தூக்கிப் பிடித்துக் கொண்டு போய்ப் பல்லக்கில் ஏற்றும் காட்சியைத் தம் கண்களால் தாமே கண்ட பின்பு தான் அவருக்கு முழு நம்பிக்கையும் வந்தது. கரமஞ்சரி பல்லக்கிலிருந்து குதித்து விடாமல் மற்றப் பெண்கள் இருவரும் அவளைப் பிடித்துக் கொண்டதையும், கழற்றி எறியப்பட்டுக் கிடந்த அணிகலன்களை எல்லாம் பல்லக்குத் தூக்கிகள் எடுத்துப் பல்லக்கினுள்ளே யிருந்த வானவல்லியிடம் பத்திரமாக அளித்ததையும், அதன் பின் பல்லக்கு அங்கிருந்து புறப்பட்டதையும் பார்த்து விட்டுத்தான் பெருநிதிச் செல்வர் நிம்மதியடைந்தார். இவ்வளவும் நிகழ்வதை நகைவேழம்பரும் கண்டு கொண்டிருந்தாலும் மௌனமாகவே இருந்தார்.

பல்லக்கை முன்னால் சிறிது தொலைவு போக விட்டபின் தேரைப் பின்னால் செலுத்திக் கொண்டு போகுமாறு தேரோட்டிக்கு உத்தரவிட்டார் பெருநிதிச் செல்வர்; மாளிகையை அடையும்போது பிற்பகல் நேரமும் முடிந்திருந்தது. பல்லக்கைப் பின் தொடர்ந்து தேர் மாளிகைக்குப் போனதும் கரமஞ்சரியையும், அவள் தோழியையும் மட்டும் தந்திரமாகத் தனியே அழைத்துப் போய் அவர்கள் வழக்கமாய்த் தங்கும் மாடத்துக்குள்ளேயே முன் போலச் சிறை வைத்தார் பெருநிதிச் செல்வர். தம்மை நேரில் அவள் காணும்படி விடாமலே இதைச் செய்தார் அவர். முன்பு இப்படி அவர் சிறை வைத்த போது அவளும் அவள் தோழியும் குமுறியது போல் இப்போது குமுறவில்லை: சோர்ந்து துவண்டு அழுத படியே தரையில் சாய்ந்து கிடந்தாள் கரமஞ்சரி. வசந்த மாலைக்கு அந்த நிலையில் தன் தலைவியோடு பேசவே பயமாயிருந்தது. நேரம் சிறிது சிறிதாக வளர்ந்து கொண்டேயிருந்தது.

மாலை முற்றி இருட்டியது. அந்த மாடமும் தீபமின்றி

இருண்டிருந்தது. இருட்டே மெல்ல யாருக்காகவோ அழுவதுபோல் அந்த மாடத்தில் இருந்து விசும்பலும் அழுகையும் கேட்டுக் கொண்டே இருந்தன. பேச்சு மட்டுமில்லை.

இன்னும் நேரமான பின் இரண்டாம் நாள் நிலா வானில் அந்த மாடத்துக்கு நேரே வந்து மிதந்தது. ஒரு கணம் தானே அந்த நிலாவாக மாறிக் கீழே மண்ணில் எங்கோ இருக்கும் இளங் குமரனின் முகத்தைத் தேடுவதாகக் கற்பனை செய்து கொண்டாள் சுரமஞ்சரி. அந்தக் கற்பனையாலும் அழுகை நிற்கவில்லை. பல நாழிகை மௌனத்துக்குப் பின் அந்த மாடத்தில் வசந்தமாலையும் தன்னோடு சிறைப்பட்டிருப்பதை அப்போதுதான் நினைத்துக் கொண்டவள் போல் அவள் இருளில் எங்கோ இருப்பதைப் பாவித்துக் கொண்டு கதி கலங்கச் செய்யும் ஒரு கேள்வியை அவளிடம் கேட்டாள் சுரமஞ்சரி. அந்தக் கேள்வியைச் செவியுற்ற வசந்தமாலைக்குப் பாதாதி கேச பரியந்தம் மயிர்க் கூச்செறிந்து நடுங்கியது.

தன் தலைவி, அந்தக் கேள்வியைத் தன்னிடம் கேட்பதற்குக் காரணமாக அவள் மனத்தில் பெருகி முதிர்ந்திருந்த உணர்வு துணிவா, விரக்தியா, பயமா, சோகமா என்று புரிந்துகொள்ளவே இயலாமல் மயங்கினாள் வசந்தமாலை. தலைவியிடமிருந்து என்ன உணர்வை மூலமாகக் கொண்டு அந்தக் கேள்வி பிறந்திருந்தாலும் தோழிக்குப் பயம் ஒன்றே முடிவாக அதிலிருந்து ஏற்பட்டது. (தொடரும்)









அவர்களுடைய பாதுகாப்பு உங்கள் கடமை

# Firestone

## பயர்ஸ்டோன் பொருத்துங்கள்

## நீடித்த காலத்திற்கு அபாயமின்றி இருங்கள்

தேய்வடைந்த டயர்களை உபயோகித்து மோட்டார் ஓட்டுவதில் சிக்கனம் யாதொன்றுமில்லை. அதனால்—வழுக்குவதாலும் டயர்கள் வெடிப்பதாலும், பிரேக் கண்ட்ரோல் இல்லாமையாலும்—அபாயம் மட்டும்தான் இருக்கிறது.

உங்களுடைய காரிலுள்ள டயர்களைவிட எவ்விதத்திலும் நீங்களோ உங்களுடைய குடும்பமோ கூடுதலான பாதுகாப்புடனிருக்க முடியாது!

**பயர்ஸ்டோன் வாங்குவதால் உங்களுக்குக் கிடைப்பவை...**

★ வழுக்குவதைத் தடுக்கவும், நிச்சயமாக பிரேக் பிடிப்பதற்கும் தேவையான, இன்று வைக்கும் பயர்ஸ்டோனுக்கே பிரத்தியேகமான, ஆயிரக்கணக்கான கோணங்களையுடைய, பாதுகாப்பளிக்கும் டிரெட்

★ நீடித்த காலத்திற்கு உங்களுக்குப் பாதுகாப்பளிக்க வேண்டி நீடித்து உழைக்கவும் தோதாயிருக்கவுமெனத் தயாரிக்கப்பட்டுள்ள பயர்ஸ்டோன் ரப்பர்

★ டயர் தயாரிப்பில் சிறந்த தேர்ச்சி ஊட்டித்தரும் உலக மோட்டார்ரேட்டப் பந்தயக்காரர்கள் அவர்கள் உயிருக்காக நம்பியிருக்கிறார்களோ அதே தேர்ச்சியின் திறமை

## பயர்ஸ்டோன் நியூ டிலக்ஸ் சாம்பியன் டயர்கள்

இன்று சிறந்தவை — நாளை இன்னும் சிறந்தவை

# ஓய்! ஒரு நிமிஷம் நில்லும்!

ஸ்ரீகோமதி ஸ்வாமிநாதன்

ஐயா! எழுத்தாளரே! நீர் எழுத்தாளர் தானே? அதுதான் பார்த்தாலே தெரிகிறதே! உம்முடைய தொள தொளத்த ஜிப்பாவையும் பளபளக்கும் கண்களையும் மட்டும் பார்த்து விட்டுச் சொல்ல வில்லை ஐயா! பௌண்டன் பேனாவை மூட மறந்து அப்படியே பையில் சொருகிச் சட்டைப் பையின் ஒரு பகுதி பஞ்சாங்கத்தில் அமாவாசையைக் காண்பிக்க ஒரு கறுப்புப் புள்ளி, புள்ளி என்ன! வட்டம் போட்டிருப்பார்களே, அது போலப் பெரிய அமாவாசையாக இருக்கிறது ஐயா! அதைப் பார்த்துத்தான் ஐயா உம்மை அடையாளம் கண்டு பிடித்தேன்.

உம்மைத்தான்! ஒரு நிமிஷம் நில்லும்! உம்மிடம் சில வார்த்தைகள் பேச வேண்டும். அடடா! ஏனையா இப்படிப் பயந்த மாதிரி விழிக்கிறீர்? ஓஹோஹோ! நீர் எப்போதாவது பழி தீர்த்துக் கொண்ட உம்முடைய கதாபாத்திரங்கள் யாரோடாவது என்னை ஐக்கியப்படுத்திக் கொண்டு உம்முடன் வம்புக்கு வருகிறேன் என்று பயந்து விட்டீரோ? இல்லை! இல்லவே இல்லை! நான் ஒரு சாதாரண வாசகன். லட்சத்தோடு லட்சத்து ஒன்று அவ்வளவுதான்.

என்னை உங்களுக்கு நினைவிருக்கிறதா?.... நான் நம்ப வில்லை. உங்களுக்குத்தான் முதல் பக்கத்தில் வரும் பாத்திரத்தின் பெயர் மறு பக்கத்தில் மறந்து விடுகிறதே! 'கயல்விழியாள் கண்ட கனவு' என்று ஒரு கதையைத் தேன் சொட்டத் தித்திக்கத் தீஞ்சுவையாய் நீங்கள் சில வருடங்களுக்கு முன் எழுதியதைப் பாராட்டிக் கார்டு எழுதிய பல்லாயிரக்கணக்கான ரசிகர்களில் நானும் ஒருவன்.

என்ன? வெட்கப்படுவது மாதிரி நாணிக் கோணிக் கொள்கிறீர்! நான் உம்மைப் பாராட்டினதோடு நிற்க வில்லை. உமக்கு ஒரு கேள்வியும் போட்டிருந்தேன். பதில் தெரிவிக்க!

''ஓய்! எழுத்தாளப் பிரகலாதாழ்வாரே! நீர் சதா காதல் என்கிறீரே! அந்தக் காதல் எங்கிருக்கிறது என்று இந்தப் பொதுஜன ஹிரண்யனுக்குச் சொல்லும்'' என்று கேட்டிருந்தேன்.

நீர் என்னவோ பதில் எழுதவில்லை. நீர் எழுதிக் கொண்டிருந்த காதல் கதைகளில் எத்தனை சிக்கல்களோ?

நான்தான் சும்மா இருக்காமல் ஒரு பெண்ணைக் காதலித்தேன்! எல்லாம் உம்முடைய தெவிட்டாமல் தித்திக்கும் காதல் கதைகளைப் படித்து விட்டுத்தான்! ஆனால் நான் காதலிக்க ஆரம்பித்த மூன்றும் நாளே, துர்வாச மகரிஷி போலக் (தாடி மாத்திரம் இல்லை!) காணப்பட்ட நபர் ஒருவர், என் மனத்தைக் கொள்ளை கொண்டவளின் தந்தை என்று சொல்லிக் கொண்டு, கொள்ளை போகும் அவசரத்தில் ஓடி வந்து கல்யாணத்தைப் பண்ணி வைத்து விட்டார் ஐயா! சில வீடுகளில் கல்யாணச் சாப்பாட்டின் போது ரசித்துப் பாயசம் சாப்பிடும் வேளையில் குடு குடு வென்று பகாளா பாத்தைக் கொண்டு வந்து போட்டுச் சாப்பிடுகிறவர்களை விரட்டுவார்களே! அந்தக் கதையாகி விட்டது என் காதலும்!

கல்யாணத்துக்குப் பிறகு காதலா பண்ண முடியும்? இப்போது சிரத்தையாக என் மனைவிக்கு வீட்டு வேலைகளில் ஒத்தாசை பண்ணுகிறேன்.

முக்கிய விஷயம்! நான் கல்யாணம் செய்து கொள்ளாமலிருந்திருந்தால் இப்போது உம்மை வழியை மறித்து நிறுத்தியிருக்க மாட்டேன்! உம் கதைகளைப் படித்துக் கனவுலகிலே சஞ்சரித்துக் கொண்டிருந்திருப்பேன். ஆனால் அந்தக் கல்யாணம் என் கனவுகளை, திரைப்படக் கொட்டகைகளில் பிலிம் திடீரென்று அறுந்துபோகும் போது திரையில் வீசும் வெள்ளை ஒளியாக்கி விட்டதே!

ஐயா, எழுத்தாளரே! உம்முடைய எத்தனையோ கதைகளில், கணவன் காரியாலயத்திலிருந்து திரும்பும்போது மனைவி விழி மேல் விழி வைத்துக் காத்திருப்பதாக எழுதுகிறீர். என் மனைவியும் அந்தக் கதைகளைப் படித்திருக்கிறாள். ஆனால் ஒரு நாளும் அவள் நான் காரியாலயத்திலிருந்து வீடு திரும்பும் போது வாசலில் நின்று பார்த்ததில்லை. பயபக்தியுடன் உள்ளே வீட்டு வேலைகளில் ஈடுபட்டிருப்பாள் என்று சொல்கிறீர்களா? அது தான் இல்லை! பாதி நாள் பிற்பகல் ஆட்டத்துக்குச் சினிமா பார்க்கப் போயிருப்பாள். எஞ்சிய நாட்களில் அடுத்த வீட்டுச் சிநேகிதியுடன் அவள் வீட்டில் உட்கார்ந்து கொண்டு வம்பு அடித்துக் கொண்டிருப்பாள்.

ஐயா!.....உம்முடைய 'ஐடியல்' கதாநாயகிகளை இந்த மாதிரி நல்ல விஷயத்தில் பின்பற்ற மறுக்கவோ மறக்கவோ முயற்சி செய்யும் அவள், ஏன் உம்முடைய சில கதாநாயகிகளை மாத்திரம் அப்படியே பின்பற்றுகிறாள்? எனக்குத் தெரியவில்லையே ஐயா!

'குடும்பமே கோயில்' என்று ஒரு கதை போன வருஷம் 'மாதர் திலகம்' என்கிற



குரோம்பேட்டை எம். ஐ. டி. கல்லூரியின் உதவிப் பேராசிரியர் திரு ஆர். திருவிக்கிரமன் எம். ஏ. கொழும்பு திட்டத்தின்படி கிளாஸ்கோ சர்வகலாசாலையில் மேற்படிப்புக்காகவும் ஆராய்ச்சிக்காகவும் சென்றிருக்கிறார்.

பத்திரிகையிலே எழுதியிருந்தீரே! அதில்கூடக் கணவன் தன் மனைவிக்குப் பிறந்த நாள் பரிசாக 'போயிங் எழுநூற்று எழு' பார்டர் போட்ட பட்டுப்புடவை வாங்கிக் கொடுத்தான் என்று எழுதியிருந்தீரே! நினைவிருக்கிறதோ?

அந்த 'போயிங் எழுநூற்று எழு' பார்டர் போட்ட பட்டுப் புடவை வேண்டுமென்று என் மனைவி படுத்தியபாடு!....அப்பப்பா! நினைக்கவே பயமாக இருக்கிறது. நானே ஒரு விமானத்தில் ஏறி எங்கேயாவது ஆப்பிரிக்கா, அர்ஜன்டைனா என்று போய் விடலாமா என்று நினைத்து விட்டேன்! அப்புறம் 'ஒரு புடவைக்குப் புறமுதுகு காட்டிப் பறந்து போன தமிழன்' என்று வருங்கால சரித்திர ஆசிரியர்கள் சொல்வார்களே என்ற பயத்தில், சுத்த வீரனாகக் கடைகளிலெல்லாம் படையெடுத்து நூற்று எண்பது ரூபாய் சில்லறைச் செலவில் வெற்றி வீரனாகப் புடவையுடன் வெளியே வந்தேன்.

என் மனைவி இனிமேல் வருடத்தில் இரண்டு தடவைகள் பிறந்த நாள் கொண்டாடப் போகிறாளாம், ஐயா! தமிழ்ப் பஞ்சாங்கப்படி நட்சத்திரம் வரும் நாளிலும், ஆங்கிலக் காலண்டர் பிரகாரம் தேதி வரும் நாட்களிலும் கொண்டாடப் போகிறாளாம், ஐயா! எதற்கெல்லாமோ உச்ச வரம்புச் சட்டம் கொண்டு வருகிறார்கள். இந்தப் பிறந்த நாள் இட்டத்துக்குக் கொண்டு வர மாட்டார்களோ?....அது வேண்டாம் ஐயா! ஒரு வருஷத்தில் இத்தனை பட்டுப் புடவைகள் தான் வாங்க வேண்டும் என்றாவது ஓர் உச்ச வரம்பு விதிக்கப்படாதோ?

ஏன் ஐயா, அவசரப்படுகிறீர்! முக்கியமான விஷயத்துக்கு இப்போதுதான் வருகிறேன்! தீபாவளி சீசன்! குழந்தைகள் மத்தாப்புக் கொளுத்தும் அவசரத்தில் நீர் கதைகளாக எழுதித் தள்ளுவீர். இல்லையா?

நன்றாக எழுதும்! நிறைய எழுதும்! ஆனால் ஒரு வேண்டுகோள். உம்முடைய எந்தக் கதையில் வரும் எந்தக் கதாநாயகியும் இருபத்தி ஐந்து ரூபாய்க்கு மேல் போகாத புடவையாகக் கட்டிக் கொள்ளட்டும். பதினைந்து ரூபாய்ப் புடவை அவளுக்கு மிகப் பொருத்தமாக இருந்தது என்று நாலு இடத்தில் வருணியும்!

ஐயா! கிருஹஸ்தர்கள் சார்பிலே உம்மை வேண்டிக் கொள்ளுகிறேன். உம் கதையில் எந்த நல்ல விஷயம் இருந்தாலும் எடுத்துக் கொள்ளாத பெண்மணிகள் இந்தப் புடவை விஷயத்தை மாத்திரம் வேத வாக்காக எடுத்துக் கொண்டு விடுகிறார்களே!

நான் ஏன் உம்மை நிறுத்தினேன் என்று புரிகிறதா, ஐயா! மறந்து விடாதேயும்!

ஒரு வேளை மறந்து போனீரோ.....? நான் எப்படித் தெரியுமா வஞ்சம் தீர்த்துக் கொள்வேன்?.....கேளும்!

நீர், உம்முடைய 'ஐடியல்' அழகுக் கதாநாயகி போன்ற ஒரு பெண்ணிடம், துணிக் கடையில் பேசிக் கொண்டிருந்ததாகவும், அவள் கையில் ஒரு 'ஆப்பிள் கிரீன்' ஒன்சைட் பார்டர் காஞ்சீபுரம் பட்டுப் புடவை வாங்கிக் கொடுத்ததாகவும், அதை நான் பார்த்ததாகவும் என் மனைவியிடம் ரகசியமாகச் சொல்வேன். அது உம் மனைவியின் காதில் எட்ட எத்தனை நேரம் பிடிக்கும்?

அப்புறம் உருப்படியாக ஒரு கதை எழுத அவள் விடுவாளா? நீர் வாங்கிக் கொடுக்கும் நூல்சேலையைத்தான் கையால் தொடுவாளா?

நான் வருகிறேன், ஐயா! நினைவிருக்கட்டும்!

# தமிழ் கூறும் நல்லுலகம்

லட்சுமணபுரியில் கணபதி பூஜை திரு கிருஷ்ண ராவ் அவர்கள் தலைமையில் விமரிசையாக நடைபெற்றது.

ஸ்ரீமான் நாராயண கனபாடிகள், கணபதி ஸஹஸ்ரநாமம், பூஜைகள் எல்லாவற்றையும் சிறப்பாக நடத்தினர். சுவாமி வித்தியாநந்த ஸரஸ்வதி விநாயகப் பெருமானைப் பற்றிச் சொற்பொழிவாற்றினர்.

* * *

ஜார்க்காபூர் பாரதி நூல் நிலையம் சென்ற செப்டம்பர் 10, 11 தேதிகளில் பாரதி தினத்தையும் நிலையத்தின் இரண்டாவது ஆண்டு விழாவையும் கொண்டாடியது. முதல் நாள் விழாவுக்கு அஸன்ஸால் ஸப்-டிவிஷனல் அதிகாரி திரு கே. வி. வெராமகிருஷ்ணன் தலைமை வகித்தார். பெண்கள் பாரதி பாடல்களைக் கோஷ்டி கானமாக இசைத்தனர். நூல்நிலைய உறுப்பினர்கள் தாங்களே எழுதிய 'பண்ணையார் உயில்' என்ற நாடகத்தை வெகு திறமையாக நடித்தனர்.

இரண்டாவது நாள் கலை நிகழ்ச்சிக்கு எஃகு ஆலை ஜெனரல் மானேஜர் திரு பி. வி. நியோகி தலைமை வகித்தார். ஜாம்ஷெட்பூர் குமாரி ஸரஸ்வதி சாமி பக்க வாத்தியங்களுடன் நடன விருந்து அளித்தார். பாரதி விழா நிகழ்ச்சியில் கலந்து கொண்டவர்களுக்கெல்லாம் ஸ்ரீமதி நியோகி பரிசுகள் வழங்கினர்.

ஓவியர் சிங்காரவேலு இந்திய நடனங்களை விழா மண்டபத்தின் சுவர்களில் அழகாகச் சித்திரித்திருந்தார்.

நூல் நிலையத்தினர் கவியரசர் பாரதி விழாவை யொட்டிச் சுவையான மலரொன்றும் வெளியிட்டிருக்கின்றனர்.

* * *

மதுரை இலக்கியக் கழகத்தினர் செப்டம்பர் 15, 16, 17 தேதிகளில் பாரதி விழாவை மிகச் சிறப்பாகக் கொண்டாடினர். விழாவின் இரண்டாம் நாள் நிகழ்ச்சிகளில் திருவாளர்கள் அகிலனும், திருலோக சீதாராம் அவர்களும் கலந்து கொண்டனர்.

பழ வியாபாரிப் பொம்மை: அய்யோவ்! நீங்க இரண்டு பேரும் கடைப் பக்கத்தில் மூக்கைப் பிடித்துக்கொண்டு எப்ப பார்த்தாலும் உட்கார்ந்திருக்கிங்க. ஒருத்தரும் வாங்க வர மாட்டேங்கறாங்க.

ஃ ஃ ஃ

பூனைப் பொம்மை (எலிப் பொம்மையைப் பார்த்து): எனக்கு மாத்திரம் உயிர் வந்தால் உன்னை இத்தனை நேரம் டிபன் பண்ணியிருப்பேன்!

எலி பொம்மை: அதுதான் முடியாதுன்னேன். உனக்கு உயிர் வந்தால் நான் பொம்மையாகவே இருந்துடுவேன்!

ஃ ஃ ஃ

பால்காரர் பொம்மையைப் பார்த்து: ''ஏனய்யா கண் தெரியல்லையா உனக்கு? மாட்டண்டை உட்காருகிறதா நெனச்சுண்டு குமாரண்டை உட்கார்ந்து விட்டாயே!''

ஃ ஃ ஃ

கை கட்டி வாய் பொத்தி நிற்கும் பக்த ஆஞ்சநேயர்: ''யார் கொணு வச்சார்களோ தெரியவில்லே. இன்னேக்குப் பட்டாபிஷேகத்திலே இருக்க வேண்டிய என்னைச் செட்டியார் கடை வாசலிலே கொண்டு வந்து நிறுத்திட்டா.''

ஃ ஃ ஃ

''ஏண்டாப்பா! உன் துணிகளை யெல்லாம் எங்கே வெளுக்கப் போடறே. நல்ல வெளுப்பா கட்டிண்டிருக்கையே!''

ஃ ஃ

''ராத்திரி இவ்வளவு நேரம் கழித்து வீட்டுக்குப் போறியே, உன் மனைவி கோபிக்க மாட்டாளா?...''

''எனக்குக் கல்யாணமே ஆகல்லியே!''

''பின்னே ஏன் நேரங் கழித்து வீட்டுக்குப் போறே?''

ஃ ஃ ஃ

எந்த எழுத்தாளனும், அல்லது பிரசுர கர்த்தாவும், தனது வெளியீட்டுக்கு உரிய மதிப்பு வெளியாக வேண்டும்..விற்பனை அமோகமா யிருக்க வேண்டும் என்பதற்காக வெளியீடு வெளி வந்ததுமே பிரபல பத்திரிகை ஆசிரியர்களுக்கு மதிப்புரைக்காகவென்று இலவசப் பிரதி அனுப்புவது உண்டு. ஆனால் ஜார்ஜ் பெர்னட்ஷா மட்டும் இதற்கு விதிவிலக்கு. தாம் எழுதும் புத்தகம் ஒரு பிரதிகூட இலவசப்பிரதியாக விநியோகம் ஆவது பிடிக்காது. ஆனாலும் அவரது வெளி யீடுகளுக்கு, ஏகப்பட்ட கிராக்கி இருப்பதும் உண்மைதான். இலவசப் பிரதி பெற முடியாத காரணத்தினால், பத்திரிகாசிரியர் ஒருவருக்கு ஷாவின் மீது கோபம் ஏற்பட்டது. ஷாவை மட்டம் தட்டுவதாக நினைத்துக் கொண்டு தமது பத்திரிகையின் விமரிசனப் பகுதியில் ஜெர்க் கண்டபடி விமரிசனம் எழுதியிருந்தார்.

''.....ஷா வெளியிட்டுள்ள இந்த நவீனம் பத்து வருடங்களுக்கு முன்பு வந்திருந்தால் பொருத்தமா யிருக்கும்; பயனுள்ளதாயுமிருக்கும்....''

மேற்படி விமரிசனத்தைப் படித்துவிட்டு பத்திரிகாசிரியருக்கு பெர்னார்ட்ஷா எழுதியிருந்த பதில் இது.

''....புதிதாக வெளிவரும் வெளியீடு எதையும் தாங்கள் படிப்பதில்லை என்பது எனக்கும் தெரிந்ததுதான். தாங்கள் விமரிசனம் செய்திருக்கும் எனது வெளியீடும் பத்து வருடங்களுக்கு முன்பு, முதன் முதலாக நான் எழுதியதன்....ஆனால் சமீபத்திய இருபத்தைந்தாவது பதிப்பாகும்.''

ஃ ஃ ஃ

பேராசிரியர் ''கல்கி''யுடன் நடன நிகழ்ச்சி ஒன்றுக்குச் சென்றிருந்தபோது நடைபெற்றது இது. நடனமாடும் குழந்தையின் தகப்பனார் எங்கள் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டதுடன் இராமல் தொண தொணத்துக் கொண்டே யிருந்தார். அலாரிப்பு....முதல் தில்லானாவரை, ஒவ்வொரு நிகழ்ச்சியின் போதும், ''இது...ரிடம் கற்றுக் கொண்டது. ஏன் என்றால் இந்த அயிட்டம் இவரிடம் தான் பிரமாதமாயிருக்கும்'' என்று அளவுக்கு மீறிய உற்சாகத்துடன் சொல்லிக்கொண்டேயிருந்தார். பொறுமையை இழந்த ''கல்கி'' வீட்டுக்குக் கிளம்ப ஆரம்பித்தார்.

''ஏன் ஸார் கிளம்பிட்டீங்க.. இன்னமே வரப்போகிற அயிட்டம்தான் பிரமாதமாயிருக்கும். சில நாட்களுக்கு முன்னால் தான்...வரிடம் விசேஷமாகக் கற்றுக் கொண்டது'' என்றார் நடனமாடும் குழந்தையின் தகப்பனார்.

''இங்கு வந்த பிறகு நானும் கற்றுக் கொண்டது இது'' என்று சொல்லிக் கொண்டே நடந்தார் பேராசிரியர் கல்கி.



# ஜலதோஷமா? இருமலா?

உடனே சிறிதளவு

# அமிர்தாஞ்சனம்

தடவுங்கள்

அது விரைவில்
குணமளிக்கும்

ஜலதோஷம், ஜுரம், வாயுப் பிடிப்பு போன்ற உபாதைகளிலிருந்து உங்கள் குடும்பத்தை காப்பாற்றுங்கள். ஒவ்வொரு முறையும் சிறிதளவே அமிர்தாஞ்சனம் உபயோகிக்க வேண்டியிருப்பதால் ஒரு பாட்டில் நெடுநாள் வரை நீடிக்கிறது.

அமிர்தாஞ்சனம் லிமிடெட், மதராஸ்-4
பம்பாய்-1, கல்கத்தா-1, புதுடெல்லி-1



உங்கள்
டார்ச்சில்
எஸ்ட்ரெலா
பொருத்தி
இரவில்







எஸ்ட்ரெலா

ப்ளாஷ் லைட் பாட்டரிகள்
டார்ச்கள் மற்றும் பல்புகள்



# வானவாமலைத் தோத்தாத்ரிநாதர்

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

ஆடுங் கடை மணி
ஐவேல் அசதி அணிவரைமேல்
நீடும் கயற் கண்ணியார்
தந்த ஆசை நிகழ்ந்ததால்
கோடும், குளமும், குளத்தருகே
நிற்கும் குன்றுகளும்
காடும் செடியும் அவளாகத்
தோன்றுது என் கண்களுக்கே.

என்று ஒரு பாட்டு. ஔவையார் பாடிய அசதிக் கோவையில் உள்ள பாட்டு. ஔவைப் பிராட்டி ஒருநாள் மதிய வேளையில் ஒரு குக்கிராமத்துக்குப் போகிறார். அவருக்கு நல்ல பசி. அப்போது வயல்வெளிகளில் வேலை செய்து கொண்டிருந்த ஒரு குடியானவன் ஔவைக்குக் குடிக்கக் கூழ் கொடுக்கிறான். ஔவை அவன் பெயர் என்ன என்று கேட்கிறாள். 'அசத்துப் போச்சே' என்கிறான். ஊர்ப் பெயர் கேட்கிறாள்; தன் பெயரையே மறந்து போனவன் ஊர்ப் பெயரை ஞாபகத்தில் வைத்திருப்பானா? அதுவும் மறந்து போச்சு என்கிறான். ஊரில் ஏதாவது முக்கியமான காட்சி இருக்கிறதா என்கிறாள். தன் ஊருக்கு அடையாளமாக ஐந்து வேலமரங்கள் இருக்கின்றன என்கிறான். அதனால் 'ஐவேல் அசதி' என்று அவன் பெயரை உருவாக்கிக் கொண்டு ஒரு கோவையே பாடிவிடுகிறாள் ஔவை. பாடல் நல்ல காதல் துறையில் அமைந்த பாடல். இதே போல் நான்கு ஏரிகள் சூழ்ந்த ஒரு தலம். அங்கு ஒரு கோயில். அக்கோயிலில் இருப்பவர் தோத்தாத்திரி. வந்து வணங்குவார் பாவங்களையெல்லாம் கழுவித் துடைத்து முக்தி கொடுப்பவர். தோத் என்றாலே துடைப்பவர் என்றுதானே பொருள்! கோயில், குளம், குளக்கரை மரம் என்றெல்லாம் அமைந்து, காண்பார் நினைவில் எல்லாம் பக்தியை உண்டுபண்ணும் தலந்தான் அது. இத்தலத்தைப் பற்றிப் பின்னைப் பெருமாள் ஐயங்கார் நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதியில் பாடுகிறார்.

வானோர் முதலா
மரம் அளவா எப்பிறப்பும்
ஆனோர்க்கு அவதியிடல்
ஆகாதோ ?—தேனேயும்
பூவர மங்கை
புவிமங்கை நாயகனே !
சீவர மங்கை அரசே !

என்பது பாடல். வானோர் முதல் மரம் வரை எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்த மனிதனுக்குப் பிறப்பே இல்லாமல் முக்தியை அளித்தல் ஆகாதோ என்று கேட்டிருக்கிறார். அப்படி முக்தி அளிக்கவல்ல பதிதான் ஸ்ரீவரமங்கை என்றும் வானவாமலை என்றும் பாராட்டப்பெறும் நான்குநேரி. அங்குள்ள தோத்தாத்திரி நாதர் கோயிலுக்குத்தான் செல்கிறோம் நாம் இன்று.

ஸ்ரீவரமங்கை என்னும் இத்தலம் திருநெல்வேலிக்கு நேர் தெற்கே பத்தொன்பது மைல் தொலைவில் இருக்கிறது. திருநெல்வேலி நாகர்கோயில் பெருஞ்சாலை வழியாகத்தான் போக வேண்டும். கார் வசதியுடையவர்கள் காரிலேயே போகலாம். ஊருக்கு இரண்டு மைல் இருக்கும்போதே கோயில் கோபுரம் ஏரி எல்லாம் தெரியும். நான்கு ஏரிகள் அன்று இருந்து நான்குநேரி என்ற பெயரை ஊருக்குத் தேடித் தந்திருக்கிறது. ஆனால் இன்று கோயிலை அடுத்திருப்பது ஒரு பெரிய ஏரிதான். ஏரிக் கரையில் பெரிய மரங்கள் எல்லாம் நிற்கின்றன. அந்த மரங்களின் ஊடே நீண்டுயர்ந்த கோபுரத்தைத் தாங்கிக் கொண்டு கோயில் இருக்கும். ஆதியில் கோயிலின் கருவறையே குளத்துக்குள்தான் இருந்திருக்கிறது. இன்றும் குளத்தில் நீர் நிறைந்திருந்தால் கோயில் கருவறையைச் சுற்றி ஒன்றிரண்டு அடித் தண்ணீர் நிற்கும். ஆம், கோயில் குளம் மரம் எல்லாம் பரமபத நாதனை நினைவுபடுத்திக் கொண்டே நிற்கும். அங்கு. கோயில் வாயிலுக்குச் சென்றால் முதலில் பந்தல் மண்டபம் என்ற இடத்துக்கு வந்து சேருவோம். அதை ஒட்டிய உயர்ந்த மண்டபங்களிலேதான் தங்க ரதம், தங்கச் சப்பரம் எல்லாம் இருக்கின்றன.

செல்வாக்கு உள்ளவர்கள் என்றால் நிர்வாகிகள் கதவுகளைத் திறந்து தங்க ரதத்தை எல்லாம் காட்டுவார்கள். ஆனால் பங்குனி உத்திரத்துக்கு முந்திய நாள் அங்கு சென்றால் ஒருவரது தயவும் இல்லாமலேயே தங்க ரதம் தெரு வீதியில் உலா வருவதைக் காணலாம். இந்தப் பந்தல் மண்டபத்தின் வடபகுதியிலேதான் வானவாமலை மடம் இருக்கிறது. அம்மடத்தில் உள்ள ஜீயர் பிரசித்தி உடையவர்.



கோயில், குளம், மரம்

அந்த மகானையும் தரிசித்து விட்டுப் பிறகு வரலாம். கோபுர வாயிலைக் கடந்து கோயில் உள்ளேயே நுழையலாம். கோயில் வாயிலைக் கடந்ததும் நம் கண்முன் வருவது ஜெவந்தி மண்டபம். ஜெவந்தி நாயக்கர் என்றும், ஜெவந்தி ராஜா என்றும் அழைக்கப்பட்டவரால் கட்டிய மண்டபம் இது. நான்குநேரி தாலுகாவிலே ஜெவந்திபுரம் என்று ஓர் ஊரே இருக்கிறதே. சங்கரன் கோயிலிலும் ஜெவந்தி வாசல் என்று ஒரு வாசல் இருக்கிறதே. ஜெவந்தி நாயக்கர் என்பவர் பக்தியோடு நல்ல திருப்பணிகள் எல்லாம் செய்திருக்கிறார் என்று அறிகிறோம்.

உத்சவக் காலத்தில் இம்மண்டபத்தில் வைத்து உத்சவரை அலங்காரம்பண்ணி உலாச் செய்ய எழுந்தருளுவிப்பார்கள். இம் மண்டப முகப்பில் சாமரை ஏந்திய ஊர்வசி திலோத்தமை இருவரும் நிற்கிறார்கள். இவர்களை நாம் கருவறையிலுமே பார்க்கப் போகிறோம். இந்த மண்டபத்தைச் சுற்றி ஒரு பிராகாரம். மண்டபத் தின்வடபுறம்உள்ள அறைகளில்தான் வாகனங்கள் எல்லாம் வைத்துப் பாதுகாக்கப்பட்டிருக்கின்றன. இடப்புறம் இருப்பது வீரப்ப நாயக்கர் மண்டபம். இங்குள்ள தூண்களில் எல்லாம் நல்ல சிற்ப வடிவங்கள் உண்டு. ஒவ்வொரு தூணிலும் நான்கு ஐந்து வடிவங்களைச் செதுக்கியிருக்கிறான் சிற்பி. அவைகளில் சிறப்பானவை அனுமனை அணைத்து நிற்கும் ராமனது திருக்கோலமும் பீமனை எட்டிப் பிடிக்கும் புருஷா மிருகமும். இன்னும் வீரபத்திரன் முதலிய சிலைகளும் உண்டு. இந்த மண்டபத்தை அடுத்தே லட்சுமிநாராயணன், லட்சுமி வராகர், வேணுகோபாலன், தசாவதார சந்நிதிகள்எல்லாம் இருக்கின்றன. ஜெவந்தி மண்டபத்துக்குப் பின்னால் உள்ள கொடிமரத்தைக் கடந்தே உள் கோயிலுக்குச் செல்ல வேணும். ! இந்த மண்டபம்தான் குலசேகர மண்டபம். இங்குதான் வடக்கு நாச்சியார் தெற்கு நாச்சியார் சந்நிதிகள் எல்லாம் இருக்கின்றன. இங்கேயே மணவாள மாமுனி, உடையவர், கூரத்தாழ்வான், பிள்ளைலோகாச்சாரியர் சந்நிதிகள் எல்லாம் இருக்கின்றன. இன்னும் ஆழ்வார்களுக்கு என்று ஒரு தனி சந்நிதியும் உண்டு. நம்மாழ்வாரைத் தவிர எல்லா ஆழ்வார்களும் அங்கே இருக்கிறார்கள். இத்தலத்துக்கு நம்மாழ்வார் வந்து இங்குள்ள தெய்வ நாயகரை மங்களா சாஸனம் செய்திருக்கிறாரே. அப்படியிருக்க இவரை இங்கு காணோமே என்று கேட்கத் தோன்றும். நம்மாழ்வாரது வடிவம், உற்சவர் முன்பு வைத்திருக்கும் சடகோபத்திலே (சடாரியிலே) பொறிக்கப்பட்டு அவர் விசேஷ மரியாதையுடன் இருக்கிறார் என்பார்கள். அங்கே செல்லும்போது அவரைத் தரிசித்துக் கொள்ளலாம். இவ்வளவு இடமும் கடந்துதான் அர்த்த மண்டபத்துக்கு வர வேணும். அந்தமண்டபத்துக்கு வெளியே சந்நிதியை நோக்கிக் கூப்பிய கையராய் சந்நிதி கருடன் நிற்பார். கருவறையில் இருப்பவரோ தோத்தாத்திரி—பட்டாபிஷேகக் கோலத்தில் இருக்கிறார். ஸ்ரீதேவி, பூதேவி இருமருங்கும் இருப்ப, ஊர்வசியும் திலோத்தமையும் சாமரை வீசிக் கொண்டு நிற்பர். தங்க மயமான ஆதிசேடன் குடை பிடிக்க வைகுந்தத்தில் மகாவிஷ்ணு இருக்கும் கோலத்தில் காணலாம். பிருகு, மார்க்கண்டேயர், சந்திரசூரியர் எல்லாரும் இருப்பார்கள். வெளியே விஷ்வக்சேனர். ஆகப் பதினொரு பேர் ஏகாசனத்தில் இருக்கும் காட்சி கண்கொள்ளாக் காட்சியாகும். இத்திருக் கோலக் காட்சியை ஒரு கவிஞர் அழகாகப் பாடுகிறார்.

திருமலியும் வைகுந்தப் பெருநகரில்
இலங்கும் திருக்கோலம்
நிலத்தில் உள்ளார் திருஉறவேபணியச்

செல்வ நலம் அருளும் உயர்
செங்கமல மகளும் திருமருவு
பொறுமையுருச் சிறந்த நிலமகளும்

உருமலிய இருபாலும் உவந்தனர்
வீற்றிருப்ப உயர்வுறவே
உயர்ந்து பொருள் உணரமுயல் பிருகு

ஒப்புயர்வில் பெருந்தவத்து மார்க்கண்டன்
இருவர் உரிமையினால் இருபுறமும்
கரங்குவித்து நிலவக்

கருடனொடு சேனையர் கோன்
திரு ஆணைதெரியும் கருத்தினொடு
பணிந்து முனைமுறை உறவேஇருப்பக்

கனிவுளத்தோடு இருமருங்கும்
கவரி இரட்டினராய்க் கவின்மலியும்
ஊர்வசி திலோத்தமையர் அமைய

வரு கதிர்கொள் பரிதியொடு
திங்கள் எனும் இருவரையும் நினைந்து
நல்வணங்கி வாழ்த்தி அருகிருக்க
வார்த்தை எலாம் அடியவர்க்கு
அருளுவதே நினைந்தான் வானமலை
அரவணையின் வள்ளல் அடிபணிவாம்.

என்ற பாட்டுத்தான் எவ்வளவு விளக்கமாகக் கூறி விடுகிறது. இந்த மூலவருக்கு முன்னுள்ள அர்த்த மண்டபத்திலேதான் உபய நாச்சியார், ஸ்ரீ வரமங்கைத் தாயார், ஆண்டாள் முதலியோர் பக்கம் இருக்கத் தெய்வ நாயகன் என்னும் உற்சவமூர்த்தி பட்டாடை அணிந்து மகரகண்டி முதலிய அணிகளும் அணிந்து பெரியதொரு பீடத்தில் எழுந்தருளியிருக்கிறான். இந்தத் தெய்வ நாயகனையும், ஸ்ரீவரமங்கைத் தாயாரையும், நம்மாழ்வார் பத்துப் பாசுரங்களில் மங்களாசாஸனம் செய்திருக்கிறார்.

தெய்வ நாயகன் நாரணன்
திரிவிக்கிரமன் அடியிணைமிசை
கொய் கொள் பூம் பொழில்
சூழ் குருகூர்ச் சடகோபன்
செய்த ஆயிரத்துள் இவை
ஸ்ரீவரமங்கை மேய பத்துடன்
தகவில் பாடவல்லார்
வானோர்க்கு ஆரமுதே.

என்ற பாடலில் தெய்வநாயகன் ஸ்ரீவரமங்கை யெல்லாரும் இடம் பெறுகின்றனர்.

இக்கோயிலில் உள்ள மூலவர் எல்லாரும் அன்று இருந்த ஏரியின் நடுவில் இருந்த பெரியதொரு பாறையிலேயே வடிக்கப் பெற்றவர். இன்றும் இம்மூல மூர்த்தியைச் சுற்றியே ஒரு பிராகாரம். அங்குதான் முப்பத்திரண்டு முனிவர்கள் இருக்கிறார்கள். இவர்களில் ஒருவர் தான் ரோமரிஷி. வைகானஸ முனி, தும்பிக்கை ஆழ்வார் முதலியோர் எல்லாம் அங்கே இருக்கின்றனர். இத்தலத்தில் சிறப்பு இங்கு நடக்கும் எண்ணெய்க் காப்புத் திருமஞ்சனமே. ஆறுபடி நல்லெண்ணெயைச் சந்தன எண்ணெயுடன் சேர்த்துத் தினசரி காப்பு நடக்கிறது. விசேஷ காலங்களில் நூற்றிப் பன்னிரண்டு படி எண்ணெய்க் காப்பு நடக்கும். இப்படித் தோத்தாத்திரிநாதருக்குத் திருமஞ்சனம் செய்யப்பட்ட எண்ணெயை ஓரிடத்தில் சேகரித்துப் பின்னர் அதனை வீரப்ப நாயக்கன் மண்டபத்துக்குப் பின்னால் உள்ள எண்ணெய்க் கிணற்றில் விட்டு விடுகிறார்கள். இந்த எண்ணெய்க் கிணற்றில் நாம் கால் படி நல்லெண்ணெயை வாங்கி வாங்கி ஊற்றி விட்டு அக்கிணற்றிலிருந்து கால் படி எண்ணெய் எடுத்துக் கொள்ளலாம். கோயில் நிர்வாகிகள் எடுத்துத் தருவார்கள். இந்த எண்ணெய் தீராத சரும வியாதியான குஷ்டம் முதலியவைகளை யெல்லாம் தீர்க்கிறது என்பது நம்பிக்கை. பாட்டில் பாட்டிலாக இந்த எண்ணெய் வடநாட்டுப் பக்தர்களுக்குச் செல்கிறது. இந்த எண்ணெயின் மகிமையை அகஸ்தியரே அவருடைய வைத்தியமுறையில் குறித்திருக்கிறார். பிரபல டாக்டர்களும் இந்த எண்ணெயின் மகிமையை உணர்ந்து இதை எடுத்துச் சென்றிருக்கிறார்கள் என்பர். ஆதலால் இத்தலத்துக்குச் செல்லும்போது நீங்கள் ஒரு பாட்டில் எண்ணெய் எடுத்து வர மறக்காதீர்கள்.

இன்னும் இக்கோயிலில் உள்ள ராமர் சந்நிதி, கண்ணன் சந்நிதி, சக்கரத் தாழ்வார் இடங்களுக்கும் சென்று கண்டு தரிசித்துத் திரும்பலாம். இத்தலம் வானமாமலை என்று அழைக்கப்படுவதின் காரணம், பாண்டிய மன்னன் ஒருவன் வானவன் மாதேவி என்ற சேர குலமங்கையை மணந்து வானவன் என்ற பட்டத்தையே ஏற்றிருக்கிறான். இந்தப் பாண்டிய மன்னனே முதன் முதலில் இக்கோயிலைக் கட்டியிருக்க வேணும். வரமங்கை நாச்சியார் கோயில் கொண்டிருப்பதன் காரணமாக, வரமங்கல நாயகர் என்ற பெயர் பெற்றிருக்கிறது. அந்தப் பெயரையே நம்மாழ்வாரும் தம் பாசுரங்களில் கையாண்டிருக்கிறார். பாண்டியர்களால் கட்டப்பட்ட இக்கோயில் பின்னர் நாயக்க மன்னர்களால் விரிவடைந்திருக்கிறது. இன்றும் சுற்றுத் தூண்கள் தாங்கும் நீண்ட பிராகாரங்கள் இக்கோயிலின் பெரும் பகுதி நாயக்கர் திருப்பணியே என்பதை நினைவுறுத்தும். புஷ்பாஞ்சாமி சன்னியாசி என்பவர் இங்கிருந்து பல திருப்பணிகளைச் செய்தார் என்பதும் வரலாறு. அப்படித் திருப்பணி செய்த அன்பர்களுக்கு நாமும் அஞ்சலி செய்து விட்டு மேலே நடக்கலாம்.

## கண்ணபுரம் விண்ணகரம்

தஞ்சை ஜில்லா நன்னிலம் தாலுகாவிலுள்ள திருக்கண்ணபுரம் பழம் பெருமை வாய்ந்த வைணவப்பதி. அங்கு வதியும் சௌரிராஜப் பெருமானை ஆழ்வாராதிகள் பாடிப் பரவியிருக்கின்றனர். யாவருக்கும் செல்வம் தரும் இந்தத் திருமகள் மணவாளனுக்குச் செல்வமளிக்கும் வாய்ப்பு இப்போது அடியார்களுக்குக் கிடைத்திருக்கிறது. பெருமானின் திருக்கோயிலை ஒரு லட்சம் ரூபாய் செலவில் புதுப்பிக்கத் திட்டமிட்டுள்ளனர் தேவஸ்தானத்தார். செலவில் அறுபது சதவிகிதத்தைத் தாங்களே ஏற்றுக் கொண்டு மீதி ரூ. 40,000-த்தைப் பக்தர்கள் பங்குக்கு விட்டிருக்கிறார்கள். கைங்கரியத் தொகை அனுப்பி வைக்க வேண்டிய முகவரி: மானேஜிங் டிரஸ்டி, சௌரிராஜப் பெருமான் தேவஸ்தானம், திருக்கண்ணபுரம், நன்னிலம் தாலுகா, தஞ்சை ஜில்லா.




சென்னை, ஆந்திரா, கேரளம் மற்றும் மைசூர் ராஜ்யங்களுக்கு பிரதம ஏஜெண்டுகள்

ஜெனரல் எலக்டிரிக் கம்பெனி ஆப் இந்தியா பிரைவேட் லிமிடெட், சென்னை-2

கிளைகள்: கோயமுத்தூர், பெங்களூர் மற்றும் செகந்திராபாத்

---

## நான்கு மருந்துகள் அடங்கியுள்ள

# 'அனஸின்'

| வலிகளைப் போக்குகிறது | நிம்மதி அளிக்கிறது | சோர்வை விரட்டுகிறது | ஜுரத்தைத் தணிக்கிறது |
|---|---|---|---|

ஒரு டாக்டர் குறித்துக் கொடுக்கும் பாதுகாப்பான மருந்துக்கு ஒப்பாக, விஞ்ஞான முறையில் நான்கு மருந்துகள் அனஸினில் ஒன்றுகலந்து இருப்பதால், வலிகளினின்று அதிவிரைவில் பூரண நிவாரணம் அளிக்கிறது. (2) படபடத்தைப் போக்கி நிம்மதி அளிக்கிறது—இதனுடன் இனிப்பாறிய பலனை நீங்கள் பெறுவீர்கள். (3) சோர்வை விரட்டுகிறது. (4) ஜுரத்தைத் தணிக்கிறது.

நான்கு மருந்துகள் அடங்கியுள்ள 'அனஸின்' வலியினின்று நிவாரணம்பெற மிக சிறந்தது. வீட்டிலெப்பொழுதும் அனஸின் வைத்திருங்கள்.

★ செல்லோபேன் தாள்களில் சுகாதார முறையில் பாக் செய்யப்பட்டு கிடைக்கிறது ஒரு வில்லை 18 காசுதான்.






**அனஸின் மிகச் சிறந்தது**

*Registered User:* GEOFFREY MANNERS & CO. LIMITED

TAM.Z. 40

# கங்கணம்

**அநுத்தமா**

குஸுமா மொட்டை மாடிக்கு வந்து நின்றாள். அப்பொழுதுதான் மழை ஓய்ந்திருந்தது. தரையில் ஈரமும், அதில் ஒட்டிக் கிடந்த இலைப் பழுப்புகளும் காலில் பட்டவுடன் அவள் தன் முகத்தைச் சுளுக்கிக் கொண்டாள்.

தெருவில் ஒரே நிசப்தம். தூர மலை மேல் கோவிலில் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. வட்ட வடிவமாக இருந்த அது, அச் சமயம் பார்ப்பதற்குப் பூர்ண சந்திரன் போல் காட்சி யளித்தது. பௌர்ணமி மதி இறங்கி வந்து கோபுர கலசத்தின்மீது அமர்ந்திருப்பது போல் அந்தக் காட்சி மிகவும் ரம்மியமாக இருந்தது.

குஸுமா ஒரு விநாடி அதை நோக்கினாள். பிறகு வேகமாக உள்ளே வந்து விட்டாள். வெளியே இருந்த சிலுசிலுப்பும், உள்ளே வந்ததும் ஏற்பட்ட கதகதப்புக்கும் அவள் உடல் வேதனை யுற்றது. அருகில் இருந்த குளிக்கும் அறைக்குச் சென்று, குழாயைத் திறந்து, அவள் தன் முகத்தில் பச்சைத் தண்ணீரை வாரிவாரி அடித்துக்கொண்டாள்.

“குஸுமா, தூங்கவில்லையா? விடியற் காலம் எழுந்து விட வேண்டுமே? ஏன், தூக்கம் வரவில்லையா?” என்று அடுத்த அறையிலிருந்து குமுதா குரல் கொடுத்தாள்.

குஸுமாவுக்குத் தன் நாத்தனாரின் குரல் இதமாகப் படவில்லை. தன் வேதனையை அதிகரிப்பது போலிருந்தது அது. அதனால் அவள் பதிலே சொல்லவில்லை.

“குஸுமா!” என்று விடாமல் அழைத்தாள் குமுதா.

“என்ன?”

“வா, படுத்துக்கொள். இன்னும் இரண்டு மணி நேரம் கூடத் தூங்க முடியாது. ஊரிலே எல்லோரும் பட்டாசு வெடிக்கத் தொடங்கி விடுவார்கள். அதிலும் பக்கத்து வீட்டு மாப்பிள்ளை இருக்கிறாரே! ஆட்டம் பாமும் மற்றொன்றும்.. இந்த வட்டாரத்திலே யாரும் தூங்க முடியாது.”

குஸுமா கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்துச் சுளித்தாள். அவள் வயிற்றிலிருந்து கோபமோ, துக்கமோ, இரண்டுமே கலந்ததோ - ஏதோ ஓர் உணர்ச்சி திரண்டு மேலுக்கு வந்தது.

“குஸுமா!”

“இதோ வந்து விட்டேன்” என்று பதில் சொன்ன குஸுமா, தன் எரிச்சலைக் குரலில் காட்டாமல் இருக்க முயன்றாள்.

“வா, படுத்துக்கொள். இந்தச் சமயத்தில் தூங்காமல் இருக்கக் கூடாது. ஜீரணம் ஆகாது” என்றாள் நாத்தனார் இதமாக.

குஸுமா விளக்குகளை அணைத்து விட்டுக் கட்டிலில் தொப்பென்று விழுந்தாள்.

“மெதுவாக! மெதுவாக!” என்று எச்சரித்தாள் குமுதா.

குஸுமாவுக்குத் துக்கம் பீறிட்டது. ‘இந்தச் சமயமாமே! எந்தச் சமயம்? எந்த மனுஷன் இதமாக அருகில் இருந்து மனசைச் சந்தோஷப்படுத்த வேண்டுமோ. அவர் ஒரே அடியாக, நிர்த்தாட்சிண்யமாக, கஷ்டப் படுத்தி விட்டுப் போய் விட்டாரே?’

குஸுமாவின் கணவன் குமார் கோபித்துக் கொண்டு போய் விட்டான். குஸுமா பதினாயிரம் தடவை அன்றைய நிகழ்ச்சியை அசை போட்டாகி விட்டது. திருப்தியான பதில் ஒன்றும் வரவில்லை.

குமுதா எழுந்து விளக்கைப் போட்டுப் பார்த்தாள். குஸுமா தன் இடது கையைக் கண்கள் மீது போட்டிருந்தாள். குமுதா விளக்கை அணைத்து விட்டுத் திரும்பிப் படுத்து விட்டாள். சற்றைக்கெல்லாம் இலேசான குறட்டையொலி அவள் உறக்கத்தை வெளிப் படுத்தியது.

குஸுமா தன் சிந்தனைகளை மீண்டும் தேய்ந்த அந்தப் பாதையிலேயே முடுக்கி விட்டாள். ஒன்றை ஒன்றை தொடர்ந்து வார்த்தை மீது வார்த்தை போட்டு-என்ன சண்டை அன்றைக்கு! இன்னமும் குஸுமாவுக்கு மனசுக்குள் ஒரு தீர்மானம் ஏற்பட வில்லை. யார் மீது குற்றம்? அந்தக் கேள்வி திரும்பத் திரும்ப ஒலித்ததே தவிர, பதில் மட்டும் திருப்திகரமாகக் கிடைக்க வில்லை. இந்தத் தீபாவளியைக் குறித்துத் தான் சண்டை. இன்று தீபாவளியன்று வீடு சூன்யமாக, மனம் கனமாக....

பதினைந்து நாட்களுக்கு முன்பே அலுவலகத்தில் உள்ளவர்கள் யாவரும் ‘தீபாவளி பிக்னிக்’ என்று கொண்டாடப் போவதாகத் திட்டமிட்டிருந்தனர். அன்று மகாபலிபுரம் போய் இரவு வரையில் இருந்துவிட்டு வேடிக்கையாகச் சாப்பாடு சாப்பிட்டு, பட்டாசு கொளுத்திக் காலத்தைப் போக்கி விட்டு வீடு திரும்ப வேண்டும் என்று ஏற்பாடு. இதற்கெல்லாம் குமார்தான் முதன்மையில் நிற்பவன்.

அவன் இன்று வீட்டுக்கு வரும்போது வெகு உற்சாகத்தோடு வந்தான். குஸுமா காப்பி கொண்டு கொடுப்பதற்குள் அவளைப் பன்னிரண்டு தடவை அழைத்து விட்டான்.

“என்ன, இன்றைக்கு இவ்வளவு குதூகலம் டாக்டருக்கு? யாரையாவது கொன்று விட்டீர்களோ?” என்று நையாண்டி செய்தாள் குஸுமா.

“குஸுமா! உனக்குத்தான் தெரியுமே, இந்த வருஷம் தீபாவளி பார்ட்டி கானிமரா ஹோட்டலில் கிடையாது. உனக்குத்தான் அந்தக் கூத்தெல்லாம் பிடிக்கவில்லையே — எங்கள் கம்பெனியில் வெள்ளைக்காரர்களும் குறைந்து விட்டார்கள். இந்த வருஷம் என் ஏற்பாடு....”

“என்ன ஏற்பாடு?”

“தீபாவளி பார்ட்டியைப் பிக்னிக்காக மாற்றி மகாபலிபுரம் போக வேண்டியதைப் பற்றித் தான் சொல்கிறேன். சமுத்திரக் கரையிலேயே மத்தாப்பு கொளுத்த வேண்டியது. எப்படி?”

குஸுமா ஆசையோடு முழுதும் கேட்டாள். காலை எட்டு மணிக்குக் கிளம்புவதாம். கையில் ஆகாராதிகள் எடுத்துக் கொள்ள வேண்டுமாம். அங்கு மாலை வரை இருந்து விட்டு இருட்டின பிறகு திரும்புவதாம். எல்லாம் நன்றாகத்தான் இருந்தன.

''குஸுமா! சாப்பாடு எப்படித் தெரியுமா? ஒவ்வொரு வீட்டிலிருந்து ஒவ்வொன்று சமைத்துக் கொண்டு போவதாக ஏற்பாடு. கல்யாணமாகாதவர்கள் வெற்றிலை, பழங்கள் எல்லாம்....''

சாய்ந்து உல்லாசமாகக் கேட்டுக் கொண்டிருந்த குஸுமா நிமிர்ந்து உட்கார்ந்தாள். ''என்ன சொன்னீர்கள்?'' என்று கேட்டாள் அவள், நம்பாதவள் போல்.

''ஏன்? ஒவ்வொருத்தர் ஒவ்வொன்று கொண்டு போக வேண்டியது....''

''வேறு வேலையே இல்லை! முப்பது பேர்கள் போவதாம். கூடப் பதினைந்து குழந்தைகளாவது இருக்கும். இவர்கள் சுற்றி விட்டு வரும் வேளையில் உங்களையும் என்னையும் கூடத் தின்றுவிடுவார்கள் அந்த ராட்சஸப் பசிக்கு.''

''பின்னே பிக்னிக்கில் பட்டினி இருக்க வேண்டும் என்பது உன் கொள்கையா?''

''நாமே சமைத்தால் தான் சாப்பாடாகுமா?'' என்று கேட்டாள்.

''நாமே ஆசையோடு செய்வது போல் இருக்குமா? அவியல் நம்முடையது என்று சொல்லி விட்டேன்'' என்றான் குமார்.

''பதர்பேணி சொல்ல மறந்து விட்டீர்களாக்கும்!''

''ஸ்ரீவத்ஸன் வீட்டில் இட்டிலியும் வெங்காய சாம்பாரும், கிருஷ்ணன் குட்டி தேங்காய் வறுவல், மாதவராவ் பிஸிபேளா-ஹூளி, அன்னு....''

''...போதும்!'' - குஸுமா காதை இரு கைகளாலும் பொத்திக் கொண்டாள். ஆத்திரத்தில் அவள் உடலே துடித்தது. ''போதும் உங்கள் பிக்னிக்! அதற்குக் கிளம்புகிற வரையில் அடுப்படியில் சாக வேண்டும். அங்கு போயும், சோற்றுப் பானையில் கையைத் துழாவ வேண்டும். வீட்டுக்கு வந்ததும்..''

''என்ன கவியுள்ளம் பார்! தீபாவளிப் பண்டிகை கூட அநாகரிகம் தான். தூங்க வேண்டிய வேளையில் விழித்துக் கொண்டு, எண்ணெயை வழிய விட்டுக் கொண்டு....''

''நீங்கள் சிரிக்கிறீர்கள்! எனக்கு அழுகை தான் வருகிறது.''

''நீ எப்பொழுது அழாமல் சமைத்து வாழ்ந்தாயாம்! ஒரு பெண்பிள்ளையின் கையில் கரண்டி செங்கோலாகத் திகழலாம்.''

''போதுமே உபன்யாசம்! உங்கள் அம்மா கரண்டிச் செங்கோலைப் பற்றி நிறைய சொல்லியிருக்கிறாள். காது புளித்துவிட்டது. உங்களுக்கு வயிற்றில் இருக்கிற கவனம் மற்றதில் இருந்தால்...''

''அதாவது?''

''அதாவது சாப்பாடே கதி என்று இருப்பவர்கள் படித்த பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ளக் கூடாது. உங்கள் ஸ்ரீவத்ஸன் மனைவி மாதிரி ஒரு கற்சட்டி தேய்ப்பவளைக் கைப்பிடித்திருக்க வேண்டும்.''

''கற்சட்டியினால் ஸ்ரீவத்ஸன் ஒன்றும் கஷ்டப்பட்டதாகத் தெரியவில்லை.''

''நீங்கள் என் படிப்பினால் மிகவும் கஷ்டப்பட்டு விட்டீர்கள் அல்லவா?''

''நீ தானே சொல்கிறாய்?''

''பின்னே சமையலறையில் பாசி தேய்த்து, பாத்திரம் கழுவி, புளி கரைப்பதற்குப் படிப்பு எதற்கு?''

''பெரிய படிப்புப் படித்து விட்டாய், போ!'' ஏளனமாகச் சிரித்தான் குமார். ''யாராவது இந்த உலகத்தில் பி. ஏ. படித்திருக்கிறார்களோ? தன் வீட்டைக் கவனிப்பதும், சமைப்பதும் ஒரு பெண்ணின் தனிச் சலுகை. அந்த அருமை உனக்குத்தெரியுமா?''

குஸுமா எழுந்து போய் விட்டாள். அவள் நல்ல அழகி. குமாரும் அவள் அழகைப் பார்த்துத்தான் அவளைக் கல்யாணம் செய்து கொண்டான்.

''உங்களுக்கெல்லாம் ஆண்டவன் பணத்தைக் கொடுத்திருக்கிறானே. அதை நினைத்தால்தான்....''

''உனக்கு ஆண்டவன் படிப்பைக் கொடுத்திருக்கிறானே, அதை நினைத்தால்?''

''என் புத்தி நன்றாகத்தான் இருக்கிறது'' என்றாள் குஸுமா.

''எங்கள் பணமும் சரியாகத்தான் செலவாகிறது!''

''உங்கள் அத்தை பேத்தி நிர்மலாவை மணந்துகொள்வதாக இருந்ததாமே? அவளை விட்டு என்னைத் தேர்ந்தெடுத்ததால் அவர்களுக்கு மனஸ்தாபம் கூடவாம். நிர்மலா நன்றாகச் சமைப்பாள், வீடு மெழுகுவாள், இலுப்பச் சட்டி தேய்ப்பாள்....''



''...மொத்தத்தில் வீட்டுக்கு விளக்காக இருப்பாள்'' என்று முடித்தான் குமார்.

''அப்படியானால், உங்கள் அபிப்பிராயத்தில் நான் ஒரு....''

''...ஆபரணம். கொண்டையிலே வைத்துக் கொள்கிற தெட்டிப்பூ என்றைக்காவது ஆதாரமாக இருந்திருக்கிறதா? வாழைப்பூ ஆதாரம்.''

''ஆடை அமைவதும், அகமுடையாள் அமைவதும் அதிருஷ்டம் என்பார்கள். எவ்வளவு உண்மை அது! வசதி இருந்தும் அநுபவிக்கத் தெரியாத ஏழைகள் மத்தியில்...பணமிருந்தும் பிரயோஜனமற்ற கஞ்சர்கள் நடுவில்...''

''பணம் இருந்தால் வீடு நிறைய ஆட்களை நிரப்பி நமக்கென்று உள்ள ஒரு சுதந்திரத்தைக் குறைத்துக் கொண்டால்தானாகும்! எங்களுக்கு அதில் நம்பிக்கை கிடையாது. வீட்டுக்குள் வீட்டினர் தாம் இருக்க வேண்டும். தெரியுமா?''

''ஹா,ஹா,ஹா, ஹா!''

''இப்படி ஒரு விதி எனக்குக் காத்திருந்ததே? நிர்மலாவைச் செய்து கொண்டிருந்தால்...?''

''நானும்தான் சற்று யோசிக்காமல் போய் விட்டேன். ஆட்கள் நிறைய இருப்பார்கள். மேற்பார்வை பார்த்தால் போதும். அறிவு விருத்திக்குள்ள காரியங்களில் ஈடுபடலாம் என்று நினைத்தேன். இப்படித் தோசைக்கு அரைத்து, குழம்பு வைக்க....''

''உனக்கு நான் வசதிகளை செய்து தரவில்லையா? பித்தானை அழுத்தினால் எதுவும் நடக்கிறது.''

''விதி! விதி!'' என்று குஸுமா முணுமுணுத்தாள்.

''அதேதான், என் தலைவிதி!''— குமார்.

அன்றிரவு அவர்கள் இருவரும் சாப்பிடவில்லை. குமார் படுக்கப் போய் விட்டான். குஸுமா வெளியில் மொட்டை மாடியில் உலவிக் கொண்டிருந்தாள்.

இரவு பத்து அடித்தது. குமார் வெளியே வந்தான். '' குளிர் காற்றில் உலவுவானேன்? உள்ளே வா'' என்றான் கண்டிப்பாக.

குஸுமா பதிலே சொல்லவில்லை. அவள். தோட்டத்தைப் பார்த்துக்கொண்டு நின்றாள்.

''குஸுமா, உள்ளே வா!'' என்றான் குமார், மீண்டும்.

குஸுமா அவனை நிமிர்ந்து பாராமலே உள்ளே வந்தாள். குமார் மொட்டை மாடிப் பக்கத்துக் கதவைத் தாளிட்டுக் கொண்டு தன் படுக்கைக்குப் போனான். குஸுமா அங்கு போகாமல் பெட்டிகளைத் திறப்பதும் மூடுவதுமாகச் சத்தம் செய்வது கேட்டது.

குமார் மீண்டும் எழுந்து வந்தான். குஸுமா அப்பொழுதுதான் ஒரு பெட்டியை மூடிப் பூட்டிக் கொண்டிருந்தாள்.

''எதற்கு இந்த ஏற்பாடெல்லாம்?'' என்று கேட்டான் குமார்.

''நான் போகிறேன்.''

''எங்கே?''

''..........''

''எங்கே போகப் போகிறாய்?'' என்று மீண்டும் கேட்டான் குமார்.

''இனி என்னால் ஒரு விநாடி கூட இந்த வீட்டில் இருக்க முடியாது'' என்றாள் குஸுமா கசப்பான குரலில்.

''உன் நிலையை நினைத்துப் பார்த்தாயா?''

''அதற்கு வருந்தாத நாளில்லை.''

''இந்த யோசனை மூன்று மாதங்களுக்குமுன் இருந்திருக்க வேண்டும்'' என்று ஏளனமாய்ப் பேசினான் குமார்.

''அநாகரிகமாகப் பேசுமளவு நான் கீழே இறங்க நினைக்கவில்லை.''

''ஹா, ஹா! நாகரிகமா? பண்பா!'' காரமாக வெடித்தது கணவன் குரல்.

குஸுமா பெட்டியைத் தூக்கிக் கொண்டு தெருப்பக்கம் கிளம்பினாள். குமார் அவசரம் அவசரமாக ஒரு சட்டையை மாட்டிக் கொண்டு வெளியே வந்தான். அவன் கண்கள் இரண்டும் கனல் கோளிகள்போல் மின்னின. ''இரு. டாக்ஸி கொண்டு வருகிறேன். பெட்டியைத் தூக்கிக் கொண்டு நடக்க வேண்டாம்'' என்று கூறிக்கொண்டே அவன் தன் மோட்டார் சைக்கிளை எடுத்தான்.

''நன்றி!'' என்றாள் குஸுமா.

பெட்டியை எடுத்து வைத்துக் கொண்டு அவள்வாசற் பக்கத்து அறையில் அமர்ந்தாள். முதலில் சோபாவில் இருந்தவள், பிறகு வெறுப்புடன் பெட்டியின் மீதே அமர்ந்து கொண்டாள். அவள் உடலெல்லாம் கைப்பு



# அறிமுகப்படுத்துகிறோம்...

## பாமாலிவ்
## லவண்டர் டால்க்

பெருமிதமும்... வசீகரமும் தரும் பிரசித்தி பெற்ற லவண்டரின் நறுமணம் இப்பொழுது உங்களுக்குப் பிடித்தமான பாமாலிவ் டால்க் மூலம் கிடைக்கிறது. இந்த மிக நுண்ணிய நேர்த்தியான டால்க் உங்கள் சருமத்தில் பரவி நாள்முழுவதும் நீடித்திருந்து, உங்களைப் புத்துணர்ச்சியுடனும் பரிமள அழகுடனும் வைத்திருக்கும் நேர்த்தியை நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்.

**லவண்டர்**
பெருமிதமும்...வசீகரமும்
தரும் மணமுடையது

PALMOLIVE
Lavender
TALC POWDER

**டீ லக்ஸ்**
17 மயக்கும் ஸென்டு
களின் அற்புதக் கலவை

PALMOLIVE
Talcum Powder
DE LUXE

# பாமாலிவ்

டால்கம் பவுடர்

PT.G.5 T.

# ரோசெக்ஸ்




## கரப்பான் பூச்சிகளைக் கொல்லுகிறது





ஓர் டாடா–பைசன் தயாரிப்பு.

---

நீங்கள் உறங்கும்போதே

## ஆஸ்தமா சளிகரைகிறது

மூச்சுத் திணறல், இருமல், சிரமப்பட்டு மூச்சு விடுதல், சுவாசம் தடைப்படுதல், ஆஸ்த்மா, ப்ராங்கைடீஸ், ஜலதோஷம், குளிர் சுரம் முதலிய உபாதைகளால் அவதிப்படும் பல்லாயிரக்கணக்கான பேர்கள் இப்பொழுது மெண்டாகோ (Mendaco) சாப்பிட்டு நிவாரணம் அடையலாம். இந்த நவீன விஞ்ஞான அமெரிக்க மருந்து இரத்தத்தின் மூலமாக சுவாசப் பைகள் சுவாசக் குழாய்கள் மற்றும் மூக்குக்குச் சென்று அங்கு கெட்டியாக அடர்ந்துள்ள சளியை இளக்கிக் கரைக்கிறது. பின்னர் நீங்கள் இருமல் மற்றும் சிரமப்பட்டு மூச்சு விடுதல் இல்லாமல் சுகமாகச் சுவாசித்துக் குழந்தைபோல் தூங்கலாம். பூரண திருப்தி உங்களுக்கு அது நிச்சயமாக அளிக்கும்.

## எக்ஸிமா சொறி

உங்கள் சருமத்தில் சுமார் 5 கோடி மெல்லிய துவாரங்களும் மடிப்புகளும் உள்ளன. கிருமிகள் அவைகளில் மறைந்திருந்து, தாங்கமுடியாத அரிப்பு, வெடிப்பு, மேலாகப் பரவும் படை, தோல் உரிதல், எரிச்சல், பருக்கள், படர்தாமரை காலில் அரிப்பு முதலிய உபாதைகளை உண்டு பண்ணுகின்றன. சாதாரண சிகிச்சைகள் தற்காலிகமான நிவாரணம் அளிக்கும். ஏனெனில், அதன் மூலம் உபாதைகளுக்கு மூலகாரணமான கிருமிகள் அழிவு இல்லை. விஞ்ஞான முறையில் தயாரித்த இந்த மருந்து, நிக்ஸோடர்ம் (Nixoderm) துரிதமாக இந்தக் கிருமிகளைக் கொன்று விடுகிறது. மற்றும் உங்கள் சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் வசீகரமாகவும் இருக்கச் செய்கிறது. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடர்ம் (Nixoderm) வாங்குங்கள். சரும உபாதைகளின் மூலகாரணமான கிருமிகளை நிக்ஸோடர்ம் நிச்சயமாக அழிக்குமென்ற பூரண நம்பிக்கையுடன் வாங்குங்கள்.

''என்னால் நாட்டியமாட முடியவில்லை. உன்னாலும் இனி ஆட முடியாது. இதை ஆட்டிப் பார்க்கலாமே?''

இருவரும் எப்படிச் சிரித்தார்கள் அன்று!

குஸுமாவுக்குத் தலை சுற்றியது. 'அப்படி ஆசையாகப் பேசினவர் தானே நேற்று 'டாக்ஸி கொண்டு வருகிறேன்' என்று கூறி விட்டுப் போனார். 'அசடு மாதிரி பேசாதே. உள்ளே வா. நமக்குள் உறவு விட்டு விடுமா?' என்று ஒரு பேச்சு சொன்னாரா?

குஸுமா! சிந்தனையின் மத்தியில் நின்றாள். 'உறவு விட்டு விடாதா?' விட்டுவிட வேண்டும் என்று தானே இரவு கிளம்பினாள் அவள்? நேற்று சச்சரவை அசை போடப் போட, குஸுமாவுக்குத் தப்பு தன்பேரில்தான் என்று தோன்ற ஆரம்பித்தது.

அவள் எண்ணங்களைக் கிழித்துக் கொண்டு டெலிபோன் மணி அடித்தது. இடிக்கும் இதயத்துடன் போனாள் குஸுமா.

''குஸுமா, உடம்பு எப்படி இருக்கிறது? அவியல் செய்யாமல் ஏமாற்றி விட்டாயே? என்ன கணவரடி, அம்மா, உனக்கு - அப்படித் தாங்குகிறாரே!'' என்றாள் ஒரு தோழி.

''அவர் சொன்னாரா?'' என்று கேட்டாள் குஸுமா, மெதுவாக.

''பெண்ணாகப் பிறந்தால் அழகாக இருக்க வேண்டும், பாரேன். உன் கணவரை மயக்கி விட்டிருக்கிறாய் நீ'' என்று வளவளவென்று பேசினாள் அந்தத் தோழி.

குஸுமாவுக்கு எரிச்சலாக இருந்தது. ஆயினும் பொறுமையாக டெலிபோனைப் பிடித்துக் கொண்டு நின்றாள். குமார் இருக்கும் இடத்தைத் தெரிந்து கொள்ளலாமே என்கிற யோசனையில் மெதுவாக, ஜாக்கிரதையாகப் பேசினாள். ''அவர் அங்கே இருக்கிறாரா?''

''குமாரா? அவர் எப்பொழுதோ பறந்து விட்டாரே? இந்தப் புது மணம் மாறாமல் இருக்க என்ன மருந்து வைக்கிறாய்?''

குஸுமா கஷ்டப்பட்டுத் தன்னைச் சமாளித்துக்கொண்டாள். புது மணமாம்! அது போய் எக்காலம் ஆயிற்று? இனி ஒருவர் முகத்தில் ஒருவர் விழிக்கக் கூட....

குஸுமாவுக்குத் தலை வலிக்க ஆரம்பித்து விட்டது. பிளாஸ்கில் கணவனுக்காக வைத்திருந்த காப்பியைக் கொட்டித் தலைவலி மாத்திரையுடன் குடித்தாள் அவள். பிறகு முன் பக்க ஹாலில் சோபாவிலேயே படுத்துக் கொண்டாள். படுக்கையறைக்குப் போகவே அவளுக்குச் சங்கடமாக இருந்தது.

வாசற்கதவை யாரோ தயங்கித் தயங்கித் தட்டுவது கேட்டது. 'இது அவராகத்தான் இருக்க வேண்டும். அனாவசியமாகக் கோபத்தில் போய் விட்டோமே என்று வருந்தித் திரும்புவது இந்தத் தட்டலிலேயே தெரிகிறதே?' கதவைத் திறந்தாள் குஸுமா.

''அம்மா டாக்டரய்யா இருக்கிறாரா? குழந்தை அவர் வராமல் ஒன்றும் சாப்பிட மாட்டேன் என்கிறதுங்க'' என்றான் ஒருவன்.

''நான் வருகிறேன்'' என்றாள் குஸுமா.

வந்த மனிதன் குமாரின் கம்பெனியில் வேலை செய்பவன். அவனுக்கு ஒரு பெண் இருந்தாள். ஐந்து வயதில் எங்கோ பயந்து கொண்டது தான் நிஜம். பிரமை பிடித்துக் கிடந்தாள். குமாரும் குஸுமாவும் அதைப் பற்றி எவ்வளவு பேசியிருக்கிறார்கள்! குஸுமா மனத் தத்துவத்தில் தான் பட்டம் பெற்றிருந்தாள். அவர்கள் இருவரும் பேசிச் சிகிச்சை செய்ததில் அந்தப் பெண் எவ்வளவோ குணமாகி விட்டாள்.

குஸுமா கதவைப் பூட்டிக் கொண்டு கிளம்பினாள். 'குமார் நம் படிப்பை ஆதரிக்கவில்லையா? 'குஸுமா, நீ மேல் நாடுகளுக்குப் போய் இன்னமும் ஆராய்ச்சி செய்வதானால் போ' என்று கூடச் சொன்னாரே? சரி, சரி, அந்த நினைவு இப்பொழுது எதற்கு? நிர்தாட்சிண்யமாக இரவில் தனியாக விட்டு விட்டுப் போனவருக்கு நல்ல எண்ணங்கள் வேறு இருக்கின்றனவோ?.. ஆனால் நேற்று நம்மிடம் நல்ல எண்ணங்கள் இருந்தனவா? சச்சரவை ஆரம்பித்தது யார்? நீட்டி நடத்தியது யார்? எல்லாம் நாம் தானே?' அதை ஒப்புக்கொள்ள அவளுக்குச் சிரமமாக இருந்தது.

குஸுமா அந்தப்பெண்ணிடம் பேசி அதைச் சாப்பிடவைத்தாள். அதில் கொஞ்சம் பொழுது போயிற்று. பிறகு வீடு திரும்பினாள்.

''இந்தத் தீபாவளிக்கு வெளிச்சம் தந்த மகராஜி நீங்க'' என்று வாயார வாழ்த்தினாள் அப் பெண்ணின் தாயார்.

குஸுமா ஒன்றும் பதில் சொல்லாமல் தன் வீடு வந்தாள். மீண்டும் பேசாமல் சோபாவில் அமர்ந்து கொண்டாள். வெய்யில் ஏறிக் கொண்டே வந்தது. களைப்பு தட்டவும், பழ ரசம் குடிக்கலாம் என்று எழுந்தாள். மீண்டும் உட்கார்ந்து விட்டாள். தினமும் காலை வேளைகளில் அவள் சமையல் அறையில் வேலையாக இருக்கும்போது குமார்தான் பழ ரசத்தைப் பிழிந்து அவளுக்கும் தந்து தானும் சாப்பிடுவது வழக்கம்.

'பெண் புத்தியே இப்படித்தான். என்ன சபலம் வேண்டி யிருக்கிறது! ஆறு மாத காலத்துக்குள் ஒரு மனிதனிடம் இவ்வளவு ஒன்ற வேண்டாம்! ஆமாம், இதை ஒத்துக் கொள்வதில் தவறு என்ன இருக்கிறது? அவர் எங்கே போனாரோ, தெரியவில்லை. சௌக்கியமாக இருக்கிறார். அது போதுமே!'

கதவு தட்டுவது கேட்டது. குஸுமா சென்று கதவை மெதுவாகத் திறந்தாள். அவள் நாத்தனார் குமுதா கையில் கட்டுடன் நின்று கொண்டிருந்தாள். ''வாருங்கள் அக்கா!'' என்று அழைத்தாள் குஸுமா.

''குமார் எங்கே?'' என்று எடுத்த எடுப்பில் கேட்டாள் குமுதா.

''வெளியே போயிருக்கிறார்.''

''கையில் அடிபட்டுக் கொண்டு விட்டேன். உள்ளங்கையில் கனல் பட்டு விட்டது. அவனிடம் காட்டலாம் என்று வந்தேன்.''

''உள்ளே வாருங்கள்'' என்றாள் குஸுமா.

அவளிடம் அவள் அண்ணனுக்கும் தனக்குமிடையே நேர்ந்ததைச் சொல்லி விடலாம் என்று தீர்மானித்தாள் குஸுமா. அப்பொழுதாவது தன் மனப்பாரம் குறைந்து விடும் என்கிற நம்பிக்கை அவளுக்கு.

''குமார் எப்பொழுது வருவான்?...வந்து விடுவான். அவனுக்குத் தான் தீபாவளி என்றால் மிகவும் முக்கியம் ஆயிற்றே? நீங்கள் இன்றைக்கு மகாபலிபுரம் போகப் போகிறீர்களா?'' என்னென்னவோ பேசினாள்

குமுதா. குஸுமா தள்ளிப் போட்டுக் கொண்டே வந்தாள் தன் விஷயத்தை.

"குஸுமா, முகம் வாடிக் கிடக்கிறதே?"

"உடம்பு சரியாக இல்லை, அக்கா!"

"அடாடா, இன்றைக்கென்று என் கையிலும் அடி பட்டுக் கொண்டு கிடக்கிறேனே? பரவாயில்லை. இடக் கையால் முடிந்ததைச் செய்கிறேன். முந்திரிப் பருப்பு கேக் செய்யப் போகிறாயா? குமார் பீற்றிக் கொள்கிறான். என் வீட்டுக்கும் சேர்த்துச் செய்து விடு" என்றாள் குமுதா.

குஸுமா மென்று விழுங்கினாள். அவளுக்குப் பேசக்கூடத் தோன்றவில்லை. ஏதாவது வேலையாவது செய்வோம் என்று அவள் தன் நாத்தியின் அபிப்பிராயப்படி சமையலறையில் புகுந்தாள். குமுதா வாயும் ஓயவில்லை. குஸுமா பேசாமல் பட்சணங்கள் செய்து வைத்தாள். குமுதா வீட்டை அலங்கரித்தாள்; கோலம் போட்டாள். மாலை நேரமும் வந்தது. குமுதா நிம்மதியாகத் தன் வேலைகளைப் பார்த்துக் கொண்டிருந்தாள். "குமார் இன்னும் வரவில்லையே?" என்று அவள் கேட்கவேயில்லை. குஸுமாவுக்கு இது அதிசயமாயிருந்தது. ஆயினும், தானும் ஒன்றும் கூற முன்வரவில்லை.

"குழந்தைகள் என்ன செய்கின்றனவோ? சாயங்காலச் சமையலுக்குள் வந்து விடுகிறேன் என்று சொல்லி விட்டு வந்தேன்" என்றாள் குமுதா, ஒருதரம்.

"நீங்கள் வேண்டுமானால் போங்களேன் அக்கா, அவர் வந்தால் அங்கு வரச் சொல்கிறேன்" என்றாள் குஸுமா.

"குமார் எங்கே போயிருக்கப் போகிறான்? மகாபலிபுரம் போயிருப்பான். அவன் வர வேண்டும். என் கைக்கட்டு அவிழ வேண்டும். பிறகுதான் நான் போகலாம்."

"ஏன் அக்கா, நீங்களும் அத்திம்பேரும் சண்டை போடுவது உண்டா?" என்று சம்பந்தமில்லாமல் கேட்டாள் குஸுமா.

"சண்டையில்லாத நெருக்க உறவு ஏது?"

குஸுமா தன் படுக்கையில் போய்ப் படுத்துக்கொண்டாள். முன் பக்கம் யாரோ பேசுவதெல்லாம்கேட்டும் அவள் எழுந்திருக்கவில்லை.

குமுதா என்னவோ செய்து கொண்டிருந்தாள். பிறகு அவளும் படுத்துக் கொண்டு விட்டாள். குஸுமா எழுந்து மொட்டை மாடிக்குப் போனாள்.

"குஸுமா, படுத்துக் கொள். சீக்கிரம் எழுந்து எண்ணெய் தேய்த்துக் கொள்ள வேண்டும்" என்றாள் குமுதா.

குஸுமா! படுக்கையில் வந்து விழுந்தாள். எங்கோ மணி இரண்டு அடித்தது. மோட்டார் சைக்கிள் சத்தம் தனியாகக் கேட்டது. குஸுமாவும் குமுதாவும் வாரிச் சுருட்டிக் கொண்டு தெருப் பக்கம் ஓடினார்கள்.

குமார் வந்து நின்றான். குஸுமா அழுது விட வேண்டும் என்று நினைத்தாள். அழுகை வரவில்லை. குமார் வாசற் கதவைச் சாத்தி விட்டு, உள்ளே வந்து அமர்ந்தான்.

"அக்கா கையில் அடிபட்டு விட்டதாம்" என்றாள் குஸுமா, ஏதாவது பேச வேண்டுமே என்று.

"உம்" என்றான் குமார்.

"எங்கே போயிருந்தீர்கள்?" வார்த்தை வெடித்தது மனைவியிடமிருந்து,

"ஏன்?" என்றான் குமார்.

"உஷ்! என் கைக்கட்டை அவிழ்த்து விடு" என்றாள் குமுதா, சிரித்தபடியே.

"மகாபலிபுரம் நன்றாக இருந்ததா?" என்று கேட்டாள் குஸுமா.

"குமுதா, மகாபலிபுரத்துக்கு ஜுரமா என்ன?" என்று கேட்டான் குமார்.

"ஆமாம், கற்சட்டியில் கஷாயம் வைத்துக் கொடு" என்றாள் குமுதா.

"கற்சட்டியில் ஆரோக்கியம் இருக்கிறது" என்றான் குமார்.

குஸுமா பொறுமை இழந்தாள். "அக்கா மூடி மூடி விளையாடுவானேன்? அவருக்கும் எனக்கும் பலத்த சண்டை, நேற்று. டாக்ஸி கூப்பிடப் போனார் அவர்" என்றாள் குஸுமா.

குமுதா தன் அண்ணனைப் பார்த்துக் கண் சிமிட்டிச் சிரித்தாள். "இந்தா, குமார். உன் பெண்டாட்டியைக் காவல் காக்கிறேன் என்று கங்கணம் கட்டிக் கொண்டேன். அவளை உன்னிடம் ஒப்படைத்து விட்டேன். இனி உன் பாடு, அவள் பாடு. என்னை என் வீட்டில் கொண்டு போய் விடு" என்றாள் குமுதா.

குஸுமா ஒன்றும் புரியாமல் அண்ணனையும் தங்கையையும் மாறி மாறி நோக்கினாள். குமார் தன்மனைவியைப் பார்த்துச் சிரித்தான்.

"குஸுமா! எப்பொழுது இரண்டு பேரும் கல்யாணத்தில் கங்கணம் கட்டிக் கொண்டோமோ, அப்பொழுதே வசமாக மாட்டிக் கொண்டு விட்டோம். சீக்கிரத்தில் விடுபட முடியுமா?" என்று கேட்டான் குமார். அந்தக் கேள்வி குஸுமாவின் மனத்தில் தேனைப் பாய்ச்சியது.

"அவனுக்குத் தெரியாது. அவர்கள் மனத்தத்துவ புத்தகத்தில் இந்த அத்தியாயம் இல்லை" என்றாள் குமுதா.

குஸுமாவுக்கு ஏனோ கோபம் வரவில்லை. அவள் ஒன்றுமே சொல்லவில்லை. தரையையே பார்த்தாள்.

"இதில் அவமானப்பட என்ன இருக்கிறது, குஸுமா? உடம்பு தளர்ந்தால் கோபம் வருகிறதுதான். குமார் பத்தடி கூடப் போயிருக்க மாட்டான். அவன் கோபம் தணிந்துவிட்டது. என்னிடம் வந்து விஷயத்தைச் சொல்லி என்னை இங்கு அனுப்பி விட்டான்."

"உங்கள் கையில் அடிபடவில்லையா?" என்று கேட்டாள் குஸுமா.

"கையில் அடியொன்றுமில்லை, நீ அதைக் கவனித்தாயாக்கும்! பகலெல்லாம் இடக் கையினாலா இவ்வளவு அழகாகக் கோலம் போட்டேன்?"

குஸுமா கோலங்களைப் பார்த்தாள். தன் மனக் குழப்பம் எவ்வளவு இருந்தது என்று இப்பொழுது தான் அவளுக்குப் புரிந்தது. அவள் மெல்லச் சிரித்தாள். "இருவர் மனம் இணங்க எவ்வளவு கஷ்டம்!" என்றாள்.

"இருவரும் ஓரளவு விட்டுத்தான் கொடுக்க வேண்டும். ஊருக்குப் போகிறேன் என்றால் வண்டி ஏற்பாடு பண்ணுவார்களாக்கும்!" என்றாள் குமுதா.

குஸுமா குமாரைப் பார்த்தாள். இருவருக்கு மிடையிலிருந்து பெரிய இருள் நீங்கி ஒளி வட்டம் ஒன்று தோன்றியது போலும். இருவரும்தெளிவாகச் சிரித்துக் கொண்டனர்.

# நீங்கள்
# ஆஸ்துமா-வினால்
# அவஸ்தைப்பட்டால்

## இதை அவசியம் படியுங்கள்

இபஸோன் மாத்திரைகள் இந்தியாவிலே திரும்பவும் கிடைக்கின்றன. ஆஸ்துமா, ப்ராங்கைடிஸ், ப்ராங்கைடிஸினால் ஏற்படும் ஜலதோஷம், மார்புச் சளி, நேற காய்ச்சல், மற்றும் இது சம்பந்தப்பட்ட நோய்களினால் அவஸ்தைப்படுகிறவர்களுக்கு இபஸோன் மிகவும் உதவியளிக்கிறது. இபஸோன் எளிதில் உட்கொள்ளக்கூடியது. பயமின்றி உபயோகிக்கலாம். உடனடியாகச் சமனமூட்டி, நிச்சய பலனளிக்கிறது.

இபஸோன் தயாரிப்பில் சேர்க்கப்பட்டுள்ள வைத்திய முறையின் அம்சங்களின் இயல்புகள் சுருக்கமாக கீழே குறிப்பிடப்பட்டுள்ளன:

1. சுவாசக் குழாய்களின் தசைநார்களுக்கு ஏற்படும் வலிப்புக்கு சமனமூட்ட ஒரு சக்தி வாய்ந்த தன்மை இபஸோனுக்கு உண்டு. சுவாசாசயங்களில் மூச்சு எளிதில் செல்லவும், வெளியில் வரவும் இது உதவி செய்கிறது. அது மாத்திரமல்ல; ஆஸ்துமாவினால் ஏற்படும் உக்கிரத்திற்கு ஆசுவாசமளிக்கிறது.
2. சுவாசக் குழாய்களிலும் மற்றும் மார்பு உறுப்புகளிலும் உள்ள கபத்தை இபஸோன் மிருதுவாக்கி, திரவமாக இருமலில் எளிதாக வெளியே தள்ளிவிடுகிறது.
3. சுவாசாசயத்திலுள்ள இரத்தக் குழாய்களில் ஏற்படும் அடைப்பிற்கு இபஸோன் சமனமூட்டுகிறது.
4. இபஸோன் இருதயத்தின் கஷ்டங்களைக் குறைத்து, அதிகம் வேலை செய்யக் கூடிய அளவுக்கு சக்தியை அளிக்க உதவி செய்கிறது.
5. இபஸோன் ஆஸ்துமாவினால் நிச்சயமாக ஏற்படும் உக்கிரத்தைக் குறைத்து, ஏக்கத்தை நிவர்த்தி செய்து, மிருதுவாக நரம்புகளுக்கு சமனமளிக்கிறது. அது மட்டுமல்ல; ப்ராங்கைடிஸினால் ஏற்படும் அகோரமான இருமலைக்கூட சரிசெய்து விடுகிறது.

ஆஸ்துமா வெகு சீக்கிரம் உங்களைப் பீடிக்கிறது. ஆஸ்துமாவினால் நீங்கள் பீடிக்கப்படுவீர்கள் என சிறிய சந்தேகம் வந்தவுடன் ஒரு இபஸோன் மாத்திரையை உட்கொண்டு, அதிசீக்கிரத்திலே நிச்சயமாக நிவாரணமடையுங்கள்.

இபஸோனின் அரிய தன்மைகள், ஆஸ்துமாவினால் அவஸ்தைப்பட்டு இதை உபயோகித்து குணமடைந்தவர்களாலும், அதை சிபார்சு செய்யும் டாக்டர்களாலும் நிரூபிக்கப்பட்டுள்ளன.

வழக்கத்தை காட்டிவிடும் மருந்துகள் எதுவும் இபஸோனில் சேர்க்கப்படவில்லை.

இபஸோன் 15, 45, 100 மாத்திரைகள் கொண்ட வசதியான பாக்கட்டுகளில் எல்லா மருந்து கடைகளிலும் கிடைக்கின்றன.




# EPHAZONE

இபஸோன் தயாரித்து, விநியோகிப்பவர்கள்:

ஜே. எல். மோரிஸன், சன் அன்டு ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட்.

பம்பாய் – கல்கத்தா – மதராஸ் – டில்லி.




## புலவர் வாழ்க்கை

அருந்தமிழில் அரிய இலக்கியங்கள் பலவற்றை இயற்றித் தந்து தமிழ் மொழிக்குத் தனிப்பெருமை தேடித் தந்த புலவர்களின் வரலாறுகள் பெரும்பாலும் கிடைத்தற்கு அரியனவாகவே நெடுங்காலமாக இருந்து வந்திருக்கின்றன. பிற்காலத்துப் புலவர்கள் பலர் அந்தக் குறை தோன்று வண்ணம் மேற்கூறிய வரலாறுகளை இயன்ற மட்டும் தொகுத்து உரைக்கலாயினர். புறநானூற்றில் உள்ள பாடல்களில் காணப்படும் குறிப்புக்களைக் கொண்டு ஒருவாறு நிகழ்ச்சிகளைத் தொடர்புபடுத்தி அந்தப் பாடல்களைப் பாடிய ஆறு தமிழ்ப் புலவர்களின் வரலாறுகள் இந் நூலில் அடங்கியிருக்கின்றன.

எழுதியவர்: க. வே. நடராஜன்; பிரசுரம்: அமுதநிலையம் பிரைவேட் லிமிடெட், தேனாம்பேட்டை, சென்னை 18; விலை: ரூ. 1.

## இலக்கியத் தமிழ்

மருத இயல், முல்லை வளம், நெய்தல் நலம், மாலை யொழுக்கம் என்ற நால்வகைப் பிரிவுகளில் இந்த நூல் தமிழ் இலக்கியத்தின் வளத்தை அழகாக விளக்குகிறது. நற்றிணை, கலித்தொகை, அகநானூறு ஆகிய தொகை இலக்கியத் தமிழ் நூல்களிலிருந்து மேற்கூறிய நானு நிலங்களைப் பற்றிய பல பாடல்கள் இந் நூலில் இடம் பெற்றிருக்கின்றன.

சங்கநூற்பாடல்கள் பழந்தமிழ்ப் பாடல்களாதலால் படிப்பதற்கும் விளங்கிக் கொள்வதற்கும் தற்கால மாணவர்களுக்குச் சிறிது சிரமமாயிருக்கும். ஆனால் ஒவ்வொரு பாடலுக்கும் விளக்கம் விரிவாகவும் தெளிவாகவும் தரப்பட்டிருப்பதால் இந்த நூலைப் படிப்பவர்களுக்கு அந்தச் சிரமம் இராது. இந் நூலை இயற்றியவர் மலாயாப் பல்கலைக் கழக இந்திய மொழித் துறைத் தலைவராயிருந்த பேராசிரியர் முத்துஇராசாக் கண்ணனார் ஆவார். பிரசுரம்: வள்ளுவர் பண்ணை, 137, பிராட்வே, சென்னை—1; விலை ரூ. 4.

## இறப்பில்லா இன்பவாழ்வு

உடலற்ற அமரவாழ்வு பெறுவதற்கு உடலையே ஒரு சாதனமாக்கிக் கொள்ளலாமெனக் கண்டது நமது சமயம். உடம்பையும் உள்ளத்தையும் எவ்வகைகளில் பேணினால் இறப்பற்ற இன்பவாழ்வு பெறலாமென்பதை வடலூரர் வள்ளலாராகிய ஸ்ரீராமலிங்க சுவாமிகள் பல சமயங்களில் அழகாக எடுத்துச் சொல்லியிருக்கிறார். சிறந்த பக்தராகவும், கவிஞராகவும் மட்டுமே அவரை அறிந்த நாம், அவரது இந்த வசன உரைகளில் சமூகத்தினிடம் அவருக்கிருந்த அன்பையும், அருளையும், அக்கறையையும் காண முடிகிறது. "முத்தி அடைவதற்கும் இம்மானிட தேகமே தக்கதாயும், வேறு தேகத்தால் அடைவது அரிதாயும் இருப்பதால் எவ்விதத்திலாவது தேகம் நீடித்திருக்கும்படி பாதுகாத்துக் கொள்ள வேண்டும்" என்று கூறும் அவர்கள் மனிதன் எவ்விதம் வாழ்க்கை நடத்த வேண்டும் என்பதை நடைமுறைக்கு ஒத்த விதத்தில் தெளிவாகவும் விளக்கமாகவும் கூறியிருக்கிறார். காயத்தையே கோவிலாகக் கண்டு, யோகசாதனை புரிந்து மறுமைப் பயனடைய நம் முன்னோர் வகுத்துள்ள உபாயங்களைப் பற்றியும் கூறுகிறார். ஜீவகாருண்யத்தின் மாண்பையும் வலியுறுத்துகிறார். விஷயங்களில் கட்டுக்கோப்பு காணப்படாதது ஒன்றே குறைபாடு.

தொகுப்பாசிரியர்: சி. முத்துக்குமார சுவாமி, கிடைக்குமிடம்: 30 அப்பாவு பிள்ளை சந்து, சிதம்பரம். விலை: ரூ. 1—25.

## தெ. பொ. மீ. மணிவிழா மலர்

அண்மையில் பேராசிரியர் தெ. பொ. மீ. அவர்களுக்கு மணிவிழா நிகழ்ந்ததை ஒட்டி இந்த மலரைப் புத்தக உருவில் மிகச் சிறப்பாக வெளியிட்டுள்ளார்கள். தெ. பொ. மீ.யைப் பற்றிப் பேரறிஞர் பலர் எழுதிய கட்டுரைகளும், வாழ்த்துரைகளும் தவிர, சமயம், தத்துவம், மொழி வரலாறு, பல்கலை ஆகிய துறையைச் சேர்ந்த நல்ல கட்டுரைகளும் நிரம்பியுள்ளன. இம்மலரின் சில பகுதிகளைப் பல்கலைக் கழக மாணவர் பாடமாகப் படிக்கவும் பயன்படுத்தலாம். இவ்வளவு சிறப்பான மலரை உருவாக்கியகலைக்கதிர் நிறுவனத்தினரைத் தமிழகம் நன்றிகூறி வரவேற்கும்.

கலைக்கதிர் வெளியீடு. கிடைக்குமிடம்: கலைக்கதிர், கோவை. விலை: ரூ. 10.

## திருக்குறள்

திருப்பாதிரிப்புலியூர் வாணிவிலாச அச்சகத்தார் வெளியிட்டுள்ள திருக்குறள் பதிப்பு இது. தமிழ் வித்துவான் திரு மீனாட்சி சுந்தரம் பிள்ளை எழுதிய பதவுரை கருத்துக்களுடன் பதிப்பிக்கப் பட்டுள்ளது.

பதவுரையும் கருத்துக்களும், தெளிவாகவும், சுருக்கமாகவும் எழுதப்பட்டிருக்கின்றன. குறட்பாக்கள் சந்தி பிரித்து இயன்றவரை விளக்கமாக அச்சிடப்பட்டுள்ளன.

வெளியீடு: வாணிவிலாச புத்தக சாலை, 80, சுப்பராய செட்டி வீதி, திருப்பாதிரிப் புலியூர். விலை: ரூ. 4.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.

# பியர்ஸ் டால்கம்

## —அழகோடு பழகும் உறவு!




கொண்டாடுங்கள் பியர்ஸ் நறுமணத்தை—புத்தம் புதுமணம் அது, புதுமை கொண்டாடும் நறுமணம்! நெஞ்சுக்கு இன்ப நினைவே போல் கொஞ்சிப் பிரியாத வாசம்...உங்கள் நேசம் எவர்க்கும் உல்லாசம்! எந்நேரமும் புதுமை குன்றாத எழிலுக்கான டால்கம்: பியர்ஸ்! உங்கள் வனப்புக்குப் பாதுகாப்பான தூய, மென்குண கிளிசரின் சோப்பாகிய பியர்ஸ் சோப்பின் உற்பத்தியாளர்களால் தயாரிக்கப்படும் டால்கம்.

**பியர்ஸ்**-அழகுள்ள மாதர் வழிவழியாக
ஆண்டுவரும் அழகு சாதனச் செல்வம்!

2 சைஸ்களிலே வருகிறது:
பெரிய சைஸ், எகானமி சைஸ்.

PTP. 3 R-X52 TM லண்டனிலுள்ள ஏ. அண்ட் பியர்ஸ் சார்பாக இந்துஸ்தான் லீவர் லிமிடெடினால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது

